





# அவனுக்கு ஒவ்வொரு நாளும் இன்க்ரிமின்* கொடுங்கள்

## தீவிரமான பசியைத் தூண்டவும், படிப்படியாக எடையை அதிகரிக்கவும்

இன்க்ரிமின்* செரி பழத்தின் மணம் நிறைந்தது. l-லைசின் என்ற இன்றியமையாத பொருள் அடங்கியது. இந்தப் பொருள் உடல் நலத்திற்கு உகந்த பசியைத் தூண்டி, உணவின் முழுப்பயனையும் சிறந்த முறையில் பெற உடலுக்கு உதவுகிறது. இன்க்ரிமின்* சாப்பிட்டு வந்தால் உங்கள் குழந்தை வயிறாரச் சாப்பிடுவான். அவனுடைய எடையும் படிப்படியாக அதிகரிக்கும். ஒவ்வொரு நாளும் அவனுக்கு இன்க்ரிமின்* கொடுங்கள்- அவன் மனமாரச் சாப்பிடுவதையும் வளர்ச்சியடைவதையும் கண்டு மகிழுங்கள்!




இன்க்ரிமின்* வளரும் குழந்தைகளுக்கெனவே உண்டாக்கப்பட்ட ஒரு லெடர்லி தயாரிப்பு.

**இன்க்ரிமின்*... வளர்ச்சிக்கு மிகவும் சிறந்தது**

நாள் ஒன்றுக்கு:
இன்க்ரிமின்* ட்ராப்ஸ்: 10-20 துளிகள்.
இன்க்ரிமின்* ஸிரப்: ஒரு தேக்கரண்டி.

* ரிஜிஸ்டர்டு ட்ரேட் மார்க்

Lederle லெடர்லி டிவிஷன். ஸயனமிட் இந்தியா லிமிடெட் CYANAMID

CHCI-26 TAM

# கல்கி

## பொருளடக்கம்

பராபவ, மாசி, 28 ❊ மார்ச் 12



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

### நினைவுத் திரையில்....

அர்த்தநாரீசுவரரைப் பார்த்து, ''பாகத்தில் ஒருவன் வைத்தான்'' என்று பெருமையாகச் சூர்ப்பனகை சொல்லுவதாகக் கம்ப ராமாயணத்தில் வருகிறது. இது எனக்கு அன்று நினைவுக்கு வரவே சூர்ப்பனகை எவ்வளவு பெரிய பைத்தியக்காரியாக இருக்க வேண்டும் என்று எண்ணிக் கொண்டேன். இந்தத் தருணத்தில் என்னைச் சந்தித்த நண்பர், ''என்ன அசாத்திய சந்தோஷத்தோடு இருக்கிறீர்?'' என்றார்.

''நம்ம பாடு தேவலை'' என்றேன்.

''என்ன?'' என்றார்.

''நமக்கு வீடு வாசல் அலுத்துப் போய் எங்கேயாவது போக வேண்டுமானால் போக முடிகிறது. ஆனால் அர்த்தநாரீசுவரரைப் பாருங்கள், பார்வதி தேவிக்குத் தமது மேனியில் பாதியைக் கொடுத்துவிட்டு எங்கேயும் அவளை விட்டு விட்டுப் போக முடியாமல் திண்டாடுகிறார்'' என்றேன்.

[எஸ். வி. எஸ். எழுதிய ''வேலவருக்கு ஒரு விண்ணப்பம்'' என்ற கட்டுரையிலிருந்து.]

கல்கி, ஜூலை 20, 1947




இலங்கையில் 40 சதம் - தபால் செலவு தனி

தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 26 □ இதழ் 32



# அருளுக்கு அறுபது

இந்த சுக்கிலப் பிரதமையுடன் ஸ்ரீ காமகோடி ஆசாரியர்கள் பீடமேறி அறுபது ஆண்டுகள் நிறைகின்றன.

'ஜகத்குரு ஸ்ரீ காமகோடி பீடாதிபதி' என்றே அவர்களைச் சொல்கிறோம். இதில் 'ஜகத்குரு' என்பதும் 'காமகோடி பீடாதிபதி' என்பதும் ஒன்றோடொன்று பொருந்துவதிலேயே ஒரு சூட்சுமம் உண்டு. அத்வைதம் என்ற அநுபவம் எந்நாட்டவருக்கும், எம்மதத்தவருக்கும், எக்குலத்தவருக்கும் பொதுவானது என்பதால்தான் அத்வைத ஆசாரியர்களை 'ஜகத்குரு' என்று சொல்கிறோம். அத்வைதம் என்பதற்கு மறுபெயர் அன்பு. உலக முழுவதற்கும் எவ்விதக் கட்டுப்பாடும் இல்லாமல் அன்பைப் பொழிந்து வரும் ஆசாரியர்களை ஜகத்குரு என்பது மிகவும் பொருத்தம்தான்.

அன்பு ஒரு மிக நுண்ணிய பொருள். நம்மால் அதன் நுண்மையைக் கிரகிக்க இயலாது. அதனை ஸ்தூலமாகக் காட்டினால்தான் நம்மால் புரிந்து கொள்ள முடியும். ஆசாரியர்கள் தமது இதயம் நிறைந்த நுண்ணிய அன்பை ஸ்தூலமாக வெளிப்படுத்தும் போது காமகோடி பீடம் வழியில் வருகிறது. நம் பண்டைய ஆசாரங்களின் நிலைக்களனாகவே நடத்தப்பட வேண்டிய நிறுவனம் இந்த மடம். ஆதியில் எந்த வரைமுறையின்படி ஸ்ரீ சங்கரர் மடத்தை ஸ்தாபித்தாரோ அவற்றுக்கு உட்பட்டே இன்றும் இம்மடம் நடத்தப்பட்டால்தானே, அதற்கு 'சங்கராசாரிய மடம்' என்ற பெயர் பொருந்தும்?

ஒருபுறம் கட்டுப்பாடற்ற அத்வைத அன்பு அளித்த ஜகத்குரு பட்டம்; இன்னொரு புறம் வைதிக தரும சாஸ்திரக் கட்டுப்பாடுகளுக்கு உட்பட்ட காமகோடி பீடாதிபத்தியம் — இரண்டையும் இயல்பாக இணைக்கிற ரஸவாதத்தைத்தான் ஆசாரியர்கள் சரளமாகச் செய்து வருகிறார்கள். மடத்தின் கோட்பாடுகள் இடமளிக்கும் அளவுக்குத் தமது அன்பை ஸ்தூலமாக வழங்குகிறார்; எந்தக் கோட்பாட்டுக்கும் கட்டுப்படாத சூக்ஷ்மநிலையில் உலகனைத்துக்கும் அருள்பாலிக்கிறார். ஆசாரியர்கள் செய்த அற்புதங்களைப் பற்றியும் அவரது தியாகத்தைப் பற்றியும் எவ்வளவோ சொல்லுகிறார்கள். ஆனால் சாஸ்திரக் கரைக்குள் தமது அன்புக் கடலை அவர் கட்டுப்படுத்திக் கொண்டிருப்பதற் கொப்பான அற்புதமும் தியாகமும் எங்கும் காணவொண்ணாதது.

தமது செயல்கள் மடத்து விதிகளுக்கு உட்பட்டுள்ளனவா என்று கண்ணும் கருத்துமாக அவர் அனவரதமும் பரிசீலித்து வருவதில் அடக்கத்தின் முழுமையைப் பார்க்கிறோம். வாமனன் திரிவிக்கிரமனாகி விசுவத்தை வியாபித்ததுபோல், அடங்கி யிருந்தே அவர் உயர்வை எய்தி யிருப்பதால்தான் அவர் வகுக்கும் திட்டங்களும் அடக்கமாக இருந்தே அரும்பெரும் லட்சியங்களை முடிக்கின்றன. சிறு வித்து ஆலவிருட்சமாவது போன்ற அவரது பிடியரிசித் திட்டமொன்றே போதுமே!

உள்ளத்தில் உள்ள அன்பின் சக்தியாலேயே, எத்துணையோ பாகுபாடுகளுக்கிடையேயும் அவர் ஐக்கியத்தின் உருவாய் விளங்குகிறார். இது காரணமாகவே சகல மக்களும் அவரை எவ்வித பேதமுமின்றி வணங்குகிறார்கள். திருப்பாவை-திருவெம்பாவை மாநாட்டின் மூலம் அவர் புரிந்துள்ள சைவ — வைணவ ஐக்கியமும், வித்வத் சதஸ்களின் மூலம் வேதவிற்பன்னர்களையும் நாட்டுக் கலைஞர்களையும் அவர் ஒற்றுமைப்படுத்தியிருப்பதுமே அவரது ஆழ்ந்த அன்பின் ஐக்கிய சக்திக்குப் போதுமான சான்றுகள்.

அவரும், அவர் அலங்கரிக்கும் பீடமும் வாழ அம்பிகையைப் பிரார்த்திப்போம். அப்படிப் பிரார்த்திப்பது ஆஸ்திகமும், ஆசாரமும், அன்பும், அகில உலகுமே வாழப் பிரார்த்திப்பதாகும்.

# சுதந்திரக் கட்சிக்கு ஒரு வெற்றி

அரசியல் நிர்ணயச் சட்டம் மக்களுக்கு அளித்துள்ள அடிப்படை உரிமைகளைப் பாதுகாத்துத் தருவதில் உறுதியாக நிற்கும் சிறந்த நீதிபதிகளையும் உயர்நீதி மன்றத்தையும் பாரத மக்கள் பெற்றுள்ளனர். இதற்காகத் தங்களைத் தாங்களே பாரத மக்கள் வாழ்த்திக் கொள்ளலாம். அரசியல் சாஸனத்தில் மக்களுக்கு அளிக்கப்பட்ட ஜீவாதார உரிமைகளை மீறிச் செய்யப்படும் திருத்தங்கள்செல்லுபடியாகா என்று சுப்ரீம் கோர்ட் நீதிபதிகள் தீர்ப்பளித்து விட்டனர். இதன் மூலம் அவர்கள் பெரும்பான்மை பலம் காரணமாக ஆணவத்துடன் அரசியல் சாஸனத்தை நினைத்தபடியெல்லாம் மாற்றிச் சின்னபின்னப்படுத்தத் துணிந்த அரசியல் கட்சிக்குப் பாடம் கற்பித்திருக்கின்றனர்.

நீதிபதிகளின் தீர்ப்பு ஒருபுறமிருக்க, மக்களும்கூட அரசியல் சாஸனத்தில் இனி கை வைக்க முடியாத நிலைமைக்குக் காங்கிரஸின் பெரும்பான்மை பலத்தை வெகுவாகக் குறைத்து விட்டனர். சட்டத்தைத் திருத்துவதற்குத் தரப்பட்ட உரிமைக்குத் தவறான வியாக்கியானம் தந்து, தவறான வழியில் அந்த உரிமையை இனி பிரயோகிக்க இயலாது. இதற்குத் தேவையான அளவுக்குப் பெரும்பான்மையான பலம் லோகசபையில் இன்று காங்கிரஸுக்கு இல்லை.

ஸுப்ரீம் கோர்ட் நீதிபதிகளின் தீர்ப்புக்குப் பெருமதிப்பு அளித்துப் பின்வரும் கருத்தை ராஜாஜி கூறியுள்ளார்:

"அரசியல் நிர்ணயச் சட்டம் ஏற்கனவே பல தடவைகளில் சட்டத்தை மீறிய முறையில் திருத்தப்பட்டுள்ளதை நீதிபதிகள் மன்னித்து விட்டனர். இந்த மன்னிப்பு சட்டத்தைச் சரியாகப் புரிந்து கொள்ளாததால் இதுவரை எடுக்கப்பட்ட நடவடிக்கைகளுக்கு மட்டுமே அளிக்கப்பட வேண்டும். சட்டத்தை மீறி அரசியல் நிர்ணயச் சட்டத்தில் கொணரப்பட்ட திருத்தங்களின் விளைவாக இனி "எடுக்கப்படவிருக்கும் நடவடிக்கைகளுக்கு இந்த விதிவிலக்கை விஸ்தரிக்கக் கூடாது."

ஸுப்ரீம் கோர்ட்டு அளித்துள்ள தீர்ப்பு சுதந்திரக் கட்சிக் கொள்கைக்கு ஒரு மாபெரும் வெற்றியாகும். ஆரம்ப முதலே சுதந்திரக் கட்சி பதினேழாவது திருத்தத்தை வன்மையாக எதிர்த்துப் போராடி வந்துள்ளது. இன்று அது அடையும் பெருமிதம் நியாயமானது என்பதை மக்கள் உணர வேண்டும்.

பொருளாதாரத் துறையிலும் சரி, அரசியல் துறையிலும் சரி, தனது கொள்கைகள் சரியானவை; ஜனநாயகம் இந்நாட்டில் நிலைபெறவும் பொருளாதாரத் தொழில் துறைகளில் தேசம் முன்னேறவும் தனது கொள்கைகளே ஏற்றவை என்று சுதந்திரக் கட்சி உறுதியாக நம்புகிறது.

இருபது ஆண்டுகளாக மத்திய ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டு ஒரே கட்சி பதவியில் இருந்து பெற்றுள்ள சலுகைகள் காரணமாக இன்று எதிர்ப்படும் சிரமங்கள் எத்துணை பெரிதாக இருந்த போதிலும் இறுதியில் மக்கள் தனது கொள்கைகளையே ஒப்புக் கொள்ளவேண்டியிருக்கும் என்பதில் சுதந்திரக்கட்சி அசைக்க முடியாத நம்பிக்கை வைத்திருக்கிறது.

# கட்சியும் நிர்வாகமும்

மாபெரும் வெற்றி பெற்ற தி.மு.க.வின் தலைவர் திரு அண்ணாதுரை, தேர்தலுக்குப் பின் நடந்த முதல் கூட்டத்திலேயே தமது கட்சி அங்கத்தினர்களுக்குக் 'கட்சி வேறு அரசாங்கம் வேறு என்பதை எப்போதும் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும்' என்று தெளிவாக எடுத்துக் கூறியது மிகவும் உயர்ந்த, கண்ணியமான மனப் போக்கைக் காட்டுகிறது.

அரசாங்கம் என்பது தேர்தலில் கட்சி பெறும் வெற்றியின் அடிப்படையிலேயே அமைகிறது என்றாலும் ஆட்சிக்கு வந்த பின்னர் இவ்விரண்டையும் பிரித்து நோக்கப் பழகிக் கொள்ள வேண்டும் என்றும் அரசாங்க அதிகாரிகளின் அன்றாட அலுவல்களில் கட்சி அங்கத்தினர்கள் தலையிடக் கூடாது என்றும் அறிவுரை வழங்கினார் திரு அண்ணாதுரை.

"இது மிக மிக உயர்தரமான அறிவுரையாகும். இதைப் பின்பற்றுவதை விட அதிகமாக நான் வேறு எதையும் தி.மு.க.வினரிடம் எதிர்பார்க்கவில்லை" என்கிறார் ராஜாஜி.

இந்த இரண்டு முக்கியமான கொள்கைகளையும் இன்று ஆட்சிக்கு வந்திருப்போர் பின்பற்றுவார்கள் என்றும், இதற்கு முன் பதவியிலிருந்த காங்கிரஸ்காரர்கள் செய்த தவற்றையே இவர்களும் மீண்டும் செய்துவிடமாட்டார்கள் என்றும் நம்புகிறோம்.

தி.மு.க. முதல் மந்திரியின் அறிவுரை ஏற்கப்பட்டுத் தமிழகத்தில் நிர்வாக இயந்திரம் தங்கு தடையின்றி இயங்கினால் பிற ராஜ்யங்களுக்கும் ஒரு முன்மாதிரியாகத் தமிழகம் விளங்க வாய்ப்பு உண்டு. எல்லா நன்மக்களின், அறிஞர்களின் பாராட்டுதல்களையும் தி. மு. க. பெற்றுப் பெருமிதம் அடையும். அரசியல் கட்சி நாட்டை ஆள அனுமதிக்கப்படலாம், ஆனால் நிர்வாக இயந்திரம் சீர்கெடுமாறு நடந்துகொள்ள அதனை அனுமதிக்கலாகாது.

# என்ன சேதி?

- மன்னிப்புக் கோரிக்கை
- வெள்ளி முளைத்தது
- "அங்கேயே இரு!"

சென்ற பிப்ரவரி மாதம் 26ம் தேதி சென்னை கடற்கரையில் கூடிய மாபெரும் பொதுக் கூட்டத்தில், தமிழக மக்களின் அமோக ஆதரவு பெற்றுச் சென்னை முதல்வராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட திரு சி. என். அண்ணாதுரை அவர்கள் அம்மாபெரும் மக்கள் சமுதாயத்திடம் மன்னிப்புக் கோரிய வார்த்தைகள் ஒவ்வொருவர் நெஞ்சையும் தொட்டு விட்டன. திரு அண்ணாதுரை அவர்கள் தம்மிடம் மக்கள் நம்பிக்கை வைக்க மாட்டார்கள் என்றே எண்ணி ஓர் அலட்சிய நிலையுடனேயே இருந்து வந்தாராம். அது தவறு என்று மெய்ப்பித்து, தம்மிடம் அளவிடற்கரிய நம்பிக்கை தெரிவித்துள்ள தமிழக மக்கள் மத்தியில் நிற்கும்போது தாம் என்றும் அடைந்திராத அடக்க உணர்ச்சியைப் பெறுவதாகக் கூறினார். தாம் தமிழக மக்களைப் பற்றித் தவறாக மதிப்பிட்டதற்கு மன்னிக்க வேண்டும் என்று கோரிய போது எல்லாருடைய நெஞ்சங்களுமே நெகிழ்ந்து உருகி விட்டது!

விந்தையான நம்பிக்கைகள் கொண்டிருப்பவர்கள் பலர் சமுதாயத்தில் உண்டு. அம்முறையில் மகிழ்ச்சியளிக்கும் செய்தி ஒன்றை நினைவுபடுத்த விரும்புகிறோம்.

விடியற்காலை இருள் சற்றிருக்கும் போது வானத்தில் ஒளிமயமான வெள்ளி முளைக்கும். பிறகுதான் மெள்ள சூரிய ஒளி படர்ந்து உதயமாகும். அதேபோல் தேர்தல் முடிவுகளை அறிவிக்கத் தொடங்கிய போது முதன் முதல் அறிவிக்கப்பட்ட முடிவு சென்னை பார்க்டவுன் சுதந்திரக் கட்சி அபேட்சகர் டாக்டர் ஹண்டே வெற்றி பெற்றார் என்பதுதான். அவருடைய சின்னம் நட்சத்திரம்.

வெள்ளி முளைத்தது. கூடவே உதயசூரியனும் எழுந்தான் தமிழகத்தில்.

ஒரிஸ்ஸா ராஜ்ய முதன் மந்திரி ஆர். என். சிங் தேவ் அவர்கள், ஒரிஸ்ஸாவில் நமது சுதந்திரக் கட்சி மந்திரி சபையை அமைப்பதற்கு முன்னதாகவே நமது பாராட்டுதல்களுக்கு உரியவராகிறார்.

ஒரிஸ்ஸாவில் சுதந்திரக் கட்சி மந்திரிசபை அமைய இருக்கிறது என்று தெரிந்தவுடன் காங்கிரஸ் கட்சி சட்டசபை அங்கத்தினர்கள் ஆறு பேர் சுதந்திரக் கட்சியில் சேருவதாக ஆர். என். சிங் தேவ் அவர்களிடம் தங்கள் விருப்பத்தைத் தெரிவித்தார்கள். காங்கிரஸ் கட்சியில் இருப்பவர்களுக்கு எவ்வளவு பதவி ஆசை என்பதை இதிலிருந்து தெரிந்து கொள்ளலாம். ஆனால் ஆர். என். சிங் தேவ், தாங்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட கட்சியை இப்படித் தேர்ந்தெடுக்கப்பட்டவுடனேயே உதறிவிட்டு வருவது முறையல்ல என்றும், அங்கேயே இருக்கும்படியும் அந்தக் காங்கிரஸ் எம். எல். ஏ.க்களுக்கு அறவுரை கூறியிருக்கிறார்.

சுதந்திரக் கட்சி முதல்வர் எத்தகைய உயர்ந்த சம்பிரதாயத்தையும், நடவடிக்கையையும் மேற்கொண்டிருக்கிறார் என்பதைக் காணும் போது மெய்சிலிர்க்கிறது. ராஜாஜியைத் தலைவராகப் பெற்ற சுதந்திரக்கட்சி முதல்வர், அவர் தகுதிக்கு ஏற்ப உயர்ந்த கண்ணியமான முறையில் நடந்து கொண்டிருக்கிறார் என்றுதான் நினைக்கத் தோன்றுகிறது.



# ராஜாஜியின் கருத்துக்கள்

பாரத நாட்டின் அடுத்த ராஷ்டிரபதியாக இப்போது உள்ள ஸ்ரீ ராஷ்டிரபதியே நீடிக்கலாம்; அல்லது டாக்டர் ஜாகிர் ஹுஸைன் அப்பதவியை ஏற்கலாம். இவ்விருவரையும் இது சம்பந்தமாக அணுகப் போவதில்லை என்றால் ஸ்ரீ ஜயப்பிரகாஷ் நாராயண் அடுத்த ராஷ்டிரபதியாகப் பொறுப்பேற்குமாறு அழைக்கப்பட வேண்டும் என்று சுதந்திரக் கட்சி கூறியுள்ளது. இதற்கு ஸ்ரீ ஜெயப்பிரகாஷிடமிருந்து இப்போது கிடைத்துள்ள பதிலைவிட வேறு எதையும் நாம் எதிர்பார்த்திருக்க முடியாது.

நான் ஏற்கனவே இந்தப் பதவி டாக்டர் ஜாகிர் ஹுஸைனுக்கு உரியது என்று கூறியுள்ளேன். ஆனால் எல்லாக் கட்சி அங்கத்தினர்களிடமிருந்தும் பெருமளவுக்கு ஓட்டுகள் பெற வேண்டும், டாக்டர் ஜாகிர் ஹுஸைனுக்கு ஆதரவாக. இது இல்லாமற் போனால் பிறகு பல்வேறு காரணங்களுக்காக ஜெயப்பிரகாஷ் அவர்களைத் தேர்ந்தெடுப்பதே சிறந்த முடிவாக இருக்கும்.

ஃஃஃ

ஒரே ஒரு காங்கிரஸ் பிரமுகரேனும் தாம் உண்மை என்று கருதியதைப் பேசியதற்காக நான் மகிழ்கிறேன். ஸ்ரீ எஸ். ஜி. பார்வே பின்வருமாறு கூறியதாக பி. டி. ஐ. செய்தி ஸ்தாபனம் தெரிவிக்கிறது. ''பொதுத் தேர்தலில் காங்கிரஸுக்கு எதிராக வாக்காளர்கள் பல இடங்களில் வோட்டளித்ததற்குக் காரணம், மோசமான நிர்வாகம்; லஞ்ச ஊழல்; **தவறான பொருளாதாரக் கொள்கைகளின் காரணமாக ஏற்பட்ட விலைவாசி உயர்வு** ஆகியவையே.''

ஃஃஃ

இந்திய விவகாரங்களில் அமெரிக்க, ஜெர்மானியப் பத்திரிகைகள் வழிகாட்டிகளாக விளங்கும் என்று எதிர்பார்ப்பதும் தவறு; அவர்களது கருத்துக்களைப் பின்பற்றுவதும் தவறு; எனினும் அவர்களது எண்ணங்களைக் கவனிக்க வேண்டியது அவசியமாகும். வாஷிங்டன் போஸ்ட் தலையங்கம் பின்வருமாறு :

தேர்தல் முடிவுகளிலிருந்து மக்கள் வலது சாரியாகவோ அல்லது இடதுசாரியாகவோ சரிந்திருக்கிறார்கள் என்று தீர்மானிப்பது விஷயத்தை மிக அலட்சியமாக அணுகுவதாக முடியும். எனினும் மிகத்தெளிவாகச் சந்தேகத்துக்கு இடமின்றித் தெரிய வருவது ஒன்று. அது நாடு இப்போதுள்ள நிலை குறித்து மக்கள் மிகவும் அதிருப்தி அடைந்திருக்கிறார்கள் என்பதுதான்.

வாஷிங்டன் டெய்லி நியூஸ் என்ற பத்திரிகை, சுதந்திரத்துக்கு முன்னால் மிகவும் ஆரோக்கியமான சுறுசுறுப்புடன் பணியாற்றிய காங்கிரஸ், பதவிக்கு வந்த பிறகு மத மதப்பு ஏறிப்போய் நடந்தவரை ! போதுமே என்கிற மனப்பான்மையில் செயல் திறன் குன்றிக் கிடக்கிறது என்பதாக எழுதியுள்ளது.

மேற்கு ஜெர்மனியைச் சேர்ந்த ''ஸ்டுட்கார்டர் ஸைட்டுங்'' என்ற பத்திரிகையின் கருத்து பின்வருமாறு: காங்கிரஸின் பெருமையெல்லாம் அடியோடு மறைந்துவிடவில்லையாயினும் அது பெருமளவுக்குக் குறைந்து போய்விட்டது என்பது இந்தப் பொதுத் தேர்தலின் முடிவுகளிலிருந்து தெரிகிறது.

ஃஃஃ

சக்தி வாய்ந்த மருந்துகளில் பல விஷமாகவும் உள்ளன. குறிப்பிட்ட அளவுக்கு மேல் அருந்தினால் உயிருக்கே ஆபத்தாக முடியும். இருபத்தி மூன்று ஆண்டுகளுக்கு முன்னால் புதிய 'ஸல்பா' மருந்து ஒன்றைக் கண்டுபிடித்தார்கள். நோயைக் குணப்படுத்தக் கொடுக்கப்பட்ட இம்மருந்தினால் நோயாளிகளின் ரத்தத்தில் உள்ள சர்க்கரைச் சத்து வெகுவாகக் குறைந்து போய்விடுவதைக் கண்டார்கள். இது மிக வேகமாக நடைபெற்றது. கவனித்து ஆவன செய்வதற்குள்ளாகவே இரண்டு நோயாளிகள் ரத்தத்தில் சர்க்கரைச் சத்து மிகவும் குறைந்து போன காரணத்தினால் இறந்து விட்டார்கள். இதுவே பின்னால் மேலும் பல ஆராய்ச்சிகளுக்குப் பிறகு சர்க்கரை நோய் உள்ளவர்களுக்கு உதவியது. அதுவரை 'டயாபெடீஸ்' கோளாறுக்கு 'இன்ஸுலி'னை ஊசி மூலம் ஏற்றி வந்தார்கள். இதில் பல அசௌகரியங்கள் உள்ளன. அதற்குப் பதில் வாயாலேயே உட்கொள்ளக் கூடிய மருந்து சர்க்கரை நோய்க்குக் கண்டுபிடிக்கப்பட்டது. இதையெல்லாம் எதற்குச் சொல்கிறேன் என்றால் ஒரு நோய்க்குக் கொடுக்க வேண்டிய மருந்தின் அளவு மிகவும் முக்கியமான விஷயமாகும். நோய் தீர்க்கும் அந்த மருந்தினால் ஏற்படக் கூடிய வேறு விளைவுகளை எப்போதும் ஞாபகத்தில் வைத்துக் கொண்டிருக்க வேண்டியது அவசியம். இதே போலத்தான் நாட்டு நிர்வாகத்திலும்.

வரிப் பணத்தையும் பிற வருவாய்களையும் அரசாங்கம் மக்களிடையே பொருளாதார ரீதியில் உள்ள ஏற்றத் தாழ்வுகளை நீக்கப் பயன்படுத்துகிறது என்றால் இந்தக் கொள்கையானது ஆட்சியில் உள்ளோரிடம் எத்தகைய மாறுதலை உண்டாக்குகிறது என்பதையும் கவனிக்க வேண்டும். தனி மனிதர்களின் பொருளாதாரம்; கார்ப்பொரேஷன்கள், கம்பெனிகள் ஆகியவற்றின் பொருளாதாரம் முதலிய அனைத்தையும் கட்டுப்படுத்தும் அளவுக்கு நிரம்ப அதிகாரமும் எதிலும் தலையிட உரிமையும் தரப்படுகிறது ஆட்சியாளரிடம். ஆளும் கட்சி இந்த அளவுக்கு அதிகாரம் பெற்ற பிறகு அந்த அதிகாரமே அது தொடர்ந்து பதவியிலிருக்க அதற்கு உதவு

கிறது. ஆக, சர்வாதிகாரம் அல்லது குறிப்பிட்ட ஒரு கூட்டத்தின் முடியாட்சி ஜனநாயகத்தின் இடத்தை ஆக்கிரமித்துக் கொள்கிறது.

நிச்சயமாக நோயைக் குணப்படுத்தும் என்று நமக்குத் தெரிந்த மருந்துகள் கூட அளவுக்கு மிஞ்சினால் விஷமாகி விடும். கொள்கையே முக்கியம் என்று விட்டுக் கொடுக்காமல் அதையே பிடித்துக் கொண்டிருக்கும் ஆட்சியாளர்கள், வரி விதிப்பதையும் மக்களின் சேமிப்புக்களை அரசாங்கத்துக்கென்று ஒற்றி எடுப்பதையும் அளவுக்கு மீறிச் செய்து அதன் மூலம் மக்களுக்கு ஊக்கமே இல்லாமல் அடித்து விடுவார்கள். சேமிப்புச் செய்து உற்பத்தித் தொழில்களில் ஈடுபடுத்த வேண்டும் என்ற எண்ணங்களையெல்லாம் மடிந்து போகச் செய்வார்கள்.

இவையெல்லாம் இங்கு ஏற்கனவே நடந்து விட்டன. எனினும் ஆட்சியாளர் படிப்பினை பெறக் காணோம். மக்களும் முழுமையாகப் புரிந்து கொண்டதாகத் தெரியவில்லை.

ஃஃஃ

பிப்ரவரி 27ந் தேதி ஸ்டேட்ஸ்மன் பத்திரிகை காங்கிரஸ் கட்சி பற்றி நியாயமாகவும் ஒளிவு மறைவின்றி அப்பட்டமாகவும் பின்வருமாறு எழுதியுள்ளது:

நேருஜியின் மறைவுக்குப் பிறகு நடக்கும் முதல் பொதுத் தேர்தலின்போது லோக சபையில் பெரும்பான்மை பலம் பெற்று மத்திய ஆட்சியைத் தான் அமைக்க முடியுமா என்று தெரியாமல் காங்கிரஸ் கடைசி விநாடிவரை கையைப் பிசைந்து கொண்டு நிற்கும் என்று யார் நினைத்திருப்பார்கள்?

காங்கிரஸ் பெரும் புள்ளிகள் ஒருவர் பின் ஒருவராக வீழ்ந்தபோது தெருக்களில் மக்கள் குதூகலமாகக் கூத்தாடுவார்கள் என்று யார்தான் எண்ணினார்கள்? கள்ளச் சந்தைக்காரர்கள் தாங்கள் ஒரு நண்பனை இழந்து விட்டோம் என்று பயந்த காரணத்தால் பதுக்கியிருந்த சரக்கையெல்லாம் வெளியே விட, விலைகள் குறைந்து எதிர்க் கட்சியாளருக்கு உடனுக்குடன் மக்களிடம் நல்ல பெயர் சம்பாதித்துக் கொடுக்கும் என்று யார் ஊகித்திருக்க முடியும்? எனினும் இவையெல்லாம் கண்ணுக்கு மெய்யாக நிகழ்ந்துதான் இருக்கின்றன.

காங்கிரஸ் தலைமைப் பீடம் டில்லியில் கூடும்போது கிட்டத்தட்ட தங்கள் கட்சி மரணாபத்தான நிலைக்குச் சரிந்துவிட்டதன் காரணங்களை ஆலோசிக்க வேண்டும். இதற்கு யார்மீது பழியைச் சுமத்தலாம் என்று யோசித்துக் காலத்தை விரயம் செய்ய வேண்டியதில்லை. நீண்ட காலமாக காங்கிரஸ் அரசாங்கம் செய்து வந்துள்ள தவறான காரியங்களின் விளைவான இந்நிலைக்குக் கட்சி முழுவதுமே பொறுப்பேற்க வேண்டியதுதான்; யாரோ ஓரிரு நபர்கள் அல்ல.

## காமகோடியின் கருணை மொழி

நீங்கள் கஷ்டங்களைத் தெய்வத்திடம் சொல்லிவிட்டால் அது நிவர்த்தியாகி விடும் என்ற நம்பிக்கை மக்களுக்கு இருந்து வருகிறது. தெய்வம் பிறகு கஷ்ட நிவாரணம் செய்வது ஒருபுறம் இருக்கட்டும்; வாயை விட்டுத் தமது குறைகளைச் சொல்லிக் கொள்வது மக்களுக்குச் சமாதானம். எங்கு தெய்வம் இருந்தாலும் அங்கு சொல்லிக் கொள்ளப் பிரியப்படுகிறார்கள். தெய்வம் எல்லா இடத்திலும்தான் இருக்கிறது. ஆனால் தெரியவில்லை. சில இடங்களில் தெய்வம் தெரிவதாக மக்கள் நினைக்கிறார்கள். எனக்குத் தனியாக மதிப்புக் கொடுத்து அவர்கள் என்னிடம் வரவில்லை. என்னிடத்தில் தெய்வம் இருப்பதாக நம்பி, என்னிடம் சொன்னால் தெய்வத்திடம் சொல்வது போல் என நம்பி என்னிடம் தங்கள் கஷ்டங்களைச் சொல்லி ஆறுதல் பெறுகிறார்கள். அந்த நம்பிக்கையையும், கஷ்டப்படுகிறவர்கள் அதனால் பெறுகிற ஆறுதலையும் ஏன் கெடுக்க வேண்டும்? நான் எதற்காக இருக்கிறேன்? ஜனங்களுடைய குறைகளைக் கேட்டுச் சமாதானம் சொல்வதற்காகவேதான் என் வாழ்நாள் இருந்து வருகிறது. இரவானால் என்ன, பகலானால் என்ன, மக்கள் குறைகளைக் கேட்டுச் சமாதானம் சொல்லவே இந்தச் சரீரம் ஏற்பட்டிருக்கிறது. ஜனங்களுக்குத் தரிசனம் தருவதாலும், அவர்களுக்கு இதமாகப் பேசுவதாலும் என் சரீர பலம் குறைந்து போனாலும் பாதகமில்லை. சரீரம் எப்படியானாலும் என் உள்ளத்துக்கு இதுவே பலம்.



என்னை வணங்குகிறார்கள் என்பதில் எனக்குப் பெருமை இல்லை. என்னிடம் தெய்வத்தை நினைக்கும் மக்கள் இவ்வளவு நம்பிக்கையுடன் ஆண்டவனிடம் முறையிடுகிறார்களே என்பதில் நான் சந்தோஷப்படுகிறேன். நான் தெய்வமானாலும் இல்லாவிடினும் என் காரணமாக மற்றவர் பெறும் தெய்விக உணர்ச்சி என்னைப் பரவசப்படுத்துகிறது. அந்த உணர்ச்சியுடன் அவர்கள் செய்யும் எந்தக் காரியமும் எனக்குச் சந்தோஷத்தைக் கொடுக்கிறது. அதுதான் எனக்குப் பலம். யாரும் இதற்கு இடையூறு செய்யாதீர்கள்.

# விநாடிக்கு ஆறுகோடி ::போட்டோக்கள்!

ஒரு விநாடிக்கு அறுபது மில்லியன் ஃபோட்டோக்களை 'எடுக்கும் காமிரா ஒன்று தயாராகி'யிருக்கிறது! பிரிட்டனில் அணு சக்தி நிறுவனத்தின் குல்ஹாம் ஆராய்ச்சி சாலையில் உருவாகியுள்ளது. உலகின் விஞ்ஞான மேதைகள் இதைப் பயன்படுத்த அனுமதிக்கப்படுவார்கள்.

இந்தக் காமிரா எதற்குப் பயன்படும்? அணுவைப் பிளக்கும்போது மாபெரும் சக்தி உருவாகிறது என்று நாம் அறிவோம். அணுமின் நிலையம், அணுகுண்டு போன்ற விஞ்ஞானப் புதுமைகள் இந்த அடிப்படை நியதியிலிருந்தே உருவானவை.

இதே போல அணுக்கள் இணையும் போதும் கணக்கில் அடங்காத அளவுக்குச் சக்தி உருவாகும் என்று கண்டுபிடித்திருக்கிறார்கள். இந்தச் சக்தியை மிகப் பயன் தரும் விதத்தில் உபயோகப்படுத்தலாம்.

அணு இணைப்பு பற்றி ஆராயவே, விநாடிக்கு ஆறு கோடி படங்கள் எடுக்கும் இந்தக் காமிரா அகில உலக விஞ்ஞான மேதைகளுக்கு உதவப் போகிறது.

ரோல்ஸ்ராய்ஸ் கார்கள் பற்றிக் கேள்விப் படாதார் யார் உண்டு? அந்த நிறுவனத்தினர் புதிதாக 'வெள்ளி நிழல்' (ஸில்வர் ஷாடோ) என்று பெயரிட்டு ஒரு மோட்டார் காரைத் தயாரித்திருக்கிறார்கள். இதன் இஞ்சின் சத்தமே செய்யாது என்றால் நம்புவது கடினமாக இருக்கும். ஆனால் அது உண்மை! உள்ளே உட்கார்ந்து சவாரி செய்வோருக்கு இஞ்சின் போடும் சத்தத்தை விடப் பெரிதாக டிரைவர் ஆசனத்துக்கு எதிரே பொருத்தப்பட்டுள்ள கடிகாரத்தின் டிக் டிக் ஒலி தெளிவாகக் கேட்கும் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

மார்கோ சோப்பு என்றும், ஜி. இ. ஸி. ரேடியோ என்றும் தயாரிப்பாளரின் பெயரை இணைத்து விற்பனையாகும் பொருள்களின் தரத்தை நிர்ணயிக்கக் கற்றுக் கொண்டிருக்கிறோம். இதே போல 'அனிலா ஆரஞ்சுப் பழங்கள்' என்றும் 'மணி மாம்பழங்கள்' என்றும் பழங்களுக்கும் காய்கறிகளுக்கும்கூட வியாபாரப் பெயர்கள் தோன்றினால் வியப்பதற்கில்லை. மேனாடுகளில் ஏற்கனவே இம்முறையில் போட்டா போட்டி வர்த்தகம் நடைபெறுகிறது. 'தரமான சரக்குகள் வேணுமானால் ஸன்கிஸ்ட் ஆரஞ்சுகளையே வாங்குங்கள்' என்பது போல் விளம்பரம் செய்கிறார்கள். இவர்களுக்கு ஒரு பிரச்னை. அந்தப் பழங்களின் மீதாகத் தங்கள் கம்பெனியின் பெயரை எப்படிப் பதியச் செய்வது என்பது தான். இதற்காகப் புதிதாகப் பழங்களுக்கு லேபிள் ஒட்டும் மிஷின் ஒன்று கண்டுபிடித்திருக்கிறார்கள். இது ஒரு நிமிஷத்துக்கு 120 பழங்களின் மீது கம்பெனியின் பெயர் கொண்ட லேபிள்களை ஒட்டி விடுகிறது! ஆரஞ்சு, ஆப்பிள் போன்ற உருண்டையான பழங்கள் எதுவானாலும் எந்த அளவினதாயினும் இந்த இயந்திரத்தைப் பயன் செய்து கொண்டு லேபிள் ஒட்டலாம்.

காது மந்தமாக இருப்பவர்கள் காது கேட்க ஒரு கருவியைப் பயன்படுத்துவதைப் பார்த்திருக்கிறோம். ஆனால் இந்த நாகரிக யுகத்தில் தனக்குக் காது கேட்கவில்லை என்பது வெளியே தெரியக்கூடாது என்று பலர் ஆசைப்படலாம்.

இத்தகைய நாசுக்குக்காரர்களுக்கென்றே வெளியே தெரியாதவாறு காதுக்குள்ளேயே பொருத்துகிறார்போல ஒரு காது கேட்கச் செய்யும் கருவியை உருவாக்கியுள்ளனர் பிரிட்டனிலே. 1·35 வோல்ட் சக்தி உடைய பாட்டரி உள்பட இதன் உபகரணங்கள் அனைத்துமே உள்காதில் பொருந்தி விடுகிறது.

காதின் அளவும் உருவமும் நபருக்கு நபர் வித்தியாசப்படும். ஆதலால் ஒவ்வொருவருக்கும் பிரத்யேகமான முறையில் அளவு பார்த்து இந்தக் கருவியைச் செய்ய வேண்டியிருக்கும்.

இந்த ''அதிசயக் காது'' பாட்டரி எழுபது மணி நேரம் வேலை செய்யும். ஒலியைச் சௌகரியம்போல் கூட்டவோ குறைக்கவோ செய்யலாம்.

லண்டனில் பிளாஸ்டிக் வீடுகள் கட்டவிருக்கிறார்கள். உலகில் இதுவே முதல் முயற்சியாக இருக்கும் இத்துறையில். ஐந்து வருஷ ஆராய்ச்சிக்குப் பிறகு உருவான இந்தத் திட்டத்தின்படி படத்துக்குச் சட்டம் போடுவது போல் வீட்டின் ஒவ்வோர் அறையின் வெளிப்புறச் சட்டத்தையும் முதலில் உயர் ரக எஃகினால் அமைப்பார்கள். இதன் பிறகு பிளாஸ்டிக் சுவர்கள் இச்சட்டத்தில் பொருத்தப்படும். முதலில் இருபத்திரண்டு மாடிகள் கொண்ட இரண்டு கட்டடங்களை அமைக்கத் திட்டம் தீட்டியுள்ளனர். இவை ஒவ்வொன்றும் நாற்பது வாரங்களுக்குள் கட்டி முடிக்கப்பெறும். இது சாதாரணமான கட்டட அமைப்பு முறையின் சரிபாதிக் கால அளவேயாகும்.



## பிளாஸ்டிக் வீடுகள்

# குறுநகை ஒன்றே போதும்!

**மாசி மாதம் சுக்கில பிரதமையாகிய மார்ச்சு 12-ந் தேதியுடன் ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள் பீடாரோகணம் செய்து அறுபதாண்டுகள் நிறைகின்றன.**



அருளினை விழியிற் கூட்டி அன்பினை முகத்திற் காட்டி
மருளினை மலர்வாய்த் தோன்றும் மணிமொழி அதனாற் போக்கி
இருளினை அகற்ற வானில் எழுகதி ராகிவந்த
பொருவிலாக் காமகோடிப் புனிதனின் பாதம் போற்றி!

பள்ளியிற் கல்வி கற்கும் பருவமாம் பதின்மூ வாண்டு
துள்ளியே திரிந்து பின்பு துடுக்குகள் பலவும் செய்து
வெள்ளநீர் வேகங் கொண்டு வினைபல விளைக்கு மந்த
உள்ளமா துறவை நாடும்? உரைத்திடில் வியப்பா மன்றோ!

அவ்விளம் பருவம் வந்து அணைந்திடத் துறவை நாடிச்
செவ்விள வாழை ஈன்ற சிறுகுருத் தன்ன செம்மால்
செவ்விய சீரைப் பூண்டு சீர்கலை பலவும் தேர்ந்து
கவ்விய இருளை நீக்கக் கடுந்தவங் கொண்டாய் அன்றே!

உற்ற நோய் நோன்றல் மற்ற உயிர்தமக் குறுகண் செய்யாப்
பெற்றியே தவத்திற் கெல்லாம் பீடுடை உருவா மென்ற
கற்றவர் போற்றும் ஞானி கவினுறு வள்ளுவன் றன்
சொற்றமிழ்க் இலக்காய் நிற்கும் துய்யனே, போற்றி போற்றி!

துறவினை ஏற்றாய், மக்கள் துயரினை மறந்தா யில்லை
அறவினை செய்க வென்றே அறிவுரை பலவும் தந்தாய்,
உறவினை வளர்க்க நாளும் ஊற்றென அருளைத் தந்தாய்,
புறவினம் போலக் கூடிப் புகழ்பெறப் பொதுமை தந்தாய்









# கவிஞர் இல. வாசுகிநாதன்

இறைவழி பாடு செய்வோர் இற்றைநாள் பிறைநி லாப்போல்
குறைவதைக் கண்டாய், வானக் குளிர்நிலாக் கருணை கொண்
டாய்,
மறைவிலே பேதங் காட்டும் மதப்பகை அனைத்தும் நீக்கி
நிறைமதிப் பொலிவைத் தந்தாய், நிமலனே, போற்றிபோற்றி!

அருள்வழி அன்பு சான்ற அறவழி இரண்டும் தானே
பெருநிலந் தன்னை எல்லாம் பிணைத்திடு மென்றும் கண்டாய்,
குருவென வந்தாய், உள்ளக் கோவிலே இடமாக் கொண்டாய்!
அருள் மிகும் ஆதி அண்ணல் அடிவழி வந்தாய் போற்றி!

எளிமையாங் கோலங் கொண்டாய், இராப்பகல் துயிலும்
நீத்தாய்,
எளியவர் இல்லமெல்லாம் எழில்மலர்ப் பதத்தால் சென்றும்,
துளிபெறு கழனி யென்னத் தொல்வளம் பெருகச் செய்தாய்,
அளியுடைச் செம்மால்! நின்றன் அரும்பணி அறைதற் பாற்றே!

புராதனக் கலைகள் எல்லாம் புகலிடம் இன்றி ஏங்கி
நிராதர வாகத் தேயும் நிலையினை நெஞ்சம் கொண்டு,
வராதநற் செல்வ மாக வந்ததொல் கலைகள் தம்மைப்
புராதனச் சின்னமாகப் புத்துயிர் தந்தாய் போற்றி!

அறுபதின் ஆண்டுக் காலம் அகிலமே வியக்கு மாறு
செறுபகை பலவும் தீர்த்துச் சிந்தனை விளக்கம் தந்தாய்
மறுவறு குணக்குன் றனை மாதவப் பெரியோய், நின்றன்
குறுநகை ஒன்றே போதும், குவலயம் செழிக்கு மன்றே.

நன்றி: ஸ்ரீ காமகோடி ப்ரதீபம்



# ஜனதா நகர்



"இந்த பாருங்கோ, உங்களைத் தானே? இப்படி வா....ா....ங்கோ. இப்படி வாங்கோ...ா...ா...ன்னேன்!"

இம்மாதிரி வசனத்தைக் கேட்ட உடனே நமக்கு ஐயர் சமூகத்து அம்மாமி யொருவரின் உருவம்தான் கண் முன்னே தோன்றும். கொசுவம் வைத்து உடுத்திய பட்டுப் புடவையுடன் ஒய்யாரமாக நின்று கழுத்தை நொடித்துப் பேசும் .அம்மாமிப் பாத்திரங்களுக்கு நாடக மேடையில் நல்ல 'மௌஸ்' ஏற்பட்டுள்ள காலம் இது.

திண்டுக்கல் ஆண்டாள் மாமி இல்லாவிட்டால் 'ஜனதா நகர்' என்ற இந்த நாடகத்தை மேடை ஏற்றி யிருக்கவே மாட்டார்கள். மேடையேறிய முதல் நாளன்றே ரசிகர்கள் தங்கள் சிரிப்பை, மகிழ்ச்சியை இப்படி அலை அலையாக எழுப்பியும் இருக்க மாட்டார்கள்.

சென்னை வானொலியில் தொடர்ந்து பல வாரங்கள் ஒலிபரப்பப்பட்டு ரசிகர்களின் அமோகமான பாராட்டுதலைப் பெற்றது தான் ஜனதா நகர். அப்போது ஒலியை மட்டும் கேட்டு மகிழ்ந்தவர்களுக்கு அந்தப் பிரபலமான கதாபாத்திரங்களின் குரல்களுக்கு உரிய உருவங்களையும் அவர்களின் நடிப்பையும் நேரில் கண்டு ஆனந்திக்கும் வாய்ப்பை நமக்கு அளித்திருக்கிறார்கள், மயிலை ஐயாலயா மன்றத்தினர். வானொலியில் இதைத் தயாரித்தளித்த பிரபல எழுத்தாளர், நாடகத் தயாரிப்பாளரான திரு கவி சுப்ரமணியம் அவர்களே இதை மேடை ஏற்றும் பொறுப்பையும் ஏற்றிருக்கிறார். அனாவசியமான காட்சிகளும் பாத்திரங்களும் இல்லாமல், நாடகம் மூன்று மணி நேரம் நடந்தது என்ற உணர்வே இல்லாத வகையில் கச்சிதமாக அமைத்திருப்பதைப் பாராட்டத் தான் வேண்டும்.

கதை என்று பிரமாதமாக ஒன்றும் இல்லை. திண்டுக்கல் ஆண்டாள் மாமியின் அட்டகாசங்களே நாடகத்தின் ஜீவநாடி. அதனோடே டாக்ஸி தங்கராஜின் உணர்ச்சிப் பின்னலான கதை மெல்லிய இழையாக ஊடுருவிச் செல்கிறது. திண்டுக்கல் ஆண்டாளாக நடித்த ஸ்ரீமதி கே. ஆர். இந்திரா தேவியை எத்தனை பாராட்டினாலும் தகும். ஊரிலிருக்கும் அப்பாவுக்குத் தேள் கொட்டிவிட்ட செய்தியைக் கடிதம் மூலம் அறியும் ஆண்டாள் செய்யும் ஆர்ப்பாட்டங்கள் அப்பப்பா, ரொம்பப் பிரமாதம்! அடுத்தபடி நடிப்பில் நம் கவனத்தைக் கவருபவர் டாக்ஸி தங்கராஜாக நடித்த திரு பி. பிரபாகர். துடிப்பான நடிப்போடு கொச்சைத் தமிழில் எப்படி அநாயாசமாகப் பேசுகிறார்? உணர்ச்சிமேலிடும் கட்டங்களில் அவர் நடிப்பு தத்ரூபம். பாகவதர் பனங்குடியாக வரும் திரு ஆர். ஹரிஹர சுப்பிரமணியத்தின் குரலும் கணீர், அவரது நடிப்பும் பளீர்! மிஸஸ் டி. டி. ஆர். பாலாம்பாள் பி. ஏ. பி. டி.யாக நடிக்கும் பார்வதி ராமநாதனுக்கு மேடைப் பீதியோடு 'பர்சனாலிடி'யும் அப்படிச் சதி செய்திருக்க வேண்டாம். முனியம்மாவின் தோற்றமும் நடிப்பும் ரொம்ப இயற்கையாக இருந்தது. மற்ற பாத்திரங்களும் சோடையின்றிச் சோபிக்கின்றன.

ஆனால் கதையின் முடிவு? நடிப்பின் சிறப்பைக் கூடத் தேய்ந்து மங்கச் செய்துவிடுகிறது, போங்கள்!

மொத்தத்தில் நாடக உலகில் ஒரு பட்டு மாமிக்குத்தான் இடமுண்டு என்பதில்லை என்று நிரூபிக்கிறது ஜனதா நகர்.



## பாமா விஜயம்

**வ**ழக்கமான பாதையிலிருந்து ஒரு திருப்பம் ''பாமா விஜயம்''. படத்தின் பெயர் பழைமையா யிருந்தாலும் கதை புதுமை யானது.

புலியைப் பார்த்துப் பூனை சூடிட்டுக் கொண்ட கதைதான் ''பாமா விஜய''த்தின் கதை. ஒரு சாதாரண குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் பக்கத்து வீட்டுக்குக் குடி வந்திருக்கும் ஒரு சினிமா நடிகையைப் பார்த்துப் பழகி, பேசி மயங்கி அவளைத் திருப்திப்படுத்துவதாக நினைத்துக் கொண்டு போலி வாழ்க்கை வாழ முற்பட்டு, கடன்பட்டு, பலவிதமாக அவதிப்படுகின்றனர். படம் பார்ப்பவர்களைச் சிரிப்பில் ஆழ்த்துகின்றனர்.

மூன்று பிள்ளைகளும், அவர்களின் மனைவிமார்கள் மூவருமாகச் சேர்ந்து கொண்டு அடிக்கும் கேலிக் கூத்துக்கள் அரியதொரு ஹாஸ்ய விருந்தாகத் திகழ்கின்றன. மூன்று பிள்ளைகளின் தந்தையாக வரும் டி. எஸ். பாலையாவின் அமைதியும், குறும்புத்தனமும், அழுத்தமும் கலந்த அரிய நடிப்பு படத்தின் தனிச் சிறப்பு.

சுந்தரராஜன், முத்துராமன், நாகேஷ்–மூவரும் அவரவர்களுக்கே உரிய திறமையைக் காட்டியுள்ளனர்.

மருமகள் மூவரில் மூத்த மருமகள் சவுகார் ஜானகியின் நடிப்புக்குத்தான் முதலிடம் தரவேண்டும். பக்கத்து வீட்டில் சினிமா ஸ்டார் பாமா குடிவந்து விட்டாள் என்பதை யறிந்ததும் அவர் காட்டும் குதூகலமும், போடும் களியாட்டமும் அப்பப்பா! பிரமாதம்! காஞ்சனா, ஜயந்தி இருவரும் தங்கள் பங்கில் சோடை போய்விடவில்லை. நொடிப்பும் துடிப்புமாக அழகாக நடிக்கின்றனர்.

குழந்தைகள் கும்மாளமிட்டு நடிக்கின்ற ஆடல், பாடல் காட்சி ஆனந்தமாயிருக்கிறது. சினிமா ஸ்டார் பாமாவாக வரும் ராஜஸ்ரீ தளுக்கும் மினுக்குமாக நிறைய 'ஸ்டைல்' காட்டுகிறார். குழப்பமில்லாத டைரக்ஷன் பாராட்டும்படியிருக்கிறது. கதை, வசனம், டைரக்ஷன் பொறுப்பை ஏற்றிருப்பவர் கே. பாலசந்தர். நல்ல படம்.



# முடிவு காணாத மர்மங்கள்

**மர்மத் திரைப் படங்களை எடுப்பதில் மன்னர் ஆல்பிரெட் ஹிட்ச்காக், அவருக்கே இந்த மர்மங்களை விடுவிக்க முடியவில்லை.**











திகிலும், மர்மமும் நிறைந்த மயிர்க் கூச்சலெடுக்க வைக்கும் திரைப் படங்களைத் தயாரித்து உலகப் புகழ் பெற்ற ஆல்ஃபிரெட் ஹிட்ச்காக், தம் படத்துக்கான கதைகளைப் பொறுக்கும்போது, அந்தக் கதைகள், படம் பார்ப்பவர்கள் நம்பக் கூடியதாக இருக்க வேண்டும் என்பதில் அக்கறை காட்டுகிறார். வாழ்க்கையில் நடக்கும் பல உண்மைச் சம்பவங்களை அடிப்படையாகக் கொண்டு எத்தனையோ, மர்மம் நிறைந்த படங்களை எடுத்திருக்கும் அவர், கீழே கொடுத்திருக்கும் ஐந்து சம்பவங்களையும் படங்களின் கருப்பொருளாக எடுத்துக்கொள்ள மறுத்துவிட்டார். அதற்கான காரணத்தையும் அவரே கொடுக்கிறார்.

1

அதிகாலை மூன்று மணி சுமாருக்கு டெலிபோன் மணி விடாமல் அடித்தது. ஆரன் காண்டியின் தாயார் ஆவலுடன் டெலிபோனை எடுத்தாள். எந்த நேரத்திலும் அவளுடைய மகன் அவளை டெலிபோனில் கூப்பிடுவான் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்.

''உங்க பையன் இங்கேதான் இருக்கிறான்! இந்தத் தடவை அவன் செய்த தவறை மன்னித்து விடுங்கள். நான் அவனைப்பற்றி உங்களுக்கு எழுதியிருந்த கடிதத்தில் குறிப்பிட்டது எல்லாம் உண்மை'' என்ற குரல் மறுமுனையிலிருந்து வந்தது.

அந்த அம்மாவுக்கு எந்த விதமான கடிதமும் யாரிடமிருந்தும் வரவில்லை. பேசிய நபர், டெலிபோன் நம்பரைச் சரியாகக் குறிப்பிட்டான். 'டைரக்டரி'யில் போடாத நம்பர் அது.

அந்த நபர் டெலிபோனில் பேசிக் கொண்டிருக்கும்போது மறு முனையிலிருந்து பலர் சேர்ந்து பேசும் ஒலியும் கேட்டது. ஆரன் காண்டியின் குரல் ஒலியும் அதில் கலந்திருந்ததை உணர்ந்தாள். 'என்னால் நகர முடியவில்லையே' என்று அவன் முனகுவது போலவும் இருந்தது.

''என் பிள்ளையுடன் பேச வேண்டும். அவனை டெலிபோனுக்கு வரச் சொல்லுங்கள்'' என்றாள் தாயார்.

மறுபக்கத்திலிருந்து சிரிப்புடன் கலந்த பதிலாக, ''அவன் சான்பிரான்ஸிஸ்கோ நகர ஆஸ்பத்திரியிலே காயத்துடன் இருக்கிறான்! ஒன்றும் பயப்பட வேண்டாம்! வந்துவிடுவான்'' என்ற வார்த்தைகள்தான் வந்தன. டெலிபோன் இணைப்பும் துண்டிக்கப்பட்டு விட்டது.

ஒன்றுமே புரியாத அந்த அம்மாள் கலவரத்துடன் தன் கணவனிடம் இந்த டெலிபோன் சம்பாஷணையைச் சொன்னாள். கணவன் உடனடியாகப் போலீசுக்குத் தகவல் கொடுத்தான்.

மறுநாள் காலையில் சான்பிரான்ஸிஸ்கோ கடற்கரையில் இருபதே வயதான ஆரன் காண்டியின் உடல் கடலில் மிதந்து கரை தட்டியிருந்தது. கப்பல் ஒன்றில் அவன் வேலை செய்துகொண்டிருந்தான். அந்தக் கப்பல் சான்பிரான்ஸிஸ்கோ துறைமுகத்துக்கு ஆறு நாட்களுக்குமுன் வந்து சேர்ந்தது. உடனடியாக அவன் தன் அடையாள பேப்பர்களையோ உடைகளையோ எடுத்துக் கொள்ளாமல் கப்பலை விட்டுக் கிளம்பினான். அவன் எங்கே போனான், யாருடன் போனான் என்ற தகவல்கள் கிடைக்கவேயில்லை. பிரேத விசாரணையின் போது அவன் கடலில் விழுந்து இரண்டு நாட்களாகியிருக்கும் என்று கணிக்கப்பட்டது. யார் அவனுடைய தாயாருடன் டெலிபோனில் பேசினார்கள் என்றும் கண்டுபிடிக்க முடியவில்லை.

"இந்தச் சம்பவம் என் மனத்துக்கு இன்னும் புரியாத புதிராகவே இருக்கிறது. விடை காணாத மர்மம். இதைப் படமாக்கினால் நம்ப முடியாத அம்சங்கள் தான் மிஞ்சும் என்ற காரணத்தினால் இதை நான் ஒதுக்குகிறேன்" என்கிறார் ஹிட்ச்காக்.

## 2

1917ம் ஆண்டு. நேபாளத்தில் வசித்து வந்த ஆங்கிலப் பாதிரிகளுக்கு ஓர் அவசர அழைப்பு வந்தது. மரணப் படுக்கையிலிருந்த ஒரு பௌத்த சந்நியாசிதான் அந்த அழைப்பை விடுத்திருந்தார். பாதிரிகள் அந்தப் பௌத்த சந்நியாசியின் படுக்கையை நெருங்கியபோது அங்கே பதினொன்று வயதான ஓர் ஆங்கிலேயச் சிறுவனைக் கண்டார்கள். "இந்தச் சிறுவனை நான் 1910ம் ஆண்டில் இங்கிலாந்திலுள்ள விம்பிள்டன் நகரத் தெருவிலிருந்து அபகரித்துக் கடத்தி வந்துவிட்டேன்" என்று அந்தச் சந்நியாசி சொன்னார். அதற்கு மேல் ஏதும் விளக்கம் கொடுப்பதற்குமுன் அவர் உயிர் பிரிந்து விட்டது.

அந்தப் பையனுக்கு இங்கிலாந்து வாழ்க்கையைப் பற்றி ஒன்றும் நினைவில் இல்லை. தெரிந்த ஆங்கிலத்தையும் தட்டுத் தடுமாறிப்பேசினான்.

பாதிரிகள் இதுவிஷயம் பற்றிப் பிரிட்டிஷ் போலீஸுக்குத் தகவல் கொடுத்தார்கள். போலீஸ் விசாரணையும் தொடங்கியது.

1910ம் ஆண்டில் விம்பிள்டன் பகுதியில், பல சிறுவர் சிறுமியர் காணாமல் போயிருக்கிறார்கள். அந்தக் குடும்பத்தினர்கள் யாராலும் நேபாளத்திலிருக்கும் வெள்ளைச் சிறுவனை அடையாளம் கண்டு கொள்ள இயலவில்லை. மூன்று வருட விசாரணைக்குப் பிறகு போலீஸார் இதை ஒரு 'விவரமில்லாத கேஸ்' என்று கைவிட்டு விட்டார்கள்!

"ஒரு பௌத்த சன்யாசியால் அந்தளவு சுலபமாக ஓர் ஆங்கிலேயச் சிறுவனை விம்பிள்டன் நகரத் தெருவிலிருந்து அபகரித்து வரமுடியுமா? கப்பலில் அந்தச் சிறுவனைக் கடத்தி வரும்போது வாரக்கணக்கில் ஒருவர் கூடவா சந்தேகப்படவில்லை? குறிப்பாக அந்த ஆண்டில் மாத்திரம் ஏன் நிறையக் குழந்தைகள் காணாமற் போயிருக்கின்றனர்? ஏழு வயதில் கடத்தி வரப்பட்ட அந்தப் பையனுக்குக் கொஞ்சம் கூடவா பழைய ஞாபகம் இருக்காது? பௌத்த சன்யாசி ஏதாவது உள் நோக்கத்துடன் பொய் சொன்னாரா? அப்படியானால் பாதிரியார்களைக் கூப்பிட்டு ஏன் அந்தப் பொய்யைச் சொல்ல வேண்டும்?"

கொஞ்சம் கூட அவிழ்க்க முடியாத பல புதிர்கள் இருந்ததால் இந்தச் சம்பவத்தையும் ஹிட்ச்காக் ஒதுக்கி விட்டார்.

## 3

1929ம் ஆண்டு மார்ச் மாதம் 9ந் தேதி மாலை. லாண்டரி சொந்தக்காரனான இஸிடோர், நியூயார்க் நகரத்தின் ஒரு தெருவிலுள்ள ஒரு கடையில் துணிகளுக்கு இஸ்திரி போட்டுக் கொண்டிருந்தான். அக்கம் பக்கத்திலுள்ளவர்களிடம் நிலவிய விரோதத்தாலும் திருட்டுப் பயத்தாலும், அவன் ஜன்னல்களையும் கதவையும் உட்பக்கம் தாளிட்டுக் கொண்டு இஸ்திரி போடுவதில் ஈடுபட்டிருந்தான். அந்தி மயங்கும் வேளையில் உள்ளேயிருந்து அலறல் ஒலி கேட்டது. கதவைத் தட்டிப் பார்த்து அது திறக்கப் படாத நிலையில் பக்கத்து வீட்டு மாது போலீசுக்குத் தகவல் கொடுத்தாள். போலீஸார் வந்து பார்த்தார்கள். ஜன்னல்கள் கதவு எல்லாம் உட்பக்கம் தாளிடப்பட்டிருந்தன. காற்றுப் புகுவதற்காக மேல்தளத்தில் ஒரு சிறு துவாரம் தான் இருந்தது. ஒரு சிறு பையனை உற்சாகப்படுத்தி அந்தத் துவாரத்தின் வழியாக உள்ளே இறக்கி உட்பக்கத்திலிருந்து கதவைத் திறக்கச் செய்தார்கள்.

இஸிடோர் மூன்று குண்டுகளால் துளைக்கப்பட்டுக் கீழே உயிரிழந்து விழுந்து கிடந்தான். அவனுடைய பணப் பெட்டியிலிருந்த பணம் அப்படியே இருந்தது. உள்ளே போட்டிருந்த தாழ்ப்பாள்களும் அப்படியே இருந்தன. சுடுவதற்கு உபயோகப் படுத்தப்பட்ட துப்பாக்கி அங்கு இல்லை. சுவர்களில் எந்த விதமான மர்ம வழிகளும் இல்லை. ஆனாலும் உள்ளே துப்பாக்கியுடன் வந்தவன் இஸிடோருக்குச் சமீபத்தில் நின்று சுட்டிருக்கிறான். அவன் உருவத்தில் சிறியவனாக, சித்திரக் குள்ளனாக இருந்து, மேல்தளத்துத் துவாரத்தின் வழியாக உள்ளே குதித்திருந்தாலும் அவன் அந்த வழியாகவே மேலே திரும்பிப் போவது அவ்வளவு சாத்தியமான விஷயமில்லை. இஸிடோர் யாரால், எதற்காகக் கொல்லப்பட்டான் என்று கண்டுபிடிக்கவே முடியவில்லை.

"நடந்த சம்பவம் தான்! ஆனால் நம்பமுடியவில்லையே! ஒரு முடிவு தெரிய வேண்டாமோ?" என்கிறார் ஹிட்ச்காக்.

## 4

1924ம் ஆண்டு ஜூலை மாதம் 24-ம் தேதி. இரண்டு பிரிட்டிஷ் விமானிகள் தங்கள் விமானத்தில்





ஈராக் நாட்டுப் பாலை வனப் பிரதேசத்தின் மீது பறந்து கொண்டிருந்தார்கள். அந்த நாளில் அராபிய நாடுகளுக்கும் பிரிட்டனுக்கும் ராஜீய உறவுகள் சரியாக இல்லை.

அவர்கள் விமானம் பாலைவனத்தில் இறங்கியது. காரணம் தெரியவில்லை. விமானத்தை விட்டு இறங்கிய டே, ஸ்டூவர்ட் ஆகிய இரு விமானிகளும் சுமார் நாற்பது கஜ தூரம் சேர்ந்து நடந்த காலடி அடையாளம் இருந்தது. அப்புறம் அந்த அடையாளம் திடீரென்று முடிந்துவிட்டது. விமானத்தில் ஒரு பழுதும் இல்லை. வற்புறுத்தல் மீது இறங்கியதாகவும் தெரியவில்லை. விமான எண்ணெய் டாங்கிகளில் பாதிக்கு மேல் எண்ணெய் இருந்தது.

அந்த இடத்தைச் சுற்றி நூறு மைல் வட்டாரத்துக்கு ஒரு சதுர அங்குல இடம் பாக்கியில்லாமல் தேடி விட்டார்கள். அந்த விமானிகள் போன இடம் இன்று வரை தெரியவில்லை. அப்புறம் அரபு நாடுகளுக்கும் பிரிட்டனுக்கும் இடையே ராஜீய உறவுகள் கூட' சரியாகப் போய்விட்டது. ஆனாலும் விமானிகள் அகப்படவில்லை.

"விமானிகள் அகப்பட்டு அவர்கள் எப்படி எங்கு போனார்கள் என்று தெரிந்தாலல்லவா இந்தச் சம்பவத்தில் படிந்துள்ள மர்மங்கள் திரைப்படத்தில் கலை கட்டும்! அது வரை நான் காத்திருக்கத் தயார்" என்கிறார் ஹிட்ச்காக்.

## 5

1926-ம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 7ம் தேதி மாலை நேரம். இங்கிலாந்தின் பிளாக்பூல் பகுதியிலுள்ள மிட்லண்ட் பாங்கில் அலுவல்கள் முடியும் தருணம். அந்த நேரத்தில் டிராம் கம்பெனி ஊழியர் ஒருவர் எண்ணூறு பவுன்கள் கொண்ட பெரிய தோல் பையுடன் வந்து சேர்ந்தார்.

பாங்குக் கவுண்டருக்கு அந்த ஆசாமி வருவதற்கு வாயில் கதவுக்கு அருகிலுள்ள காவலாளி கதவைத் திறந்து அவரை உள்ளே அனுப்பினான். உள்ளே கவுண்டர் இருக்கும் ஹாலில் காத்திருந்த இருபத்தைந்து வாடிக்கைக்காரர்கள், அந்த ஆசாமி பெரிய பையைக் கவுண்டரில் வைப்பதைப் பார்த்தார்கள். பாங்குக் கிளார்க்கும் பார்த்தார்!

மீண்டும் அந்த ஆசாமி வெளியே போய்க் காரிலிருந்து அடுத்த பையை எடுத்து வரப் போனார். காவலாளி கதவைத் திறந்து அவரை வெளியே அனுப்பினான். ஆனால் அவர் திரும்பி வந்தபோது அவர் கவுண்டரில் வைத்துப் போன பையைக் காணோம். அரிசிச் சாக்குப் போன்ற பெரிய பை. பூட்டுப் போட்டது! மாயமாக மறைந்து விட்டது.

வாயில் காவலாளி உடனே கதவைச் சாத்தி உட்பக்கம் தாளிட்டான். அந்த ஹாலில் இருந்தவர்கள் யாரும் பணப்பை அகப்படும் வரை நகரக் கூடாது என்று உத்தரவு போட்டு விட்டார் பாங்கு அதிகாரி. போலீஸ் அதிகாரிகள் வந்து அந்தப் பாங்குக் கட்டடத்தை அலசி அலசித் தேடினார்கள். பிரயோசனமில்லை. அத்தனை பெரிய பை எப்படி மாயமாக மறைந்தது? யாராலும் ஊகிக்க முடியவில்லை. கடைசியாக அந்தப் பை பாங்குக்குப் பக்கத்திலுள்ள சந்தில் ஒரு பாலத் தடியிலிருந்து அன்று இரவே மீட்கப்பட்டது. கலைத்தில் திறக்க முடியாதபடி சிக்கல்கள் நிறைந்த அந்தப் பையின் பூட்டு பூட்டினபடியே இருந்தது. பைக்கு எந்தவிதமான சேதமுமில்லை. ஆனால் பைக்குள் இருந்த கரன்சி நோட்டுக்கள் எல்லாம் மறைந்திருந்தன. நாணயங்கள் மாத்திரம் எஞ்சியிருந்தன.

"எப்படி அந்தப் பணப் பை அத்தனை பேர் பார்வைக்கும் தப்பி வெளியே போயிருக்கும்? அத்தனை குறுகிய காலத்துக்குள் பூட்டுக்குச் சேதமில்லாமல் பையிலுள்ள நோட்டுக்கள் எப்படி மாயமாய் மறைந்திருக்கும்? எனக்கே இந்த மர்மம் புரியாதபோது படம் பார்ப்பவர்களுக்கு எப்படி நான் இதைப் புரியவைப்பது?" என்கிறார் ஹிட்ச்காக்! - மேனு

(ஆதாரம்: காரனெட்)



### "ஹிட்ச்காக் மர்மம்!"

மர்மக் கதைகளைத் திரைப்படங்களாக்கி உலகப் புகழ் பெற்றுள்ள ஆல்பிரெட் ஹிட்ச்காக்குக்கு, ஒரு பழக்கம் உண்டு. தாம் தயாரிக்கும் எல்லாப் படங்களிலும் ஏதோ ஒரு காட்சியின்போது ஒரு விநாடி தம் தலையை நீட்டிவைப்பார் அவர். "லைப் போட்" என்ற ஒரு படத்தைத் தயாரித்தார். அதில் ஒன்பது நடிகர்களுக்கே பங்கு இருந்தது. அவரது வழக்கப்படி தம் தலையைக் காண்பிப்பதற்கு அந்தப் படத்தில் இடமே இல்லாதிருந்தது. ஹிட்ச்காக் தமது வழக்கமான ஆசையை நிறைவேற்றிக் கொள்ள முடியாத ஒரு சந்தர்ப்பம் வந்து விட்டது என்றே படப் பிடிப்பில் ஈடுபட்ட அனைவரும் கருதினார்கள். ஆனால் படத்தின் கடைசிக் கட்டத்தில் நடிகர் ஒருவர் பத்திரிகையைப் பார்க்கும் காட்சி வந்தது. அந்தப் பத்திரிகையில் ஒரு விளம்பரம் காணப்பட்டது. அந்த விளம்பரத்தில் ஹிட்ச்காக் படமும் இருந்தது.

— எஸ். ராமு





1, 2, 3. சென்னை கடற்கரை திலகர் கட்டத்தில் ஜல சமுத்திரத்துடன் போட்டியிடும் வகையில் ஜன சமுத்திரம் சென்ற 26ந் தேதி கூடியிருந்தது. தங்களுக்கு ஆளும் வாய்ப்பை அளித்த மக்களுக்கு நன்றி செலுத்த தி. மு. க.வினர் அக் கூட்டத்தை ஏற்பாடு செய்திருந்தனர். ராஜாஜி, திரு அண்ணாதுரை, காயிதே மில்லத், திரு ம. பொ. சி, திரு மூக்கையாத் தேவர், திரு நல்ல சிவம், திரு வேங்கடராமன் முதலியவர்கள் அரிய உரை நிகழ்த்தினர். சென்னை மேயர் இரா. சம்பந்தம் கூட்டத்துக்குத் தலைமை வகித்தார்.

4. ரஷ்யாவிலிருந்து ரஷ்ய மந்திரிகளின் தலைவர் கோஸிஜின் பிரிட்டனுக்கு எட்டு நாட்கள் விஜயம் செய்த பொழுது எலிஸபெத் ராணி அவருக்குத் தம் லண்டனிலுள்ள பக்கிங்ஹாம் அரண்மனையில் விருந்தளித்துக் கௌரவித்தார்.







# புத்தக உலகில் புதுமை



தமிழில் சிறந்த நூல்களை அளிக்க ['வாசகர் வட்டம்' தோன்றிய கதை இதோ:

''எங்கள் ஊரில் ஒரு 'டிரக் ஸ்டோர்ஸ்' வைத்திருக்கிறோம்.''

[மருந்துக் கடைதானே? எந்த ஊரில்தான் இப்பொழுது மருந்துக் கடையில்லை? இதில் என்ன அதிசயம் ?]

''இதில் ஓர் அதிசயம் என்னவென்றால்....''

[....கிடைக்காத மருந்துகளே கிடையாது என்று சொல்லப் போகிறார். வியாபாரம் என்று இறங்கி விட்டால் நான்கையும்தான் வாங்கிச் சேர்த்து வைத்துக் கொள்ளத் தெரிய வேண்டும்!]

''....இரத்தச் சேமிப்பு நிலையம் செய்வது போன்ற ஒரு காரியத்தைச் செய்கிறோம்! அதாவது, நோயாளிகளின் நோயைத் தீர்க்க டாக்டர்கள் எத்தனையோ மருந்துகள் எழுதிக் கொடுக்கிறார்கள் இல்லையா? அவற்றில் ஓரளவு உபயோகித்த உடனேயே குணம் கண்டு அவர்கள் அந்த மருந்தை நிறுத்திவிருக்கலாம். அல்லது அந்த மருந்து தங்கள் தேகத்துக்கு ஒத்துக் கொள்ளாததாலும் நிறுத்தியிருக்கலாம். அத்தகைய மருந்துகளை நாங்கள் எங்கள் டிரக் ஸ்டோரில் சேமிக்கிறோம். தங்களுக்கு உபயோகமில்லாத மருந்துகளை எங்களிடம் கொடுங்கள் என்று மக்களிடம் கோருகிறோம். இப்படிக் கிடைக்கும் மருந்துகளை, நாடி வருபவர்களுக்கு மிகக் குறைந்த விலையில் கொடுக்கிறோம். இதனால் ஏற்படும் நன்மை என்னவென்றால், எந்த மருந்தும் வீணாவதில்லை; தாம் தோன்றிய பலனையும் பெறுகின்றன. அதோடு தேவைப்படுகிறவர்களும் குறைந்த செலவில் பயன் பெறுகிறார்கள்!''

[பேஷ், பேஷ்! இது அருமையான காரியமாயிருக்கிறதே! ஒவ்வொரு ஊரிலும் இப்படி ஒரு டிரக் ஸ்டோர் இருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்!]

''ஆரம்பத்தில் இதை ஏதோ பைத்தியக்காரக் காரியம் என்றுதான் ஜனங்கள் எண்ணினார்கள். சிறிதும் அக்கறை காட்டவில்லை. நாளடைவில், இந்த நல்ல பிரசாரத்துக்கு மக்கள் செவிசாய்க்கத் தொடங்கவே, மருந்துக் கடைக்காரர்களின் பொறாமைக்குக்கூட நாங்கள் பாத்திரமாகும்படி ஆகிவிட்டது. இந்த மருந்துக்கடையின் பெயர்ப் பலகை வெளியே தெரியக் கூடாது என்பதற்காகக் கூட அவர்கள் பல சூழ்ச்சிகள் செய்து பார்த்தார்கள்!''

ஃ ஃ ஃ

''நாங்கள் ஒரு 'கன்ஸ்யூமர்ஸ் கோவாப்ரேடிவ் ஸ்டோர்' நடத்துகிறோம்.''

[அந்தக் காலத்தில் பலசரக்குக் கடைகளில், இல்லாத பொருள் என்றாலும் 'இல்லை' என்று சொல்ல மாட்டார்களாம். 'அப்புறம்' என்று கேட்டு அடுத்த பொருளை — அதாவது இருக்கும் பொருளைத் தருவார்களாம். ஆனால்

இந்தக் காலத்தில்தான் கடை என்று ஒன்று இருந்தால் போர்டு என்று ஒன்று மாட்டிப் பொருள்களின் பெயர்களை யெல்லாம் எழுதி அதற்கு நேர் 'இல்லை' என்று எழுதி வைக்கிறார்களே! அதையே இவர்களும் செய்வார்களாக்கும்!]

''எங்கள் வியாபாரத்தின் மூலம் மற்ற வியாபாரிகள் பதுக்கல் முறையை அனுஷ்டிக்காமல் பார்த்துக் கொள்கிறோம். அதாவது நியாய விலையில் எந்தப் பொருளையும் இல்லையென்று கூறாமல் கொடுக்க முயல்கிறோம். இதன் பலன் மற்ற வியாபாரிகள் தங்கள் தொழில் படுத்துப் போகாமல் பார்த்துக் கொள்ளுகிறார்கள். எல்லா இடங்களிலும் சரக்குகள் வேண்டிய அளவுக்குக் கிடைக்க வழி ஏற்படுகிறது.

ஃ ஃ ஃ

''செண்டிரல் வெல்ஃபேர்போர்டு-அதாவது மத்திய நலக் குழுவின் உதவியோடு மாதர் சங்கம் ஒன்று இயங்குகிறது. இதில் பெண்களுக்குத் தையல் வேலை கற்றுத் தந்து, அதன் மூலம் அவர்களுடைய வாழ்க்கைக்கு ஒரு பயன் கிட்டுமாறும் செய்திருக்கிறோம்.

''அவர்கள் தயாரிக்கும் ரெடிமேடு ஆடைகள் பல பொதுநலப் பணிகளுக்கும் பயன்படுகின்றன. இவற்றின் விற்பனை மூலம் வரும் வருவாய் பல எளிய பெண்களின் வாழ்க்கையை வளப்படுத்தப் பயன்படுகிறது!''

['இப்படி எல்லாம் எந்த ஊரில் நடக்கிறது?' என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா? பேட்டி காணச் சென்ற எங்களாலேயே இன்னும் கேட்க முடியவில்லையே! அதனால் ஆக்கப் பொறுத்த நீங்களும் எங்களைப் போல் ஆறப் பொறுக்கத்தான் வேண்டும்!]

''அடாடா! தேநீர் ஆறியிருக்கும் போலிருக்கிறதே! இது எங்கள் எஸ்டேட்டின் டீ.''

[தேநீரிலும் சுவையான பேச்சு; பேச்சிலும் சுவை மிகுந்த தேநீர்.]

ஃ ஃ ஃ

''நானும், என் கணவரும் கோட்டயத்திலிருந்து சென்னை வந்த பொழுது ஒரு முறை பிரபல எழுத்தாளர் ஒருவரைப் பார்க்க அவர் வீட்டுக்குச் சென்றோம்.''

[அப்பாடா! இப்பொழுது புரிகிறதல்லவா? மேலே கூறப்பட்ட மாதர் சங்கப் பணிகளனைத்தும் கோட்டயத்தில்தான் நடைபெறுகின்றன என்று!]

''என் கணவர் வளமான குடும்பத்தைச் சேர்ந்தவர். எழுத்தை மதிப்பவர்; எழுத்தாளர்களிடம் ஆர்வம் கொண்டவர். திருவல்லிக்கேணியில் அந்த எழுத்தாளர் வாழ்ந்த பகுதியையும், புறாக்கூண்டு போன்ற ஜாகையையும் கண்ட அவர் மாய்ந்து போய் விட்டார்! திரும்பும்பொழுது, 'எழுத்தை ஆளும் இவர்களை இவ்வளவு வறுமை வாட்டுவானேன்?' என்று என்னைக் கேட்டுத் துளைத்தார். நான் என்ன பதில் சொல்வது?

''இதற்கு ஏதாவது செய்ய வேண்டும் என்று எண்ணிய அவர் மனத்திலே 'வாசகர் வட்டம்' தோன்றியது. வாசகர்களின் உதவியோடு, எழுத்தாளர்களுக்குப் பணி புரிய ஒரு திட்டம் தீட்டினார். அதிகபட்ச உரிமைத் தொகை - அதாவது ராயல்டி - கொடுத்து எழுத்தாளர்களின் சிறந்த நூலை வெளியிடுவது என்பதுதான் அந்தத் திட்டம்.

''இதில் லாப நோக்கம் சிறிதும் கிடையாது. சிறந்த நூல்களைச் சிறப்பான முறையில் கொண்டு வரவேண்டும் என்பதுதான் குறிக்கோள்.''

[அட! அப்படியும் இருக்குமோ? புத்தகங்கள் தயாரிக்கப்பட்டிருக்கும் முறையையும் விலையையும் பார்த்தால் உண்மையாகத்தான் இருக்கும் என்று தோன்றுகிறது!]

''உண்மையாகச் சொல்லுகிறேன். புகழை நாடிச் சொல்லவில்லை. ஓர் எழுத்தாளருக்கு உரிமைத் தொகையில் ஒரு பகுதியை முன் பணமாகக் கொடுக்க எண்ணி ஒரு தொகையைச் செக்காக எடுத்துச் சென்றோம். எத்தனையோ புத்தகங்கள் வெளியிட்டிருக்கும் அவர் கணிசமான ஒரு தொகையை இப்பொழுதுதான் முதலாவதாகப் பார்ப்பதாகக் கூறினார்.

''இலக்கியத்தின் எல்லாத் துறைகளுக்கும் சம வாய்ப்பு அளித்து ஆண்டு ஒன்றுக்கு ஐந்து நூல்கள் கொண்டு வருகிறோம். வாசகர் வட்டத்தின் அங்கத்தினர்கள் ஆண்டு ஒன்றுக்கு இருபத்தைந்து ரூபாய் கட்டினால் புத்தகங்கள் தாமாகவே அவர்கள் வீடு தேடிச் செல்ல வழிவகை செய்து வைத்திருக்கிறோம்!

'' ஆயினும் இது வரை எங்களுக்கு இருபதினாயிரம் ரூபாய்க்கும் மேல் நஷ்டம். லாபம் இல்லாவிட்டாலும், நஷ்டம் ஏற்படாமல் இருந்தால்தானே உற்சாகம்

---



### நகை(ப்)பூட்டும் செய்தி

பிரபல வியாபாரி ஒருவர் தம்முடைய கடையில் திருட்டுப் போய் விட்டதாகப் போலீசுக்குத் தெரிவித்தார். போலீஸ் அதிகாரி அவரைப் பார்த்துக் கேட்டார், ''உங்களுடைய கடையில் எவ்வளவு ரூபாய் மதிக்கத் தக்க பொருள்கள் திருட்டுப் போயிருக்கின்றன?'' என்று.

''ரொக்கமாக இரண்டாயிரமும், பொருளாக ஆயிரமும் திருட்டுப் போயிருக்கின்றன.''

''உங்களுக்கு என்ன வியாபாரம்?''

''பூட்டு வியாபாரம்.''

''திருட்டு எப்படிப் போயிருக்கிறது?''

''பூட்டை உடைத்து!'' என்று பதில் சொன்னார் அந்தப் பிரபல பூட்டு வியாபாரி.

— கி. அ. சுப்பிரமணியன்

## மேதையும் மதலையும்



மேதையும் குழந்தையும் ஒன்றுதான். ஏனென்றால், இருவரையும் இந்த உலகத்தால் புரிந்து கொள்ள இயலவில்லை.

— புல்வர்



நீ குழந்தையைப் போலவே இருக்கப் பாடுபடலாம்; ஆனால் உன்னைப்போல அவர்களை ஆக்க முயலாதே.

—கலீல் கிப்ரான்

அனுப்புதல் : அகிலேசன்; அ. பா.

பிறக்கும்? இதை மனத்தில் கொண்டு பொறுப்புள்ள அமைச்சர் ஒருவரிடம் இந்நூல்களைக் காட்டினேன். அரசாங்க உதவி பெற வேண்டும் என்ற நோக்கத்தில் அல்ல. என்ன சொல்கிறார் என்று பார்ப்பதற்காக. 'இத்தனை நல்ல புஸ்தகங்களையா வாங்குவதில்லை ?' என்று கேட்டார் அவர். 'ஆம், நல்ல புஸ்தகங்களாக இருப்பதால்தான் வாங்குவதில்லை !' என்று ஓர் அழுத்தம் கொடுத்துப் பதில் கூறினேன்.''

ஃ ஃ ஃ

பேட்டி காணச் சென்ற எங்களுக்குக் கேள்வி கேட்கும் சிரமமே வைக்கவில்லை அவர். கடகடவென்று கடல் மடை திறந்தாற்போலப் பேசிக் கொண்டே போனார். ஒவ்வொரு சொல்லிலும் என்ன அழுத்தம், ஒவ்வொரு பேச்சிலும் என்ன தீர்மானம் என்கிறீர்கள் ! குரலில் பெண்மையின் இனிமை தொனித்தாலும் சொல்லாட்சியில் காம்பீர்யம் தாண்டவமாடியது.

நல்லதையே காண வேண்டும், நல்லதையே கேட்க வேண்டும், நல்லதையே கூறவேண்டும் என்னும் ஆதார சுருதியே அந்தப் பேச்சின் அடித்தளத்தில் ஒலித்தது.

நாட்டின் அவல நிலை ஒவ்வொன்றையும் எடுத்துக் கூறி, 'இப்படி நடந்தால் என்ன? நடக்கக் கூடாதா?' என்று பல்லவியெனக் கேட்ட ஒவ்வொரு சொல்லிலும் ஏக்கத்தின் சாயை படர்ந்திருந்தது.

'நமது பள்ளிகளிலும் மிஷனரி உணர்வோடு ஒழிந்து சமுதாயம் பற்றியும் மறைகளின் பெருமை பற்றியும் சொல்லிக் கொடுக்கக் கூடாதா? வாழப் பயன்படுவதோடு சமுதாயத்துக்கும் உதவும் கல்வி முறைகள் பயில்விக்கக் கூடாதா?'

இப்படிக் கூறியவர் கல்லூரிகளில் மாணவிகளுக்குக் குடும்பவியல் கற்பிப்பது பற்றி ஒன்று கூறினார்.

'சமையற் கலையைக் கற்றுத் தருபவர்கள் மரக்கறி மட்டுமே உண்பவர்களுக்குக்கூட அந்நிய பதார்த்தம் சமைக்கக் கற்றுத் தருகிறார்களே, இது தேவைதானா?' என்று கேட்டார். [நியாயம் தானே ? இந்தக் கட்டாயப் படிப்பு எதற்கு?]

பேட்டி காணப் போன நாங்கள் எப்படியும் ஒரு கேள்வியாவது கேட்டு விடுவது அவரை என்று தீர்மானித்து. ''உங்களுக்குப் பிடித்தது...?'' என்றோம்.

''இயற்கையின் எழிலை ரசிப்பது. அந்த எழிலில் இன்பம் காண்பது. இது எனக்கு அப்பா சொல்லிக் கொடுத்த பாடம் !'' என்றவர், ''அதோ பாருங்கள்! மாலைக் கதிரவன் மலைவாயில் விழும் அழகை! தன் பணியைச் செவ்வனே புரிந்து இளைப்பாறச் செல்லும் அவனுக்குச் சந்தியாதேவி எடுக்கும் ஆரத்திதான் அதோ தெரிகிறதே, அந்தச் செவ்வானம்!'' என்று தொடங்கி விட்டார்.

''சிறு பிராயத்தில் தந்தை என்னைக் கடற்கரைக்கு இட்டுச் செல்வார். 'அழகு என்றும் நிலையானது, இளமை மாறுவது. அள்ள அள்ளக் குறையாதது. பார்க்கப் பார்க்கத் தெவிட்டாதது. இந்த அழகு ரசனையிலே இன்பம் துய்க்க முற்பட்டால், உலகத்தையே அழகு மயமாகக் காணலாம். உலகையே இன்பமயமாகச் செய்து நாமும் இன்பம் பெறலாம்' என்று கூறுவார். அது என் மனத்தில் ஆழப் பதிந்திருக்கிறது.''

இத்தகைய அழகான கருத்துக்களைக் கொண்டிருப்பவர் யார் என்றுதானே கேட்கிறீர்கள்? சொல் வன்மை படைத்த நாவலர், தேச பக்த தீரர் சத்தியமூர்த்தி அவர்களைத் தெரியாதவர் யாரேனும் இருப்பாரா? அவரது ஒரே அருமை மகளான சௌ. லக்ஷ்மிதான். எவ்வகையிலும் சிறந்த வாழ்க்கைத் துணைவராக ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியை அடைந்திருக்கிறார். பெண்மையின் மென்மையும் பெருமையும் துலங்கும் ஸ்ரீமதி லக்ஷ்மி கிருஷ்ணமூர்த்தியின் மனத்திலே ஆசைக்கு ஒரு பெண் இல்லையே என்ற எண்ணம் தலையெடுத்து நிற்கிறதென்றாலும் ஆண் சந்ததிகளைப் பெற்ற அகமகிழ்வு தாண்டவமாடவே செய்கிறது.

— ரா. வீ.

### ஸ்ரீஹரியின் வெளியூர் பயணம்

10—3—67 வெள்ளி இரவு சென்னையிலிருந்து புறப்பட்டு பம்பாய் செல்கிறார். அங்கு 26/208 மீனுதனில் (போன் 742011) ஞாயிறு காலை சேர்ந்து தங்குகிறார். 14–3–67 இரவு அங்கிருந்து புறப்பட்டு 16-3-67 சென்னை சேருகிறார்.




**● பாராளுமன்ற உறுப்பினர் ஒரு கேள்வி கேட்டால் நமக்கு ஆகும் செலவு ரூ. 135.**

**பா**ராளுமன்றம் என்பதொன்றும் நமக்குப் புதிய விஷயமல்ல என்பதை ரிக்வேதத்தைப் படித்தவர்கள் உணருவார்கள். ஸமிதி—ஸபா என்ற இரண்டு அமைப்புக்கள் — நமது லோக சபா, ராஜ்ய சபாவைப் போன்றவை—ஆதி நாட்களிலேயே இருந்தன என்று அறிகிறோம். இதனால் அக்காலத்தில் அரசர்கள் தங்கள் இஷ்டப்படி நாடாளவில்லை என்பது நிரூபணமாகிறது.

இன்றைய வட்ட வடிவமான பாராளுமன்றக் கட்டடம் 1927லேயே கட்டி முடிக்கப் பெற்றது. இதைக் கட்டி முடிக்க ஆறு ஆண்டுகளாயின. கட்டடத்தின் வெளிப்புறத்தில் மொத்தம் நூற்றுப் பதினறு தூண்கள் உள்ளன. ஒவ்வொன்றும் இருபத்தேழு அடி உயரம் கொண்டது. இந்த மாபெரும் வட்டக் கட்டடத்தின் சுற்றளவு அரை மைல்; நடுக் கூடத்தில் வட்டக் கூரையின் விட்டம் நூறு அடி!

பாராளுமன்றத்தின் உள்ளே ஓவிய வடிவில் இருக்கும் பெருந் தலைவர்கள் மகாத்மா காந்தி, மோதிலால் நேரு, மாளவியா, தாதாபாய் நௌரோஜி, திலகர், லஜபதிராய், நேதாஜி, பட்டேல், ஸி. ஆர். தாஸ், தாகூர், சரோஜினிநாயுடு, மௌலானா ஆஸாத் ஆகியோர்.

எத்தனையோ விஷயங்களைப் பாராளுமன்றம் விவாதித்தாலும், லோகசபை, ராஜ்யசபை ஆகியவற்றை நிர்வகிப்பதற்காக ஆகும் செலவு பற்றி ராஜ்ய சபையோ அல்லது லோக சபையோ விவாதிக்க முடியாது! கணக்குகளை ஆடிட்டர் ஜெனரல் சரி பார்ப்பார். அவரது அறிக்கையைப் பாராளுமன்ற உறுப்பினர்கள் பார்வையிடலாம். அதில் ஏதேனும் சந்தேக விளக்கம் தேவையானால் சபாநாயகரை அவரது அறையில் தனிமையில் பார்த்துப் பேச வேண்டும்.

1964ம் ஆண்டில் லோகசபைக்கு மட்டும் ஆன நிர்வாகச் செலவு ஒரு கோடியே நாலு லட்சம் ரூபாய். லோக சபையும் ராஜ்ய சபையும் ஒரு மணி நேரம் கூடினால் அதனால் நாட்டுக்கு ஆகும் செலவு ரூபாய் பத்தாயிரம்! வழக்கமான காலத்தில் இல்லாமல் பாராளுமன்றத்தின் ஒரு விசேஷக் கூட்டம் ஒரு வாரத்துக்கு நடைபெற்றால் மக்களுக்குச் செலவாகும் தொகை ரூபாய் ஐந்து லட்சம்! இதில் எழுநூற்று நாற்பது பாராளுமன்ற அங்கத்தினர்களின் போக்குவரத்துச் செலவும் அவர்களுக்குப் பதின்மூன்று நாட்களுக்கு ஒரு நாளைக்கு முப்பத்தொரு ரூபாய் வீதம் 'அலவன்ஸு'ம் உள்ளடக்கம். ஒரு வாரம் விசேஷக் கூட்டம் நடைபெற்றாலும் — அதற்கு முன்பு மூன்று நாட்கள், பின்பு மூன்று நாட்கள், ஆக — பதின்மூன்று நாட்களுக்குண்டான 'அலவன்ஸ்' அங்கத்தினர்களுக்குத் தரப்பட வேண்டும்!

பாராளுமன்றம் கூடும் நாட்களில் கேள்வி நேரம்தான் மிகவும் சுவாரசியமானது என்பது அனைவருக்கும் தெரியும். ஓர் ஆண்டில் கேள்வி நேரத்துக்காகமட்டும் இருபது லட்சம் ரூபாய் செலவாகிறது. அங்கத்தினர்களின் பதினையாயிரம் கேள்விகளுக்கு உண்டான பதிலைச் சேகரிக்கத்தான் ஆகிறது இந்தச் செலவு. ஓர் அங்கத்தினர் ஒரு கேள்வி கேட்டால் பதிலைப்பெற நமக்கு (வரி கொடுப்பவர்களுக்கு) ரூபாய் நூற்று முப்பத்தைந்து செலவாகும் என்று கணக்கிட்டிருக்கிறார்கள்! ஓர் ஆண்டில் பாராளுமன்றம் ஆறு மாதங்களுக்குச் சற்று அதிகமான கால அளவுக்குக் கூடுகிறது. இதில் பட்ஜெட் விவாதங்களே அதிக காலத்தை எடுத்துக் கொள்கின்றன. இதற்கே மூன்று மாதங்களுக்கு மேலாகி விடுகின்றன. ஆக, பாராளுமன்ற உறுப்பினர்கள் தங்கள் தொகுதியின் தேவைகளைக் கண்டறிந்து நிவர்த்திக்க அவர்களுக்கு அகப்படும் காலம் ஓர் ஆண்டில் ஐந்தரை மாதங்களே.

மேலே குறிப்பிட்ட 'அலவன்ஸ்' தவிர ஒவ்வொரு பாராளுமன்ற அங்கத்தினருக்கும்

மாதச் சம்பளமாக ஐந்நூறு ரூபாய் கிடைக்கிறது. இது தவிர ஒரு நாளைக்கு அவர் பத்து முறை இலவசமாக டெலிபோன் செய்யலாம்; — 'டிரங்கால்'கள் நீங்கலாக! அகில இந்தியாவிலும் இலவசமாகப் பிரயாணம் செய்ய முதல் வகுப்பு ரயில்வே பாஸ் தரப்படுகிறது ஒவ்வோர் அங்கத்தினருக்கும். இதில் இன்னொரு வசதியும் உண்டு. அவர்கள் செல்ல வேண்டிய ஊர் எழுநூற்று ஐம்பது மைல்களுக்கு அப்பால் இருந்தால் இவர்கள் விமானத்தில் செல்லலாம். ஆனால் முதல் வகுப்பு டிக்கெட்டுக்கும் விமான டிக்கெட்டுக்கும் உள்ள விலை வித்தியாசத்தை மட்டும் இவர்கள் எண்ணிக் கொடுத்துவிட வேண்டும்! புதுதில்லியில் தங்கும்போது இவர்களுக்கு வாடகை விஷயத்தில் மிகுந்த சலுகை காட்டப்படுகிறது.

பாராளுமன்ற உறுப்பினராக இருக்கும் ஐந்தாண்டு காலத்தில் ஓர் அங்கத்தினர் அறுபது நாட்கள் வரையில் மேனாடுகளுக்குச் சென்று திரும்பலாம். இதற்காகும் செலவை அவர்களே ஏற்றுக் கொள்வதானால் அரசாங்கம் ஒரு நாளைக்கு நூற்று அறுபது ரூபாய் வரை அந்நியச் செலாவணியைத் தயக்கமின்றி அனுமதிக்கிறது. அதாவது, அந்த அங்கத்தினர் ஏதாவது தூதுகோஷ்டியில் இடம் பெற்று மேனாடுகளுக்குச் செல்வதுதவிர மேற்கண்ட சலுகையும் காட்டப்படுகிறது.

பாராளுமன்றத்தில் ஓர் அங்கத்தினர் கூறும் எந்த விஷயம் பற்றியும் யாரும் ஆட்சேபனை எழுப்புவதற்கில்லை. தமக்குத் தெரியவரும் நாட்டின் பாதுகாப்பு சம்பந்தமான ரகசிய விஷயங்களைக்கூட அவர் பாராளுமன்றத்தில் கூறலாம். இதனால் தேசநலனுக்குக் குந்தகம் விளைந்து விட்டதாகக் கூறி அவர் மீது யாரும் நடவடிக்கை எடுக்க முடியாது!

பாராளுமன்றத்தில் அவ்வப்போது பல கமிட்டிகள் அமைக்கப்படுகின்றன, பல பிரச்னைகளை ஆராய. ஆனால் எப்போதுமே நிரந்தரமாக இயங்கும் கமிட்டிகள் இரண்டு. அவை 'பப்ளிக் அக்கௌண்ட்ஸ் கமிட்டி'யும், 'எஸ்டிமேட்ஸ் கமிட்டி'யுமாகும். சர்க்கார் துறை நிறுவனங்களைக் கண்காணித்து வர மற்றுமொரு நிரந்தரக் கமிட்டி அமைக்க யோசனை செய்து வருகிறார்கள்.

1962–67ல் கூடிய பாராளுமன்றத்தில் நாற்பது சதவிதம் அங்கத்தினர்கள் பட்டதாரிகள் அல்ல; பத்து சதவிதத்தினர் எஸ். எஸ். எல். ஸி.கூடத் தேறாதவர்கள்; ஐந்து சத விதத்தினருக்குத் தாய்மொழியில் சற்றுப் பரிச்சயம் உண்டு, அவ்வளவுதான். பெண் அங்கத்தினர்கள் 7.5 சத விதத்தினர். இது குறைந்த சதவிதம் அல்ல. ருஷ்யாவில் ஏழு சதவிதமும் அமெரிக்காவில் இரண்டு சதவிதமும்தான் பெண் அங்கத்தினர்கள் உள்ளனர்.

## நட்பு



மாடப்புறா காகத்தோடு வாழ ஆரம்பித்தால் அதன் இறக்கையின் நிறம் கறுப்பாவதில்லை. அதன் மனம் மட்டும் கறுப்பாகி விடும்.

ஜெர்மானியப் பழமொழி

அனுப்பியவர்: இளம் பாரதி

பாராளு மன்றத்தில் பேச, எழுந்து நின்று அதன் மூலம் சபாநாயகரின் கவனத்தைக் கவர்ந்து அவரிடம் பேச அநுமதி பெறவேண்டும். சாதாரணமாகப் பலர் ஒரே சமயத்தில் எழுந்து நிற்பதால் சபாநாயகரது கவனத்தைக் கவர்வது என்பது மிகக் கடினம். ஒரு முறை ஓர் அங்கத்தினருக்குச் சபாநாயகரின் கவனத்தை நீண்ட நேரம் கவர முடியாமல் போனதால் அழுகையே வந்து விட்டது!

அங்கத்தினர்கள் உட்கார்ந்த இடத்திலிருந்தே வோட்டுப் போட ஓர் இயந்திரக் கருவியை நிறுவினார்கள். ஒரு முறை அது பழுதாகி விடவே எதிர்க்கட்சி அங்கத்தினர்களுக்கு நூறு வோட்டுக்கள் அதிகம்கிடைத்து விட்டன! மீண்டும் இப்படி நேர்ந்துவிடாதிருக்க மிகுந்த எச்சரிக்கையாக இருந்து வருகிறார்கள்!

பாராளுமன்ற உறுப்பினரைக் கைது செய்ய நேர்ந்தால் உடனடியாகச் சபாநாயகருக்குக் காரணம் தெரிவிக்கப்பட வேண்டும். அங்கத்தினர்கள் செய்யும் அமளி காரணமாக இது வரை நமது பாராளுமன்றத்தின் நடவடிக்கைகள் இரண்டு தடவைகளில் ஒத்திப் போடப்பட்டுள்ளன! இதுவரை பாராளுமன்றத்தில் கலாட்டா செய்ததற்காக எந்த அங்கத்தினருக்கும் அந்தப் பதவி ரத்து செய்யப்படவில்லை. ஆனால் 1954ல் ஒருவர் மீது இந்த நடவடிக்கை எடுக்கப் பாராளுமன்றம் யோசித்தது. இது தெரிந்ததுமே அந்த அங்கத்தினர் தாமே முந்திக் கொண்டு ராஜிநாமாவைச் சமர்ப்பித்து விட்டார்.

பாராளுமன்ற சரித்திரத்தில் மிக ரசமான வாக்குவாதம் புருஷோத்தம்தாஸ் டாண்டனுக்கும் — மௌலானா ஆஸாத்துக்கும் இடையில் நடந்தது. தேசிய மொழியாக இந்தியைப் பிரபலப்படுத்த அரசினர் எடுத்துள்ள நடவடிக்கைகள் பற்றியது இந்த விவாதம்.

அங்கத்தினர்கள் ஹிந்தியில் பேசினால் அதை ஆங்கிலத்திலும் ஆங்கிலத்தில் பேசினால் அதை ஹிந்தியிலும் உடனுக்குடன் மொழிபெயர்க்க வசதி உள்ளது பாராளுமன்றத்தில். இதற்கான இயந்திர அமைப்புக்களை நிறுவ மூன்று மாதங்கள் ஆயின. அங்கத்தினர்கள் தங்கள் விருப்பம் போல் ஹிந்தியிலோ அல்லது ஆங்கிலத்திலோ சொற்பொழிவுகளைக் கேட்கலாம். பாராளுமன்றத்தில் பேசப்படுவதையெல்லாம் உடனுக்குடன் ராஷ்டிரபதி இல்லத்தில் ராஷ்டிரபதி தமது அறையில் இருந்தவாறே பிரத்தியேக ரேடியோவில் கேட்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

லோகசபைக்கும் ராஜ்ய சபைக்கும் மோதல் ஏற்படுவது அபூர்வம். 1953ல் ஒரு முறை இப்படி நேர்ந்தது. நேருஜி குறுக்கிட்டுச் சமாதானம் செய்வித்தார். — சித்ரா பாலன்



# ஜிம்மி

வால்ட் டிஸ்னி


டேயப்பா! இதைக் கடந்து அங்கே போறது முடியாது போலிருக்கே...


அட! அதோ அங்கே கிட்டு இருக்கான்!


அவனைக் தாஜா பண்ணினால் காரியம் நடக்கும்...


யாவ் யாவ்


ஏ, ஜிம்மி! ஓடியா... ஒரு ஜம்ப் பண்ணிக் குதி!




டேய்...! ஜாக்கிரதை


பாத்து... பாத்து!


Distributed by King Features Syndicate
7-24





தடால்



# கல்லுக்குள் ஈரம்

ர. சு. நல்லபெருமாள்



வெள்ளி விழா
இரண்டாவது பரிசு நாவல்



ஒன்பதாம் அத்தியாயம்

## இரு துருவங்கள்

திருநெல்வேலி நகரசபையையும், பாளையங்கோட்டை நகரசபையையும் பிரிக்கும் எல்லையாக அமைந்திருக்கிறது, தாமிரபரணி நதி. தமிழ் மணக்கும் பொதிகை மலையிலிருந்து ஓடிவரும் அந்த நதியின்மீது அமைந்திருந்த சுலோசன முதலியார் பாலத்தைக் கடந்து, கம்பராமாயணத்தின் வாடை வீசிய வண்ணார்ப்பேட்டையையும் கடந்து இன்னும் வந்தால், ஊசிக் கோபுரம் வரும். அதையும் கடந்து பாளையங்கோட்டை பஸ் ஸ்டாண்டுக்கு வந்தால், கட்டபொம்மன் கட்டியதாகச் சொல்லப்படும் கோட்டையின் இடிபாடுகளில் ஒரு பகுதி தென்படும். அதிலிருந்து கீழ்த்திசையில் சென்றால், சிறிது தூரத்தில் ஹைகிரவுண்டு என்ற ஒரு பரந்த வெட்ட வெளியை அடையலாம்.*

இந்த ஹைகிரவுண்டுதான் அந்தக் காலத்தில் வெள்ளையர்கள் கும்மாளம் போட்ட இடம். இப்போது அரசாங்கத்தின் தலைமை ஆஸ்பத்திரி இருக்கிறதே அந்த இடம், அந்தக் காலத்தில் பாளையங்கோட்டை கனவான்கள் காற்று வாங்கும் மேட்டுப் பிரதேசமாக இருந்தது. கனவான்கள், சூட்டும் கோட்டும் அணிந்து மாலையில், சர்ச்சுக்குப் போய்விட்டு உலாவ வரும் இடம் அது. அந்தப் பரந்த இடத்தைச் சுற்றி அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சில பங்களாக்கள் இருந்தன. அந்தக் காலத்தில் அந்தப்

---

* 1942ல் ஹைகிரவுண்டு வெட்டவெளியாகத்தான் இருந்தது. ஆனால், இப்போது அதில் கட்டடங்களைக் கட்டி அந்தப் பிராந்தியத்தின் அமைதியையும் கெடுத்து விட்டார்கள்; அழகையும் அழித்து விட்டார்கள்.

பகுதியில் வெள்ளைக்காரர்கள்தாம் அதிகம். ஒருசில இந்திய உயர் அதிகாரிகளும் இருந்தார்கள். மாலையில் உலாவ வரும் பாளையங்கோட்டை கனவான்கள், அங்கு விளையாட வரும் வெள்ளைக்காரக் குழந்தைகளைத் தொட்டுப் பேசுவதில் ஜன்ம சாபல்யம் அடைவதாக எண்ணினார்கள். அந்த வெள்ளைக்காரக் குஞ்சுகளின் நீலநிறக் கண்கள், தங்கள் குழந்தைகளுக்கு அமையவில்லையே என்று ஏங்கும் பாளையங்கோட்டை கறுப்புச் சீமாட்டிகளும் அந்த ஹைகிரவுண்டுக்கு உலாவ வருவதுண்டு.

அந்தக் காலத்துப் பாளையங்கோட்டை கிறிஸ்தவர்கள் அவ்வளவுதூரம் தங்களிடம் அபிமானமும் பக்தியும் கொண்டிருந்தார்கள் என்பதை வெள்ளையர்கள் உணர்ந்தாலும் அவர்களைத் தங்களுக்குச் சமமாக நடத்திவிடவில்லை. வெள்ளையர்களுக்கென்று ஹைகிரவுண்டில் இருந்த விளையாட்டு அரங்கங்களில் பாளையங்





கோட்டை கனவான்கள் நுழைய முடியாது. அப்படியிருந்தும், பாளையங்கோட்டைப் பிரமுகர்களின் பக்தியும் ராஜ விசுவாசமும் குறைந்து விடவில்லை.

ஒரு காலத்தில் அந்த ஹைகிரவுண்டு பங்களாக்கள் ஒன்றில் கும்பினிக்காரர்கள் குடிவெறியில் ஆணும் பெண்ணுமாக ஆடித் தங்களை மறந்திருந்த போதுதான் அந்த வழியாகக் கட்டபொம்மனின் தம்பியான ஊமைத்துரை பாளையங்கோட்டை சிறையிலிருந்து தப்பிச் சென்றான். அவ்வளவு பிரசித்தி பெற்ற ஹைகிரவுண்டில் தெற்கே பார்த்த ஒரு பங்களா முன்னால் இன்று ஒரு போலீஸ்காரர் நின்று கொண்டிருந்தார். ஜீப் ஒன்று பக்கவாட்டில் நின்று கொண்டிருந்தது. வராந்தாவில் ஒரு முரட்டு நாய் நாக்கைத் தொங்கப் போட்டுக்கொண்டு தூங்காமல் தூங்கிக் கொண்டிருந்தது.

வீட்டினுள்ளே கேட்பாரற்று ஒரு ரேடியோ பரிதாபமாக அழுது கொண்டிருந்தது. வராந்தாவை அடுத்த பெரிய ஹாலில் கிடந்த சோபா ஒன்றில் ஓர் இளைஞன் கம்பீரமாகச் சாய்ந்து கிடந்தான். அவனை முன்பே சந்தித்திருக்கிறோமே !

சாலைக்குமரன் கோயிலில் சந்தித்தோமே, அந்த டெபுடி சூப்பிரண்டெண்டுதான்.

மன்னிக்கவும், நாம் வாசலைக் கவனியாமலே வந்து விட்டோம். அங்கு 'ஏ.

சிவானந்தம் எம். ஏ., டெபுடி சூப்பிரன்டென்ட்' என்று எழுதப்பட்ட ஒரு செப்புத் தகடு தொங்கிக் கொண்டிருந்ததே !

சிவானந்தத்தின் பக்கத்தில் ஒரு... ஒரு... ஒரு........ !

என்ன சொல்ல?..... எப்படி வர்ணிக்க?

நிலவொளியைப் பிழிந்தெடுத்து, தென்றலின் குளுமை சேர்த்து, மலரின் மென்மை புகுத்தி, இசையின் இனிமையில் குழைத்து உருவாக்கிய ஓர் அழகுப்பிம்பம் பக்கத்துச் சோபாவை அலங்கரித்தது என்று சொன்னாலும் திருப்தி ஏற்படாது; அத்தனை சௌந்தர்யவதி அவள். சிவானந்தத்தின் மனைவி. அவள் பெயர் கமலவாசகி. இப்போது சிவானந்தத்தின் இதய வாசகி.

அவள் சோபாவில் சாய்ந்தவாறு அன்றைய செய்தித் தாளில் மும்முரமாக ஈடுபட்டிருந்தாள். சிவானந்தம் கையில் ஏதோ புத்தகத்தைப் புரட்டிக் கொண்டிருந்தான்.

அவனுக்கு வயது இருபத்தைந்து இருக்கும். நிரம்பச் செல்வம் இருக்கிறது, அதிகாரம் இருக்கிறது, அழகு இருக்கிறது. அழகான மனைவியும் இருக்கிறாள். இப்படி எல்லாம் இருந்தும் அவன் மனத்தில் மட்டும் அமைதியில்லை. அவனுக்கு ஏராளமான செல்வத்தை வைத்து விட்டுச் சென்றிருந்தார் அவன் தந்தை. இருபத்தைந்து வயதுக்குள் தன்னுடைய திறமையால் போலீஸ் இலாகாவில் உயர் பதவியும் அடைந்துவிட்டான். எல்லாவற்றுக்கும் மேலாகக் கண் நிறைந்த அழகுத் தெய்வத்தையே மனைவியாகப் பெறும் பாக்கியமும் கிடைத்தது. இவ்வளவு இருந்தும் அவன் மனத்தின் அடித்தளத்தில் அதிருப்தி ஒட்டிக் கிடந்தது!

மனைவியின் மயக்கும் அழகைப் பார்த்துப் பார்த்துப் பூரிக்கும் சிவானந்தம், அந்த அழகில் மறைந்து கிடந்த குறைகளை எண்ணித் தடுமாறினான். ரோஜாவில் முள் இருப்பதில்லையா ? இருந்தாலும் அந்த முள் உறுத்திக் கொண்டேயிருந்தால்....?

கமலவாசகியின் அலட்சிய மனப்பான்மையும், கர்வமும், செல்வச் செருக்கும் சிவானந்தத்தைக் குழப்பின. ஆனால் அவளிடம் எதையும் தீவிரமாக ஆலோசிக்கும் திறனும், எந்தப் பிரச்னையையும் ஆராய்ந்து சிக்கலை விடுவிக்கும் ஆற்றலும், தர்க்கரீதியாகப் பேசி எவரையும் வென்று விடும் திறமையும் அபரிமிதமாக இருந்தன. மனைவியின் மேதாவிலாசத்தை உணர்ந்து மனம் பூரித்தான். அவளுடைய பேச்சிலும், குறும்பிலும், மயக்க வைக்கும் சிரிப்பிலும் சிவானந்தம் தன்னையே இழந்து நின்றான். ஆனால் அவளுடைய கர்வமும், வாழ்க்கையைப் பற்றிய அவள் லட்சியமும் முள் மாதிரி அவனை உறுத்திக் கொண்டேயிருந்தன.

ஒரு நாள் சிவானந்தம் சொன்னான் : ''நான் பெண்ணாகப் பிறந்து, நீ ஆணாகப் பிறந்திருக்க வேண்டும் கமலா. உன் குறும்பு, முரட்டு சுபாவம் எல்லாமே ஆணுக்குரிய குணங்கள் தாம்.''

இதைக் கேட்டுக் கமலவாசகி சிரித்தாள். ''உண்மைதான். நீங்கள் ஆணாக இருந்தும் இந்தப் போலீஸ் உத்தியோகம் உங்களுக்குப் பொருத்தமாயில்லையே !'' என்றாள்.

''பார்த்தாயா, அடிப்படையிலேயே தாக்க ஆரம்பித்து விட்டாயே ?''

''பின்னே என்ன? ஒரு போலீஸ் அதிகாரியாக இருக்கிறீர்கள். பதவிக்குத் தகுந்த தோரணையும், பிறரை நடுங்க வைக்கும் ஆர்ப்பாட்டமும் உங்களிடம் கொஞ்சம்கூட இல்லையே. நான் மட்டும் இந்தப் பதவியில் இருந்தால் இந்த ஜில்லாவில் ஒரு கதர்க் குல்லாய்க்காரன் தெருவில் நடமாடுவானா?''

''நல்ல வேளை, குணம் தெரிந்துதான் குதிரைக்குக் கொம்பு முளைக்கவில்லை நீ மாத்திரம் இந்த உத்தியோகத்தில் இருந்தால், இந்த வட்டாரம் ஒரே காடாக மாறி இருக்கும்'' என்றான் சிவானந்தம்.

''நான் சொன்னபடி மட்டும் நீங்கள் கேட்டால், இந்த வட்டாரத்திலுள்ள கதர்ச் சட்டைக்காரர்கள் அத்தனை பேரையும் ஒழித்து விடலாம். உங்களுடைய பதவியும் உயர்ந்துவிடும்'' என்றாள் கமலவாசகி.

''இப்போது மட்டும் என்ன? நீ சொன்னதில் எது நடக்கவில்லை? உன்னால்தான் நான் கொடுமையாக நடந்து கொள்வதாகக் காங்கிரஸ் தலைவர்கள் கூறுகிறார்களாம். கடைசியில், கெட்ட பெயர் உனக்குத்தான். பழி முழுதும் உன்மீதுதான்.''

''காங்கிரஸ்காரர்கள் ஒழிந்தார்கள் என்ற பழி என்னைச் சேருமானால், எனக்குச் சந்தோஷந்தான்'' என்றாள் கமலவாசகி உற்சாகத்துடன்.

இந்திய விடுதலைக்காக உயிரையும் தியாகம் செய்யத் துணிந்திருக்கும் தேசியவாதிகள் மீது இவளுக்கு ஏன் இவ்வளவு ஆத்திரம்......?

சிவானந்தம் ஒன்றும் புரியாமல் குழம்பினான். இந்திய தேசபக்தர்கள் மீது அவள் கொண்டிருந்த ஆத்திரத்தை நினைத்தபோது அவனுக்கே நடுக்கமாயிருந்தது. எங்காவது சத்தியாக்கிரகமோ, மறியலோ நடந்துவிட்டால் போதும், கமலவாசகி காளியாகிவிடுவாள். போலீஸ் இலாகாவே நடுங்கி நிற்கும். சிவானந்தம் உத்தரவு இடுவதற்கு முன்பே இவளுடைய கட்டளை பிறக்கும். கீழ் அதிகாரிகளிடையே இரண்டு கட்சிகள் இருந்தன. சிலர் கமலவாசகியின் திட்டங்கள்தாம் சிறந்தவை, அவளுடைய யோசனையைப் பின்பற்றினால் சத்தியாக்கிரகிகளை ஒடுக்கி விடலாம் என்று நம்பினார்கள். வேறு சிலர், கமலவாசகி அநாவசியமாகப் போலீஸ் இலாகாவில் தலையிட்டுச் சிவானந்தத்தைக் கைப்பொம்மையாக்கிச் சத்தியாக்கிரகிகளை நசுக்குகிறாள்; இவளுடைய தலையீடு அளவு மீறுகிறது; இதனால் சத்தியாக்கிரகிகள் கொதிப்படைந்து அமைதிக்கு இன்னும் பங்கம் விளைவிப்பார்கள் என்று நம்பினார்கள்

தனக்குக் கீழ் உள்ள அதிகாரிகளைப் பற்றியோ, அவர்களுடைய அபிப்பிராயத்தைப் பற்றியோ சிவானந்தத்துக்குக் கவலையில்லை. ஆனால் அவனுக்கென்று தனிப்பட்ட கொள்கை இருக்குமே. அதையும் அவளுக்கு முன்னால் இழந்து நின்றான். அவளுடைய மலர்ந்த முகத்திலும், பேச்சின் இனிமையி

னும் பாசப் பிணைப்பிலும் கொள்கை என்ன, தன்னையே இழந்து நின்றானே சிவானந்தம்!

அவனுடைய வாழ்க்கையைப் பொறுத்த வரை எல்லாமே அவள்தான். அவனுக்கு அவள் மனைவி மட்டுமல்ல, நண்பன், ஆலோசகன், ஆசிரியன் எல்லாமே அவள்தான். தன் உத்தியோகத் துறையில் ஏதாவது சிக்கல் வரும்போது அவளிடம்தான் யோசனை கேட்பான். அவளுடைய தீர்க்கமான அறிவும் குயுக்தியும் எதையும் விரைவில் புரிந்துகொண்டு செயலாற்றும் திறமையும் எந்தச் செயலிலும் துருதுரு வென்றிருக்கும்பாங்கும் அவனை ஆச்சரியத்தில் ஆழ்த்தின.

மொத்தத்தில் பதவிதான் அவன் வகித்தானே தவிர, அதைப் பின் நின்று நடத்தி வைத்த சூத்திரதாரி கமலவாசினிதான்.

அந்த வட்டாரத்தில் நடந்த சத்தியாக்கிரகங்களுக்கும் பயங்கர நடவடிக்கைகளுக்கும் எதிராகத் துணிவான நடவடிக்கைகளை எடுக்க வைத்தவள், அவள்தான். சிவானந்தம் தயங்கியபோதெல்லாம் துணையிருந்து ஊக்கம் கொடுத்தாள்.

அவனைப் பொறுத்தவரையில் அவன் ஒரு கண்ணியமான இந்தியன்தான். இந்தியாவின் விடுதலையில் அவனுக்கும் அக்கறை உண்டு. ஆனால் இந்தியாவை இந்தியர்கள் ஆள முடியாது; வெள்ளையன் ஆண்டால்தான் இந்தியா வாழும் என்ற பாடத்தைத் தினமும் தன் ஆசை மனைவியிடம் கேட்டுக் கேட்டு அவன் மனமும் அவள் பக்கம் ஓரளவு சரிந்து விட்டது. அதற்காகச் சத்தியாக்கிரகிகளைக் கொடுமைப்படுத்த,

---

# காதலுக்கு ஒரு கருவி

'அப்புக்கண்'

புதிய விஞ்ஞானக் கண்டுபிடிப்புக்களைப் பற்றிப் படித்தவாறே தூங்கி விட்ட ஒருவருடைய கனவிலே தோன்றிய உபயோககரமான புதிய கருவிகளில் சில பின் வருவன :

## கடன் காட்டி



இந்தக் கருவி, பல நடுத்தரக் குடும்பஸ்தர்களுக்கு உதவியாயிருக்கும். பால்காரனோ மளிகைக்காரனோ அல்லது வேறெந்தக் கடன்காரனோ நம் வீட்டுக்கு வந்ததும் வாசலிலுள்ள இக்கருவி, நம் அறையில் மணியடிக்கும். மணிச் சத்தம் கேட்டதும், நாம் முன்ஜாக்கிரதையாகப் பத்திரமான இடத்தில் ஒளிந்துகொண்டு. 'வெளியே போய் விட்டார்' என்று சொல்லும்படி செய்து விடலாம். கடன் கொடுத்தவர்கள் ஆத்திரத்துடன் நம் வாசற்படியை மிதிக்கும் அதிர்ச்சியின் சக்தியாலேயே இக்கருவி வேலை செய்கிறது!

## 'ஒரிஜினல் - ராடர்'



பத்திரிகை ஆசிரியர்களுக்குப் பெரும் உதவி செய்யக் கூடிய இக் கருவி, மூக்குக் கண்ணாடி வடிவத்தில் உள்ளது. பத்திரிகைக்கு வரும் கதைகளை இந்தக் கண்ணாடியைப் போட்டுக் கொண்டு படித்தால், அக்கதைகளின் 'மூலஸ்தானம்' தெரிந்துவிடும்! சொந்தக் கற்பனையா, மொழிபெயர்ப்பா, தழுவல் சரக்கா என்பதைக் கண்டு பிடித்துக் கதைகளைப் பிரிக்கலாம்.

## 'ஸ்வீட்டோ - மீட்டர்'



ஹோட்டல்களில் விற்கப்படும் மைசூர்பாகு, ஜிலேபி, அல்வா, ரஸகுல்லா முதலிய இனிப்புப் பண்டங்கள், எத்தனை நாட்களுக்கு முன்பு தயாரிக்கப்பட்டவை என்பதை, அந்தப் பண்டங்களைத் தொட்டதும் இது காட்டுகின்றது. இந்தக் கருவி, சுத்தியல் வடிவத்தில் செய்யப்பட்டிருப்பதால் மைசூர்பாகை உடைப்பதற்கும் பயன்படும்.

அவன் மனம் எப்போதுமே இடம் கொடுத்த தில்லை. ஆனால், கமலவாசகியின் தூண்டுத லும், அவனுடைய தர்க்கமும் அவனை அவன் பாதையில் அல்லவா இழுத்துச் செல்லுகின்றன !

அவனும் வெள்ளையன் ஆட்சிக்குட்பட்ட பொறுப்பு வாய்ந்த ஓர் அதிகாரி என்ற முறையில் கடமைப்பட்டவன். அவனால் எவ்வளவு முடியுமோ அந்த அளவுக்குச் சுதந்திரக் கிளர்ச்சியை நசுக்க வேண்டிய கடமை அவனுக்கு உண்டு என்று கமல வாசகி அவனுக்கு ஞாபகமூட்டினாள்.

விடுதலை இயக்கத்தார்களைப் பழி வாங்கும் அவனுடைய வெறியை எண்ணி மனம் குழம்பிக் கிடந்தான் சிவானந்தம்.

நாற்காலியில் சாய்ந்தபடியே மனைவியைக் கவனித்தான். அவளோ அன்றைய செய்தித் தாளில் மூழ்கிக் கிடந்தாள். அவளுடைய அழகு சொட்டும் முகம் அவன் மனத்தில் ஒரு புதிரைத்தான் எழுப்பியது. இந்த அழகிய உருவத்துக்குள் பழி வாங்கும் வெறி எப்படித் தோன்றியது.....? இதற்கு அடிப் படைக் காரணம் ஏதோ ஒன்று இருந்து தான் ஆகவேண்டும் என்று அவன் மனம் முனைந்தது. ஆனால் காரணந்தானே அவனுக் குத் தெரியவில்லை.

''வர வர வெள்ளைக்காரன் புத்தியும் கெட்டுப் போய் விட்டது'' என்றாள் கமல வாசகி, செய்தித் தாளைப் பார்த்துக் கொண்டே. சிவானந்தம் சாய்ந்தவாறே தலையைத் திருப்பிப் பார்த்தான்.

## தூங்கும் தொட்டி



தாலாட்டுப் பாடத் தெரியாத (பாடினால் சகிக்காத) தாய்மார்களுக்குப் பேருதவியாக இருக்கும். தொட்டி உருவத்திலுள்ள இந்தக் கருவியில் படுக்க வைத்த குழந்தை அழ ஆரம்பித்தால், அந்த அழுகைச் சப்த அலை களே இக்கருவியை இயக்குகின்றன. உடனே இனிமையான தாலாட்டு ரிக்கார்டு பாடும். அந்தப் பாட்டையும் மீறி, குழந்தை பல மாகக் கத்தினால் சப்த அலைகளின் சக்தி அதிகரித்து. அதனால் பாடலும் அதிக சத்தமாக ஒலித்து,குழந்தையின் அழுகையை அமுக்கிவிடும். இயந்திரத்துடன் போட்டி போட முடியாமல் குழந்தை அழுகையை நிறுத்தித்தானே ஆக வேண்டும்?

## 'லவ் பிரிண்டர்'

மிகவும் நுண்மையான இக்கருவியை நம் சட்டைப் பையில் போட்டுக் கொள்ளலாம். பல பெண்கள் இருக்கு மிடத்தில் இக்கருவி, நம்மைக் காதலிக்கும் பெண் யார் என்று கண்டுபிடித்துவிடும் திறமை பெற்றது. பெண்கள் நம்மைப் பார்க்கும்போது ஏற்படும் விழிக்கோணத்தின் அளவையும், பார்வையின் ஒளி வேகத்தையும் நுட்ப மாகப் பதிய வைத்து, நம்மை அதிகமாக விரும்பும் பெண்ணின் உருவத்தை நம் இதயத்தில் 'பளிச்' சென்று 'பிரிண்ட்' செய்து விடும். பிறகு, நம் இதயத்தில் இடம் பெற்றவளைக் காதலித்து மணந்து கொள்ளலாம்.



## 'ட்ருத் – கார்பன்'



புதுமையான இந்தக் 'கார்பன் பேப்பரை' ஆபீஸ்களில் உபயோகப்படுத்தலாம். செத்துப் போன மாமனாரின் சஷ்டி யப்த பூர்த்திக்காகக் குதிரைப் பந்தயத்துக்குப் போகிறவர்களும் சென்ற நூற்றாண்டில் அமரரான பாட்டனாரை மறுபடியும் கொன்று விட்டுக் கிரிக்கெட் மாட்சுக்குப் போகிறவர்களும், லீவ் லெட்டர் எழுதும்போது இந்தக் கார்பன் பேப்பரை உபயோகிக்கச் சொன்னால், மேற்சொன்ன பொய்க் கார ணங்கள் மேல் தாளிலும், உண்மைக் காரணங்கள் கீழ்த் தாளிலும் பதிந்துவிடும்! கறுப்புப் பணக் கணக்கு எழுதுபவர் களை இந்தக் கார்பனை வைத்து எழுதச் சொல்லி வருமான வரி அதிகாரிகள் கட்டாயப்படுத்தலாம்!

''இந்தியர்களிடம் பேச்சு நடத்த லண்டனிலிருந்து ஒருவர் வருகிறாராம். என்ன பேச்சு வேண்டியிருக்கிறது!'' என்றாள் கமலவாசகி, முகத்தைச் சுளித்துக் கொண்டு.

''வெள்ளைக்காரன் பாடு இப்போது திண்டாட்டமாக இருக்கிறது. போர்க்களங்களில் படுதோல்வி. ஜப்பான்காரன், இந்தியாவை எந்தச் சமயத்திலும் தாக்கலாம். பர்மா, சிங்கப்பூர் எல்லாவற்றையும் வெள்ளைக்காரன் இழந்து விட்டான்'' என்றான் சிவானந்தம்.

''இந்தச் சத்தியாக்கிரகிகள், பட்டினி கிடந்தே ஜப்பான்காரனை விரட்டி அடித்து விடுவார்கள் என்று நினைக்கிறானா வெள்ளைக்காரன்?''

''இந்தச் சமயத்தில் இவர்கள் தொந்தரவு கொடுக்காமல், வெள்ளைக்காரனுக்கு உதவியாக இருந்தால் போதுமே என்ற ஆசையில்தான் பேச்சு வார்த்தை நடத்த முயல்கிறார்கள்.''

''காந்திக்கு இது ஒரு வெற்றி என்கிறீர்களா?''

''சந்தேகமில்லாமல், இது அவருக்கு வெற்றிதான்.''

''பித்துக்குளியை இன்னும் காணவில்லையே. ஆங்கிலப் பத்திரிகை வாங்கி வர அனுப்பினேன்.''

''அவன் இப்போது எங்கே வரப் போகிறான்? போகிற வழியில் அரட்டை அடித்துக் கொண்டு நிற்பான்'' என்றான் சிவானந்தம்.

''நீங்கள் நினைத்ததும் வந்து விட்டேனே! எனக்கு நூறு வயசு இல்லையா?'' என்று இரைந்து கத்திக் கொண்டே உள்ளே வந்த வெங்கு, கையிலிருந்த ஆங்கிலப் பத்திரிகையைக் கமலவாசகியின் முன்னால் வீசினான்.

''எங்கேடா இவ்வளவு நேரம் போய்விட்டாய்?'' என்று கமலவாசகி கேட்டாள்.

''பேப்பர் வாங்கப் போனேன். அப்படியே சிந்துபூந்துறைக்குப் போய், சர்தார் வீட்டுக்கும் போய்விட்டு வந்தேன்'' என்றான் வெங்கு.

''அங்கே என்னடா உனக்கு வேலை?''

''ஹி....ஹி... ஒன்றுமில்லை... என் போட்டோவைக் கொடுத்து விட்டு வந்தேன்.''

''எதற்கு?'' என்று சிவானந்தம் வியப்புடன் கேட்டான்.

''ஏண்டா உன்னுடைய அழகு முகத்தைப் பத்திரிகையில் போடவா?'' என்று கேட்டாள் கமலவாசகி.

''அடேடே, உனக்கு இது எப்படித் தெரிந்தது?'' என்று கேட்டுவிட்டு அசடு வழிய அவளை விழி பிதுங்கப் பார்த்தான் வெங்கு.

''ஓகோ, சுயேச்சைப் பத்திரிகையில் உன் படத்தைப் போடத்தானா? பேஷ்... பேஷ்... சொக்கலிங்கம்பிள்ளை என்னடா சொன்னார்?'' என்று கேட்டான் சிவானந்தம்.

''அவர் இல்லை. போட்டோவைத் திரிவேணியிடம் கொடுத்து விட்டு வந்தேன்.''

''எதற்காக உன் படத்தைப் பத்திரிகையில் போட வேண்டும்?''

''சும்மாத்தான். எனக்கு ரொம்ப நாளா ஆசை, என் போட்டோ பத்திரிகையில் வர வேண்டும் என்று.''

''மூஞ்சியைப் பார் மூஞ்சியை. உன் போட்டோவை உடனே முதல் பக்கத்தில் போட்டு விட்டுத்தான் மறுவேலை பார்ப்பார்கள்'' என்றாள் கமலவாசகி.

''என்ன! போட மாட்டார்கள் என்கிறாயா? பந்தயம் கட்டுகிறாயா? திரிவேணி கட்டாயம் போடச் சொல்லுவதாய்ச் சொன்னாள் தெரியுமா? இல்லையென்றால் திரிவேணி மாதிரி நானும் கள்ளுக்கடை மறியல் செய்தால், என் படமும் வந்துவிட்டுப் போகிறது'' என்றான் வெங்கு விருப்புடன்.

''என்னது, கள்ளுக் கடை மறியலா?''— பரபரப்புடன் கேட்டாள் கமலவாசகி.

''அட, உனக்குத் தெரியாதா? இதோ பார், நோட்டீஸை'' என்று கூறிக்கொண்டே ஓர் அச்சடித்த தாளைப் பையிலிருந்து எடுத்து நீட்டினான். கமலவாசகி, வெடுக்கென்று பிடுங்கிப் பார்த்தாள்.

நோட்டீஸில், இன்னும் இரண்டு நாட்களில் கள்ளுக்கடை மறியல் நடத்தப் போவதாக காங்கிரஸ் கமிட்டியினர் அறிவித்திருந்தனர். மறியலுக்குத் திரிவேணி தலைமை தாங்குகிறாள்.

''இவ்விஷயம் உங்களுக்குத் தெரியாதா?'' கமலவாசகி கேட்டாள்.

''தெரியுமே!'' என்றான் சிவானந்தம்.

''என்னிடம் சொல்லவே யில்லையே?''

''சொன்னால் நீ உடனே திட்டம் தீட்டி விடுவாய். கூடுமானவரையில் தகராறு இல்லாமல் இந்த விஷயத்தை ஒப்த்துவிட முயலுகிறேன்.''

''ஏன் இப்படிப் பயந்து சாகிறீர்கள்? கள்ளுக் கடைப் பக்கம் ஒரு கதர்க் குல்லாய்க்காரன்கூட நெருங்க விடாமல் கதற அடிக்க வேண்டும்'' என்றாள் கமலவாசகி, பல்லைக் கடித்துக் கொண்டு.

''ஐயோ பாவம், கள்ளுக் கடையைத் தானே மறிக்கிறார்கள். கூட்டத்தில் திரிவேணியும் வருவாள். எவ்வளவு நல்லவள் தெரியுமா?'' என்று பரிந்து பேசினான் வெங்கு.

''நீ சும்மா இருடா மண்டு. இந்த மறியலை முறியடிக்க வேண்டும்'' என்றாள் கமலவாசகி ஆத்திரத்தோடு.

''அதற்குத்தான் முயலுகிறேன். சுமுகமாகவே இந்தப் பிரச்னையை முடித்துவிடப் பார்க்கலாம்.''

''அடியாத மாடு பணியாது. நீங்கள் இப்படி அப்பாவி மாதிரி அஹிம்சையைக் கடைப்பிடித்தால் உங்களைக் கோழை என்று மேலதிகாரிகள் முடிவு கட்டி விடுவார்கள். ஏற்கனவே உங்கள் மீது மேலிடத்திலிருந்து புகார், நீங்கள் கடுமையாக நடந்துகொள்ளவில்லை யென்று.''

''எல்லா முயற்சிகளும் பலிக்கா விட்டால் அவ்வளவு கடுமையான நடவடிக்கையில் இறங்க வேண்டும்? சர்தாரைப் பார்த்து இதற்கு முடிவு கட்டலாம்.''

''எனக்கு என்னவோ சர்தார் மீதே நம்பிக்கை இல்லை.''

''சேச்சே, அப்படி யெல்லாம் இல்லை. அவருக்கே அவருடைய மகள் போக்குப் பிடிக்கவில்லை. காந்தியையே ஏசுவார்'' என்றான் சிவானந்தம்.

# நவீன வாழ்க்கைக்கு ஏற்றது நேஸ்கா:.பே



**நெஸ்காஃபே மட்டும்தான் அலாதி சுவையின்பத்தை அளிக்கவல்லது**






தேர்ந்தெடுக்கப்பட்ட தென்னிந்திய பிளான்டேஷன் பீபெரி காபிக்கொட்டைகளைப் பதமாக வறுத்து அதன் இயல்பான மணம் கெடாமல் தயாரிக்கப்பட்டதுதான் நெஸ்கா:.பே — உடனே கரையக்கூடிய நூற்றுக்கு நூறு அசல் காபி! ஒரே சமயத்தில் தனித்தனியாக 'ஸ்ட்ராங்'காகவோ 'லைட்'டாகவோ காபியைத் தயாரிக்கமுடிவதால் நெஸ்கா:.பே மிகவும் சிக்கனமானதும்கூட!

NESTLÉ

ஒரு நெஸ்லே தயாரிப்பு

**5 விநாடிகளில் தயார்!** ஒரு முழு டீஸ்பூன் நெஸ்காஃபேயை கோப்பையில் போட்டு வெந்நீரை ஊற்றி ருசிக்கேற்றபடி சர்க்கரையும் பாலும் சேர்க்க வேண்டியது தான். காபி தயார்!

**NESCAFÉ***




நெஸ்கா:.பே — தனிச்சிறப்புள்ள தரமான காபி

*நெஸ்கா:.பே என்பது நெஸ்லேயின் இன்ஸ்டன்ட் காபியைக் குறிக்கும் ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க் ஆகும்

JWT-NCE-5144 A

"ஒரு நாள் இடைரென்று சுயேச்சை பத்திரிகை ஆபீஸைச் சோதனை போட்டால், குட்டு வெளிப்படும்."

"சொக்கலிங்கம் பிள்ளை நீ நினைக்கிறபடி இல்லை. ஒன்றிரண்டு முறை அந்த ஆபீசுக்கே சென்று அவரிடம் பேசியிருக்கிறேன். காந்திக்குப் பரம எதிரியாக இருக்கிறார், சர்தார். திரிவேணியின் சத்தியாக்கிரகம் எல்லாம் அவருக்குக் கட்டோடு பிடிக்கவில்லை. ஆறும் ஜார்ஜ் மன்னரின் படம் அவர் அறையில் தொங்குகிறது. காங்கிரஸ்காரர்களையே அவருக்குப் பிடிக்காது."

"பிடிக்கவில்லை என்றால் மகளை அடக்குவதுதானே?"

"அது அவள் சுதந்திரம் என்கிறார். மேலும் இந்த விஷயத்தில் அவர் சொன்னாலும் அவள் கேட்க மாட்டாளாம். இது அதிசயமாயில்லையா, ஒரே வீட்டில் அப்பாவும் மகளும் வெவ்வேறு கொள்கையில் இருப்பது?" என்று வியப்புடன் கூறினான் சிவானந்தம்.

"ஏன்? அந்த அதிசயம்தான் நம் வீட்டிலேயே இருக்கிறதே!" என்றான் வெங்கு. சிவானந்தம் ஒன்றும் புரியாமல் அவனைப் பார்த்தான்.

"நீங்கள் இருவரும் இல்லையா?" என்றான் வெங்கு. "கணவன் மனைவிக்கிடையில் எவ்வளவு வேற்றுமை!"

"அடேடே! நீகூடப் புத்திசாலித்தனமாகச் சிலசமயம் பேசிவிடுகிறாயே" என்றாள் கமலவாசினி.

ஓர் அசட்டுச் சிரிப்பை உதிர்த்தான், வெங்கு. "கள் குடிப்பதைத்தானே தடுக்கிறார்கள், நல்லதுதானே?" என்றான்.

"போடா, மண்டு. உன் வேலையைப் பாருடா. இதைப் பற்றி யெல்லாம் உனக்கு எதற்கு?" என்று அவனிடம் சீறி விழுந்தாள், கமலவாசினி.

"உன்னைத்தானே சொல்லுகிறான்" என்றான் சிவானந்தம்.

"மறியலுக்குத் திரிவேணி என்னையும் கூப்பிட்டாள்" என்றான் வெங்கு.

"நீ ஒரு சூரப்புலி. உன்னையும் மறியலுக்கு அவள் அழைத்தாளாக்கும்!" என்றாள் கமலவாசினி.

"நான் சம்மதித்து விட்டேன்."

இதைக் கேட்டுக் குதித்து எழுந்தாள் கமலவாசினி.

"என்னது? சம்மதித்து விட்டாயா? ஏண்டா பித்துக்குளி, மறியல் என்றால் என்ன தெரியுமாடா? சம்மதித்து விட்டானாம். மகாப் பெரிய சத்தியாக்கிரஹி. டேய், போலீஸ் அடிக்கும் தெரியுமா?"

"என்னை ஏன் அடிக்கும்? எல்லாப் போலீஸ்காரர்களுக்கும் என்னைத் தெரியுமே? தொட்டுப் பார்ப்பானா? எவனாவது என்னைத் தொட்டால், உடனே டிஸ்மிஸ்தான், இல்லையா?" என்று சிவானந்தத்தைப் பார்த்துக் கேட்டான் வெங்கு. சிவானந்தத்துக்குச் சிரிப்புத் தாங்கவில்லை. வெங்குவின் வெகுளித்தனத்தை நினைத்துச் சிரித்தான்.

"நீ சொல்வது சரிதாண்டா" என்றான்.

"என்ன சரிதான்! டேய், பித்துக்குளி, ஆசடு மாதிரி அந்தக் கூட்டத்துக்கெல்லாம் போய்விடாதே. பிறகு போலீஸ் தடியடிப் பிரயோகம் செய்யும். கூட்டமே உன்னை நசுக்கிவிடும்" என்றாள் கமலவாசினி.

"அப்படியென்றால், திரிவேணிக்கும் அடி விழுமா?"

"எல்லாருக்கும் விழும்."

"ஐயய்யோ, அப்படியானால் அவளிடம் போய்ச் சொல்ல வேண்டுமே" என்று பரிதவித்தான் வெங்கு.

"நீ ஒன்றும் சொல்ல வேண்டாம். எல்லாம் அவளுக்கே தெரியும்" என்றாள் கமலவாசினி.

"தெரிந்துமா மறியலுக்கு வருவாள்? அடிபட்டால் வலிக்குமே. பாவம், அவளுக்கு எவ்வளவு நல்ல குணம் தெரியுமா? நான் போகும்போதெல்லாம் தவறாமல் எனக்கு மூக்குப் பொடி வாங்கத் துட்டுத் தருவாள்" என்றான் வெங்கு.

அந்தச் சமயத்தில் வாசலில் நின்ற காவல்காரன் உள்ளே வந்து டவுன் இன்ஸ்பெக்டர் வந்திருப்பதாகக் கூறினான். சிறிது நேரத்தில் இன்ஸ்பெக்டர் உள்ளே வந்து ஒரு சல்யூட் அடித்து நின்றார்.

"என்ன?" — சிவானந்தம் கேட்டான்.

"நாளை மறுநாள் கள்ளுக்கடை மறியல் என்று நோட்டீஸ் கொடுத்திருக்கிறார்கள். அது விஷயமாக..." என்று இழுத்தார் இன்ஸ்பெக்டர்.

"என்னதான் நடவடிக்கை எடுத்திருக்கிறீர்கள்?" என்று குறுக்கே கேட்டாள் கமலவாசினி.

"பாதுகாப்புக்கு வேண்டியவைகளை ஒழுங்கு செய்து விட்டேன்" என்றார் இன்ஸ்பெக்டர், பணிவுடன்.

"யாருடைய பாதுகாப்புக்கு? காங்கிரஸ்காரர்களின் பாதுகாப்புக்கா?" — வெடுக்கென்று கேட்டாள் கமலவாசினி.

"இல்லை, இல்லை. கள்ளுக்கடைக்காரர்களின் பாதுகாப்புக்குத்தான்" என்று பதறிக் கொண்டு பதில் கூறினார் இன்ஸ்பெக்டர். சிவானந்தம் மனத்துக்குள் சிரித்துக் கொண்டிருந்தான்.



**நாக்குத் தவறினால்..?**

கால் தடுமாறினால் சமாளித்துக் கொண்டு நிற்கலாம். ஆனால் நாக்குத் தவறினால் மீளவே முடியாது.

**பெஞ்சமின் பிராங்க்ளின்**

அனுப்பியவர்:
ஆர். கே. சுந்தரம்

''ரிஸர்வ் போலீஸுக்கும் உடனே தாக்கல் கொடுக்கட்டுமா?'' என்று இன்ஸ்பெக்டர் கேட்டார்.

''அதற்கு அவசியமா?'' என்று சிவானந்தம் கேட்டான்.

''ஒருவேளை நிலைமை கட்டுக் கடங்காமல் போய் விட்டால் சமாளிக்க வேண்டியிருக்குமே?''

''ரிசர்வ் போலீஸுக்கு அவசியமிருக்காது. நாளை மாலை வாருங்கள். இதுபற்றி முடிவு சொல்லுகிறேன்'' என்றான் சிவானந்தம். இன்ஸ்பெக்டர் ஒரு சல்யூட் அடித்து விட்டு வெளியேறினார்.

''ஏன் ரிசர்வ் போலீஸுக்கு அவசியமிருக்காது? ரிசர்வ் போலீஸ் இல்லையானால் மறியல்காரர்கள் பயப்படவே மாட்டார்கள். இப்படித்தான் சென்ற மாதம் அயல் நாட்டுத் துணி மறியலில் மெத்தனமா யிருந்தீர்கள். கலகம் வந்து விட்டது'' என்றாள் கமலவாசினி சற்று எரிச்சலுடன்.

''முதலில் சர்தார் சொக்கலிங்கம் பிள்ளையைச் சந்தித்து இந்த மறியலையே நிறுத்த முடியுமா என்று பார்ப்போம்'' என்றான் சிவானந்தம்.

''எதற்காக அவரிடம் பேச வேண்டும்?''

''திரிவேணியிடம் அவர் சொல்லி மறியலை நிறுத்த வழி செய்யலாம்.''

''மறியலை நிறுத்துவானேன்? மறியல் நடக்கட்டும். இந்த மறியலுக்குப் பிறகு இனி எந்த மறியலுக்குமே கதர்ச் சட்டைக்காரர்கள் வரக் கூடாதபடி செய்துவிட வேண்டும். அதை விட்டு விட்டு வலியப் போய்ச் சமாதானம் செய்ய ஓடுகிறீர்களே? நீங்கள் ஓர் அப்பாவி என்று தெரிந்துகொண்டார்கள். அதனால்தான் மாதம் ஒரு மறியல் நடக்கிறது'' என்று ஆவேசத்துடன் கூறினாள் கமலவாசினி.

வெங்குவுக்கு ஒன்றும் புரியவில்லை. மறியலுக்குச் சென்றால் அடி விழும் என்பது மட்டும் புரிந்து விட்டது. அவனுடைய கவலையெல்லாம் திரிவேணிக்கும் அடி விழுந்து விடுமோ என்பதுதான். அவனுடைய மூளை வேலை செய்வதை நிறுத்திக் கொள்ளவே, ஒரு சிட்டிகை பொடியை எடுத்துப் பலமாக உறிஞ்சினான். அந்த உறிஞ்சலில் கட்டடமே அதிர்ந்தது.

''டேய் பித்துக்குளி, பொடி போடாதே என்று எத்தனை தடவை உன்னிடம் சொல்லியிருக்கிறேன்'' என்றாள் கமலவாசினி கோபத்துடன்.

''நீ எதை வேண்டுமானாலும் நிறுத்தச் சொல்லு; சாப்பிடாமல் கூட இருக்கச் சொல்லு. இருக்கிறேன். ஆனால் பொடியை மட்டும் நிறுத்த முடியாது. திரிவேணி வாட்டுக் கொடுத்தாள். அதற்கு வாங்கிய பொடி காலியாகி விட்டது. நீ ஓர் அரையணா கொடேன்'' என்றான் வெங்கு அவளைப் பார்த்து. கமலவாசினிக்குக் கோபம் ஒரு புறமும் சிரிப்பு ஒரு புறமும் வந்தன.

''துட்டுத் தர முடியாது'' என்றாள் உள்ளூறச் சிரித்துக் கொண்டே.

''தராவிட்டால் போயேன். இவர் தருவார். நீங்கள் கொடுங்களேன்'' என்றான் சிவானந்தத்தைப் பார்த்து.

''மேஜைக்குள் சில்லறை கிடக்கிறது. எடுத்துக்கொள்'' என்றான் சிவானந்தம்.

''டேய்! பேப்பர் வாங்க ஒரு ரூபாய் கொடுத்தேனே, பாக்கி எங்கேடா?'' என்று கேட்டாள் கமலவாசினி.

''பாக்கி பதினாறு அணா இருந்தது. வரும் வழியில், பாவம் ஒருத்தி பசியோடு குழந்தையையும் வைத்துக் கொண்டு நின்றாள். அவளுக்கு ஹோட்டலில் சாப்பாடு வாங்கிக் கொடுத்தேன்.''

''என்னடா, இது தர்ம சத்திரமா? பாக்கி சில்லறையைக் கொண்டு வராமல்....'' கமலவாசினி கோபத்தில் இரைந்தாள்.

''இதென்ன இப்படிக் கோபப்படுகிறாய்? பசிக்கிறதென்றால் சாப்பாடு வாங்கிக் கொடுத்தால் தப்பா? வீட்டுக்குக் கூட்டி வர நினைத்தேன். நல்ல வேளை. கையில் சில்லறை இருந்தது. கடையிலேயே சாப்பாடு வாங்கிக் கொடுத்து விட்டேன். நமக்குப் பசி வந்தால் எப்படி இருக்கிறது. பாவம் அவளுக்கும் அப்படித்தானே இருக்கும். அந்தக் குழந்தை பசியிலே சுருண்டு கிடந்தது. ரொம்பப் பசி. வயிறு நிறையச் சாப்பிட்டாள். குழந்தையும் மூச்சு முட்டச் சாப்பிட்டது'' என்றான் வெங்கு பரிதாபத்துடன்.

''கையில் சில்லறை இருக்கப் போய்ச் சரியாகி விட்டது. இல்லையென்றால் பிச்சைக்காரியை வீட்டுக்கே கூட்டிக் கொண்டு வந்திருப்பான். நல்ல வேளை. சமர்த்தாகக் கடைக்குக் கூட்டிச் சென்றானே'' என்றான் சிவானந்தம்.

''கருமம், கருமம், ஒரு எழவும் தெரியவில்லையேடா. துட்டை இப்படியா கரியாக்குவது'' என்றாள் கமலவாசினி தலையில் அடித்துக் கொண்டு. அசடு வழிய நின்றான் வெங்கு.

'பசித்தவனுக்குத் தானே சாப்பாடு கொடுத்தேன். இதற்குப் போய் இப்படிப் பதறுகிறாளே, கமலவாசினி' என்று நினைத்து வியப்போடு ஒன்றும் புரியாமல் அசட்டு விழி விழித்துக் கொண்டு நின்றான் வெங்கு.

''டேய், மேஜைக்குள் சில்லறை இருக்கிறது. பொடி வாங்க எடுத்துக்கொள் போ...'' என்றான் சிவானந்தம். மேஜையைத் திறந்து அரையணாவை எடுத்துக் கொண்டு வெளியேறினான் வெங்கு.

''நல்ல பைத்தியம் வந்து சேர்ந்தான்''— கமலவாசினி அலுத்துக் கொண்டாள்.

''நல்ல வேளை, அவன் கையில் பதினாறு அணாதான் இருந்தது. ரூபாய்க் கணக்கில் இருந்ததோ, ஐயோ பாவம் என்று அந்தப் பிச்சைக்காரிக்கு ஒரு புடவையும் எடுத்துக் கொடுத்திருப்பான்'' என்றான் சிவானந்தம் சிரித்துக் கொண்டே. பிறகு டெலிபோனைக் கையில் எடுத்தான்.

''யாரைக் கூப்பிடுகிறீர்கள்? சர்தாரையா?''—கமலவாசினி கேட்டாள். 'ஆமாம்' என்பது போல் சிவானந்தம் தலையை அசைத்தான். அவள், ''நீங்கள் இந்த உத்தியோகத்துக்கே லாயக்கில்லை'' என்றாள் முகத்தைச் சுளித்துக் கொண்டு. சிவானந்தம் சிரித்துக் கொண்டே போனில் பேசத் தயாரானான்.

(தொடரும்)

# ஜி-11 ஹெக்ஸாக்ளோரோபீன் என்ற அழகுப்பொருளும் புதுமை மணமும்தவிர, விசேஷமாக வேறென்ன இருக்கிறது ஸிந்தாலிலே?



# சிக்கனப்பாங்கு!

அதிக நாள் உழைக்கிறது ஸிந்தால்; மேம்பட்ட உற்பத்திமுறையே அதன் காரணம். அதிலுள்ள ஈரப் பங்கு மிகச் சொற்பமே யாதலால் சொதசொதப்பு சேரவே இடமில்லை.




வாடையகற்றும் குணத்திலே அதி உன்னதமானது ஸிந்தால். அழுக்கு, வியர்வை ஆகியவற்றால் உண்டாகும் கிருமிகளை அழிக்கிறது அந்த ஜி-11 (ஹெக்ஸாக்ளோரோபீன்). உங்கள் உடம்பில் நாற்றம் என்பதே எழாமல் பாதுகாக்கிறது.

இருமடங்கு உறுதிபெறுவீர்—நாள்முழுதும் மலர்ச்சி பெறுவதற்கான ஜி-11 (ஹெக்ஸாக்ளோரோபீன்) அடங்கிய ஸிந்தால் சோப்பும், ஸிந்தால் டாய்லெட் பவுடரையும் உபயோகியுங்கள்.




ஜி-11 என்பது, எல். ஜிவோடான் ஏ. ஜீ., எஸ். ஏ. அவர்களின் ட்ரேட் மார்க்.

# வெண்ணிலவுப் பெண்ணரசி

## சோமு

### அத்தியாயம் 9

## நாடித் துடிப்பு!

இளவரசி கண்களைத் திறந்து பார்த்தாள். முழு நினைவோடு பார்த்தாள். எதிரே எத்தகைய அரிய காட்சியைக் கண்டாள் அவள்?

துளு நாட்டுத் தானைத் தலைவனை மிஞிலியை மணக்க வேண்டும் என்று தன்னை வற்புறுத்திய தகப்பனை, துளு நாட்டின் எதிர்கால அரசியல் வாழ்விலே பெரும் பங்கு கொண்டு துளு நாட்டுக்காகப் போரிட்டுத் துளுநாட்டு மன்னனுடைய கையை வலுப்படுத்த வேண்டிய தனதுபோர்த்தலைவனை, மகள் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்று கட்டாயப்படுத்திய தகப்பனைக் காணோம்! அந்த இடத்தில் ஆதனாரும் அழலாடியும் வைத்தியரும் நின்றார்கள்.

கோபக் கனல் பறக்கும் தன்னுடைய தந்தை நின்ற இடத்திலே இப்போது அன்பும் ஆர்வமும் பொங்கிய முகத்தோடு தகப்பனுக்கு ஒப்பான ஆதனார் நின்று பரிவோடு, ''இளவரசி!'' என்று அழைத்தார்.

துளுநாட்டு இளவரசிக்கு அந்தப் பழைய நிகழ்ச்சிகள் எல்லாம் ஒவ்வொன்றாக நினைவுக்கு வந்தன.

கட்டிலில் படுத்திருக்கிறோம் என்பதை உணர்ந்தாள் இளவரசி. 'இன்னும் ஆதனாரின் வீட்டு நிலவறையிலே தான் இருக்கிறோமா! மயங்கிப் போயிருந்த தனக்கு இன்னும் வைத்தியம் நடந்து கொண்டிருக்கிறதா?'



இவ்வாறு எண்ணிக் கொண்டே படுக்கையிலிருந்து எழுந்திருக்க முயன்றாள் இளநன்னி!

ஆதனார் கட்டிலுக்கு இன்னும் அருகிலே வந்து இளவரசியைக் கைத்தாங்கல் கொடுத்துக் கட்டிலிலே அமர்த்தினார்.

''இன்னும் நான் தங்கள் வீட்டு வைத்தியக் கூடத்திலேதான் இருக்கிறேனா?'' என்று கேட்டுக் கொண்டே பெருமூச்சு விட்டாள் இளவரசி.

''அரசி, நீங்கள் இப்போது இருப்பது என்னுடைய வீடு இல்லை. அதையும், விடப் பாதுகாவல் நிரம்பிய கொங்கு நாட்டு அரண்மனை! அந்த அரண்மனையின் நிலவறை இது! மயக்கம் அடைந்த உங்களுக்குக் கொங்குச் சேர மன்னனின் அரச வைத்தியர்கள் அரிய மருந்துகள் கொடுத்து மயக்கத்தைத் தெளிய வைத்திருக்கிறார்கள்!''

இவ்வாறு பரிவோடு சொன்னார் ஆதனார்.

''உங்களுக்கு என் நன்றியை எப்படிச் சொல்லுவேன். இந்த உயிருக்கு ஏதாவது மதிப்பு உண்டு என்று நான்



இதுவரை கருதியதில்லை! ஆனால் இனிமேல் அப்படி எண்ணக் கூடாது! நீங்களும் இந்த அரச வைத்தியர்களும் சேர்ந்து இத்தனை கவனத்தோடு என்னைக் காப்பாற்றி இந்த மதிப்பற்ற உயிருக்கும் ஒரு மதிப்பை உண்டாக்கி விட்டீர்கள்!''

இளவரசி இப்படிச் சொல்லும்போது அவளுடைய கண்கள் கலங்கின. இந்தச் சொற்களைக் கேட்டுக் கொண்டே அழலாடி ஆதனாருக்கு அருகிலே வந்து நின்று கொண்டான். இளவரசி அந்த வீரமல்லனை இப்போது முழு நினைவும் மீண்டு வந்து மிதந்து கொண்டிருக்கிற தனது நீண்ட விழிகளால் உற்று நோக்கினாள்.

''அன்பு நிரம்பிய தந்தையே!'' என்று ஆதனாரை அழைத்தாள் இளவரசி. குரல் கம்மிற்று.

''தந்தையே! என்னை நீங்கள் பிழைக்க வைத்து விட்டீர்கள். அந்த அன்புச் செயலுக்கு நான் உங்களுக்குக் கடன்பட்டிருக்கிறேன், ஆனால் இந்த உயிரை எதற்காக இத்தனை முயற்சி எடுத்துப் பிழைக்க வைத்தீர்கள்? இந்த உயிரினால் இந்த உடம்புக்கும் தொல்லை; இந்த உடம்போடு பிறந்த உடன்பிறப்புக்களுக்கும் தொல்லை! மயங்கிப் போன என்னை அப்படியே மடியும்படி விட்டிருந்தால் எத்தனையோ பேருக்கு ஆறுதலும் விடுதலையுமாக இருந்திருக்குமே அது! அதைச் செய்யத் தவறி விட்டீர்களே! நான் வாழ்ந்து இனிமேல் யாருக்கு என்ன பயன்?''

இதயத்தின் துன்பமும், உள்ளத்தின் அவலமும், வாழ்வில் ஏற்பட்டுவிட்ட

அவநம்பிக்கையுமாக இவ்வாறு பேசினாள் இளநன்னி. ஆதனூர் சொன்னார்:

''இளவரசி! எந்த விநாடி நீங்கள் துளு நாட்டு அரண்மனையிலிருந்து வெளியேறினீர்களோ, அந்த விநாடியே உங்களைப் பிடித்திருந்த துயரமும் அகன்று விட்டது என்று வைத்துக் கொள்ளுங்கள். இனி நமது தமிழகத்தின் மறு வாழ்விலே, பெரும் பகையிலிருந்து மறுமலர்ச்சி பெற்று எழப் போகிற தமிழ் நாட்டின் எதிர்கால வாழ்விலே, தங்களுடைய பங்கு மிக மிக முக்கியமாக விளங்கப் போகிறது. சேர மன்னர்களும் புன்னாட்டு மன்னர்களும் ஒன்று சேர்ந்து, தங்கள் பகைவர்களை வெற்றி கொண்டு இந்தப் புண்ணியத் தமிழகத்திலே மீண்டும் அமைதியை நிலைநாட்டப் போகிறார்கள். அந்தத் திருப்பணியிலே துளுநாட்டு இளவரசியாகிய உங்களுக்கு முதன்மையான ஒரு பொறுப்பு இருக்கிறது. அதை மறந்துவிடலாமா நீங்கள்?''

ஆதனூர் இவ்வாறு சொன்னதும் இளவரசி நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டாள். இதழ்களின் கோடியிலே புன்முறுவல் விளையாடியது. ஏளனமாக ஒரு சிரிப்புச் சிரித்தாள். சொன்னாள்:

''பெரியவரே! தமிழ் நாட்டு வேந்தர்களுக்குள் ஒற்றுமை ஏற்படும் என்றும், அந்த ஒற்றுமையிலே மிஞிலி அழிந்து ஒழிவான் என்றும் நானுங் கூட ஒரு காலத்தில் கனவு கண்டேன். என்னோடு உடன்பிறந்த உத்தமனை இளவரசனும் அவ்வாறே ஆசைப்பட்டான். ஆனால் அது வெறும் கனவு! துளு நாட்டிலே அற முறைக்கு மாறான சூழ்ச்சிகளும், சூதான செயல்களுமே மண்டிக் கிடக்கின்றன. அறத்தோடு செயல் செய்யும் சேரலாத மன்னனோ, அந்த மன்னனுடைய கிளையினர்களோ இந்தச் சூழ்ச்சிகளை யெல்லாம் எப்படி அறிவார்கள்? போதும் போதாததற்கு, வெள்ளைத் தீவிலே உள்ள கொள்ளைக் கூட்டத்தார்கள் வேறு கூட்டுச் சேர்ந்து, ஏதேதோ நீதியற்ற நேர்மையற்ற செயல்களைச் செய்து வருகிறார்கள்! மிஞிலியினுடைய அட்டூழியங்களைப் பற்றியோ சொல்ல வேண்டாம்! என் தந்தை அவனுடைய கைப் பாவையாக ஆடுகிறார். ஒரு மகளையும், ஒரு அரச மகளையும் எப்படி நடத்த வேண்டும் என்ற முறையைக்கூட மறந்து அவர் ஏதேதோ சொல்லுகிறார்; செய்கிறார். ஐயோ, அந்த இரவிலே அவர் என்னிடம் சொன்ன கடுஞ்சொற்களை யெல்லாம் இப்போது நினைத்தாலும் உடம்பு பதறுகிறது. அந்தக் கொடிய பாவி



**''நேர்மையும் நிதானமும்''**

ஒரு பிரபல தொழிலதிபர் தமது ஸ்தாபனத்தின் பொறுப்பை மகனிடம் ஒப்புவித்து, ''தொழிலிலும், வியாபாரத்திலும் வெற்றி அடைய வேண்டுமானால் இரண்டு பண்புகள் மிகவும் முக்கியம்'' என்று குறிப்பிட்டார்.

''அவை என்ன?'' என்று கேட்டான் மகன்.

''நேர்மையும், நிதானமும்'' என்றார் தந்தை.

''நேர்மை என்றால் என்ன?'' என்று கேட்டான் மகன்.

''எவ்வளவு கஷ்டம் வந்தாலும், என்ன விளைவுகள் நேரிட்டாலும் கொடுத்த வாக்கைக் காப்பாற்று. இதுவே நேர்மை'' என்றார் தந்தை.

''நிதானம் என்றால்?''

''யாருக்குமே வாக்குறுதியைத் தந்து விடாதே. இதுவே நிதானம்.''

ஆதாரம்: 'பால்டி மோர் சன்' தகவல்: 'ரமணன்'

---

மிஞிலியை நான் கணவனாக ஏற்றுக் கொள்ளவில்லை என்றால், என்னை என்ன செய்யப் போகிறாராம் தெரியுமா? தெரியுமா? தெரியுமா?''

இளவரசிக்குக் கைகள் ஆட ஆரம்பித்தன. கண்களிலே ஒரு சுழற்சி ஓடியது.

''இளவரசி! அதையெல்லாம் இப்போது எண்ணிப் பார்க்காதீர்கள். தங்களுடைய வாழ்விலே அதையெல்லாம் ஒரு தீய கனவாகக் கருதி, அந்த நினைவை ஒரு கனவைப்போல் மறந்து விடுங்கள்!''

''பெரியவரே! சில கனவுகளை மறப்பது எளிதாக இல்லையே! என்ன செய்வேன்!''

அரச வைத்தியர்களிலே ஒருவர் இப்போது ஒரு கிண்ணத்திலே ஏதோ மருந்தை எடுத்து வந்து இளவரசியிடம் கொடுத்தார்.

''இளவரசியாரே! இதைச் சற்று அருந்துங்கள். நினைவு தெளிந்த நிலையிலே இப்போது அதிகமாக எதுவும் பேசாமல் ஓய்வு எடுப்பதுதான் உடம்புக்கு நல்லது. நீங்கள் மறுபடியும் சிறிது நேரம் படுத்துக் கொள்ள வேண்டும்.''

இளநன்னி அந்த மருந்தை வாங்கி அருந்தினாள். அருந்திவிட்டுப் பழைய படியும் கட்டிலிலே படுத்தாள். வைத்தியர் நாடிச் சோதனை செய்தவாறு

ஆதனுரையும் அழலாடியையும் பார்த்துச் சொல்லுவார் :

''இளவரசியின் மயக்கம் நன்ருகத் தெளிந்து விட்டது. இனி எத்தகைய கவலைக்கும் இடமில்லை. நான் கொடுத்துள்ள இந்த மருந்திலே இப்போது இளவரசி நன்ருகத் தூங்குவார். பெரும்பாலும் நாளைக் காலையிலேதான் இனிக் கண்விழிப்பார். உறங்குவதற்குரிய மருந்தோடு உடம்புக்குத் தெம்பு ஏற்றுகிற ஒரு மூலிகைச் சாறும் சேர்த்துக்கொடுத்திருக்கிறேன். இனி நீங்கள் இருவரும் பதற்றம் இல்லாமல் நிம்மதியாக இருக்கலாம் !''

வைத்தியர் இந்த ஆறுதல் மொழிகளைச் சொன்னதும் ஆதனுரும் அழலாடியும் அந்த அரண்மனை நிலவறையிலிருந்து வெளியே வந்தார்கள். வந்து அந்தப் பெரிய அரச இல்லத்தின் மேற்குக் கூடத்திலே அமைதியான ஓர் இடத்திலே போடப்பட்டிருந்த இருக்கைகளிலே வந்து அமர்ந்தார்கள்.

''அழலாடி! எப்படியோ ஒரு நல்ல உயிரைக் காப்பாற்றி விட்டோம். கடவுள் காப்பாற்றினுர்'' என்ருர் ஆதனுர்.

''கடவுள் காப்பாற்றியது இளவரசியை மட்டுமில்லை; என்னையும் சேர்த்துத்தான்! உண்மையில் இளவரசி பிழைத்து எழவில்லையென்ருல், எனக்கு உயிர் போயிருக்கும்! அவ்வளவுக்கு நான் என்னை வெறுத்துக் கொண்டிருந்தேன். எத்தகைய தவறு செய்து விட்டேன் நான்! நீங்கள் என்னை மன்னித்தாலும், என் மனச்சான்று என்னை வதைத்துக் கொண்டே இருந்தது! இப்போதுதான் ஆறுதல் பெற்றேன் !''

இப்படி அழலாடி சொல்லும்போது ஆதனுர் புன்னகை செய்தார்.

''தம்பி! நீ செய்தது தவறுதான். ஒப்புக் கொள்ளுகிறேன். ஆனுல் அந்தத் தவருனது இளவரசிக்கு எத்தகைய பெரும் விடுதலையை அளித்திருக்கிறது என்பதை இளவரசியின் பேச்சிலிருந்தே தெரிந்து கொண்டாயல்லவா ? இள நன்னியும் அவளுடைய அண்ணன் இளநன்னனும் நாகத்தில் பிறந்த இரண்டு மணிகள்! விலை மதிப்பற்ற ஒப்பற்ற நாகரத்தினங்கள்! ஒரு பெரிய இரத்தினத்தைக் காப்பாற்றியாயிற்று. இனி அடுத்த இரத்தினத்தையும் காப்பாற்றியாக வேண்டும். இல்லையென்ருல் இந்தப் பொல்லாத மிஞிலிதான் இனி எதிர்காலத்தில் துளுநாட்டு அரசனுக முடிசூடிக் கொள்ளுவான் ! பிறகு நாடு என்ன ஆகும்! மக்கள் என்ன ஆவார்கள்! புன்னுட்டு நீலக்கல் சுரங்கத்தை ஒரே நாளில் சூறையாடி விடுவான் மிஞிலி! வான மண்டலக் கடம்பனும் மிஞிலியும் ஒன்றுசேர்ந்தால் இந்தத் தமிழ் நாடு அந்த நச்சுப் புகையைத் தாங்காது! அதற்கு ஒரு முடிவு காண வேண்டும். அப்படிக் கண்டால் ஒழியச் சேரர் குலத்தின் எதிர்காலமும் சீர்கேடு அடையும். நன்னர் குலம் தமிழ்க் குலத்தையே அழித்துத் துடைத்து விடும். அத்தகைய சூழ்நிலை உருவாக இடம் கொடுக்கக் கூடாது நாம்! உண்மையில் இந்தக் கொங்குவஞ்சி அரண்மனையிலே கிளைச் சேர மன்னன் நாள் தோறும் ஏதேதோ ஆலோசனைகள் நடத்தி வருகிருன். உன்னை அந்த மன்னனுக்குச் சரியான முறையிலே இனம் காட்டி விட்டால் உனக்கும் நல்லது. இந்த அரண்மனையிலே நடைபெறுகிற அரச ஆலோசனைகளுக்கும் நல்லது அது!'' என்ருர் ஆதனுர்.

''ஐயா, அப்படியானுல் நீங்கள் என்னை இங்கே விட்டு விட்டுப் புறப்படத் தீர்மானித்து விட்டீர்களோ?'' என்று கேட்டான் அழலாடி.

''ஆம்; இளவரசி நன்னி இனி இந்த அரண்மனையிலே இருப்பாள். அவளைப் பாதுகாக்க வேண்டிய பொறுப்பு இந்த அரசச் சுற்றத்தைச் சேர்ந்தது என்ருலும், என் சார்பில் நீ இளவரசிக்குத் துணையாக இங்கேயே இருக்க வேண்டும். அதோடு இந்தக் கிளை மன்னர்களுக்கு உன்னுடைய வீரத் தொண்டு அரிய பெரிய வகையிலே இணையப் போகிறது. அது எப்படி என்று போகப் போக உனக்கே புலப்படும். நன்னனுடைய வீழ்ச்சி எத்தனை உறுதியோ, அத்தனை உறுதி இந்தக் கொங்குநாட்டுப் படையிலே நீ ஆற்றப் போகும் எதிர்காலக் கடமைகளும் !''

உவகையும் நம்பிக்கையும் நிரம்பிய குரலிலே இவ்வாறு கூறிவிட்டு ஆதனுர் தமது அருமை மாணவனை அரசனுடைய மனை மன்றத்துக்கு அழைத்துச் சென்ருர்.

''இந்தக் கொங்கு நாட்டு யானைப் படையை விரிவாக்கும் பெரும்பணியிலே என்னுடைய மாணவனைத் தாங்கள் ஈடுபடுத்த வேண்டும் என்பதே என் விருப்பம். மற்போரிலே ஈடு இணையற்று விளங்கும் இந்த மாணவவீரன் கொங்கு நாட்டு யானைப் படையின் பெருந் தலைவர்களிலே ஒரு மாபெரும் தலைவனுக விளங்கப் போகிருன் என்பது என் ஆசையும் உறுதியும் ஆகும் !''

இவ்வாறு மன்னனிடம் ஆதனுர் கூறினுர். அப்போது, அழலாடியின் தோள்


SREE VISALAM CHIT FUND LTD
SVCF
H.O TIRUNELVELI








தோற்றம்: 16-11-1892 மறைவு: 14-2-1967

தியாகராயநகரில் உள்ள தம் இல்லத்தில், 14-2-67 அன்று பிற்பகல் 3-22 மணிக்கு ● Y. S. ஜகதீசய்யர் சிவலோகப் பிராப்தி அடைந்தார். அவரது பிரிவால் அவரது மனைவியாரும், நான்கு புதல்வர்களும், பேரக்குழந்தைகளும் ஆழ்ந்த துக்கத்தில் வருந்துகின்றனர். அவரது ஆன்மா சாந்தியடைவதாக. (இவரது குமாரர்களில் ஒருவரான ஸ்ரீ ஜெ. ராமமூர்த்தி சென்னையிலுள்ள ஜீவன்லால் கம்பெனியில் பணிபுரிந்து வருகிறார்.)

விம்மியது. தன் ஆசிரியர் தன்னிடம் எத்தகைய நம்பிக்கை வைத்திருக்கிறார் என்பதை எண்ணி அவனுக்கு ஒரு பூரிப்பு ஏற்பட்டது.

கொங்குவஞ்சி அரண்மனையிலிருந்து ஆதனார் புறப்பட்ட போது நிலவறையிலே இளவரசி கண் துயில் கொண்டிருந்தாள். மருந்தின் விளைவாக அவள் கண் துயில்வதற்கும், இதற்கு முன்பு மயக்கத்திலே அவள் நினைவழிந்து கிடந்ததற்கும் உள்ள வேறுபாடு நாடியிலே தெரிந்தது. இளவரசியின் அங்கை விரல்களைப் பற்றிப் பக்குவமாக நாடி பார்த்த ஆதனார், முழு நிம்மதியோடு அழலாடிக்குச் சொன்னார்:

"தம்பி, இதுவரை உனக்குக் கற்பிக்காத ஒரு புதிய கல்வியை இப்போது உனக்குச் சொல்லித் தரப் போகிறேன். மனிதர்களின் கைகளிலே துடிக்கிற நாடியின் தன்மையிலிருந்து, உடம்புக்குள்ளே இயங்குகிற உறுப்புக்களின் தன்மையைக் கண்டு உணரக் கூடிய அரிய கல்வி இது. தமிழ்நாட்டு சித்தர்கள், இந்த உடம்புக்கு ஏற்படக் கூடிய நோய் நொடிகள் அனைத்தையும் ஒன்று விடாமல் ஆராய்ந்து தெளிந்து, இத்தனைக்கும் அடிப்படை மூன்று வகையான நாடித் துடிப்புக்களே என்று கண்டு பிடித்திருக்கிறார்கள்! எந்த உடம்பில் எத்தகைய நோய் வந்தாலும் அது இந்த மூன்று வகையான துடிப்புக்களிலே அடங்கும்! எல்லா நோயும் இந்த மூன்று வகைக்குள் வந்து விடும்! இந்த அடிப்படையான 'நாடித் துடிப்புக் கலை நம்முடைய முனிவர்கள் நமக்கு வழங்கியுள்ள அரிய பெரிய ஞானம்! அதன் நுட்பம் முழுவதையும் உனக்கு இந்நேரத்தில் விளக்கிவிட முடியாது. என்றாலும் இளவரசியின் உடல்நிலை எப்படித் திருந்துகிறது என்பதை அவ்வப்போது சரிபார்த்துக் கொள்ளக் கூடிய முறையில், இந்த நாடித் துடிப்பின் இரண்டொரு நுட்பங்களை மட்டும் உனக்கு விளக்கிக் காட்டுகிறேன்."

இப்படிச் சொல்லி விட்டு அழலாடியையும் இரண்டொரு வைத்தியர்களையும் தனியாக அழைத்துப் போய் ஒரு சிறு விளக்கவுரை நிகழ்த்தினார், ஆதனார். கையின் விரல்களைப் பிடிக்கும் தன்மை, நாடிகளுக்கு மேல் விரல்களை எப்படி அழுத்த வேண்டும், துடிப்பை எப்படித் தொட்டுணர வேண்டும், மூன்று வகையான துடிப்புக்களும் எப்படி இயங்குகின்றன என்பதையெல்லாம் அங்கிருந்த இரண்டொரு கைகளை



"இதென்ன! ராமுவின் நோட்டுப் புத்தகங்களின் பக்கங்களையெல்லாம் எண்ணிப் பார்க்கிறீர்கள்?"

"பாங்க் காஷியர் வேலை கிடைக்கும் போலிருக்கு. பழகிக்கிறேன்."

வைத்தே அழலாடிக்கு ஒரு பாடம் நடத்தினார் ஆதனார்.

"நான் சென்று வருகிறேன் அழலாடி! இளவரசியை நன்றாகப் பார்த்துக் கொள். அதோடு அடுத்த முறை நான் இங்கே வருவதற்குள் என்னுடைய மாணவனை ஒரு மாபெரும் யானை வீரனாகக் காண ஆசைப்படுகிறேன்!" என்று சொல்லி அழலாடியை வாழ்த்தி விட்டு அரண்மனையிலிருந்து புறப்பட்டார் ஆதனார்.

ஆசிரியருக்கு வணக்கம் செலுத்தி விட்டு நிலவறைக்குள்ளே வந்தான் அழலாடி. இளவரசி இன்னும் உறங்கிக் கொண்டுதான் இருந்தாள். நினைவிழந்த மயக்கம் இல்லை அது. உயிர்ப் போடு கூடிய உறக்கம்தான் அது. அந்த வித்தியாசத்தை உணர்ந்து பார்க்க எண்ணினான் அழலாடி. தான் புதிதாகக் கற்ற நாடித் துடிப்புக் கல்வியை உடனே சோதித்துப் பார்க்க முனைந்தான் அவன். இளவரசியின் கையை மெதுவாக எடுத்து, விரல்களைத் தனது இடக்கை விரல்களால் பற்றி வலக்கை விரல்களை நாடியிலே பதித்து அழுத்தினான். துடிப்பு நன்றாகத் தெரிந்தது. ஆனால் அதோடு சேர்ந்து இது என்ன புதிதாக இருக்கிறதே! ஏதோ ஒரு மின் ஆற்றல் தனது உடம்பிலே பாய்கிறதே! மயங்கிய உடம்பைத் தூக்கி வந்த போது இல்லாத ஒரு புதிய மின்னல், இப்போது மயக்கம் தெளிந்த அந்த உடம்பிலிருந்து வந்து பாய்கிறதே! அது என்ன? (தொடரும்)

# ஜகத்குரு

என். ராமேசன் ஐ.ஏ.எஸ்

"ஜீவன் முக்த"னுக்கு இலட்சணம் சொல்லியிருக்கிறார் ஆதிசங்கர பகவத்பாதர். ஜீவன்முக்தன் எப்போதும் சாந்தி நிலையிலேயே இருப்பான் என்றும் சம்சார சாகரமாகிய பந்தங்களினின்று முற்றிலும் விடுபட்ட அவன் இவற்றில் அகப்பட்டுத் தவிக்கும் மற்ற மானிடர்களையும் கரையேற்றி அனுக்ரஹிப்பான் என்றும் சங்கரர் கூறுகிறார். எவ்வித காரணமுமில்லாமல் இப்படிப்பட்ட மகத்தான உதவியை ஜீவன்முக்தன் கருணை உள்ளத்துடன் அனாயாசமாகச் செய்கிறான். இளவேனில் காலம் இயற்கையாகவே மக்களுக்கு எவ்விதம் மகிழ்ச்சியை அளிக்கின்றதோ அதே போன்று ஜீவன்முக்தனும் உலகினரை உய்விக்கிறான் என்பது ஆதி சங்கரர் வாக்கு.

இத்தகைய உயர்ந்த இலட்சணங்களுக்கு நம்மிடையே நடமாடும் இலக்கணமாக விளங்கிக்கொண்டு நம்மை எல்லாம் அனுக்கிரஹித்து வருபவர் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்தைத் தற்போது அலங்கரித்து வரும் ஸ்ரீ ஜகத்குரு சங்கராசாரிய ஸ்வாமிகள். ஆதிசங்கரரால் ஸ்ரீ காஞ்சியில் ஸ்தாபிக்கப்பட்டு, அவருடைய குறுகிய கால உலக சஞ்சாரத்தில் இறுதி நாள் வரையில் அவர்தம் நேரடி சம்பந்தத்தால் புனிதமடைந்ததும் புராதனப் பெருமை வாய்ந்ததுமான ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம். நமது பாரதத்தில் ஒவ்வொரு நூற்றாண்டிலும், ஒவ்வொரு சகாப்தத்திலும் மகான்களும் அனுபூதிமான்களும் பலர் தோன்றியிருக்கின்றனர். ஆனால் இவர்கள் தனிப்பட்டமுறையில் தங்களுடைய அபார ஆன்மிக வளர்ச்சியின் பெருமையினால் உயர்ந்தவர்கள். இதற்கும் மேலாக மட்டுமின்றி, உலக மக்களின் ஆன்மிகத் தேவைகளுக்காகவே இடைவிடாது பணியாற்றுவதை லட்சியமாகக் கொண்டுள்ள ஒரு புனித மடத்தின் பீடாதிபதியாகவும் விளங்கும் ஜீவன்முக்த ஆசாரியர்கள் என்று பார்க்கப்போனால் அப்படி இரு வகையிலும் பெருமையுற்றவர்கள் மிக மிகச் சிலரே என்று காண்போம். ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் மிகவும் புராதனமானது. ஆதிசங்கரர் காலத்திலிருந்து இன்று வரை ஆசாரிய பரம்பரைத் தொடர் அற்றுப் போகாமல், பல மகான்களும், யோகிகளும் இப்பீடத்தில் வீற்றிருந்திருக்கின்றனர். புகழ் கமழும் இப்பீடத்தை இன்று அலங்கரிக்கும் பூஜ்யரான ஆசாரிய புருஷர் எல்லோராலும் "நடமாடும் தெய்வம்" என்றும், "ஜீவன் முக்தர்" என்றும், "ஆதிசங்கரருக்குச் சமமான ஜகத்குரு" என்றும் ஒருமுகமாகப் பக்தியுடன் போற்றப்படும் மகாபுருஷராவர். ஜீவர்களுடைய ஆன்மிக உயர்வுக்காகப் பணியாற்றும் ஒரு மாபெரும் பீடத்துக்கு ஸ்ரீ ஆசாரியாளைப் போன்ற ஒரு மகான் பீடாதிபதியாக அமைந்திருப்பது மிகவும் அரிய இணைப்பாகும்.

சாதாரண மத்தியதரக் குடும்பத்திலே பிறந்த ஸ்ரீ ஆசாரியாள் தமது பன்னிரண்டாவது ஆண்டிலேயே தொன்மையான இப்பீடத்தில் அமர நியமிக்கப்பட்டார். அவருடைய அபார அறிவாற்றலினாலும், இயல்பாகவே அமைந்த ஆன்மிகச் சம்பத்தாலும், தவ ஒழுக்கத்தாலும் நம் நாட்டிலேயே சமய வாழ்க்கையில் மிக உயர்ந்த ஸ்தானத்தைப் பெற்றிருக்கிறார். அவர் ஒரு மடாதிபதி மட்டும் அல்ல; தர்க்க பரிபாஷையில் விவாதிக்கும் பாண்டித்தியமுள்ள உயர் மேதை மட்டுமல்ல; ஆன்மிகத்துக்கு ஆதாரமான தெய்வீக நலன்கள் அனைத்தும் தம்மிடம் ஒருங்கே குவியப் பெற்றவர். சோகத்திலாழ்ந்துள்ள ஜீவான்மாக்களுக்கு அவருடைய தரிசனமே இதத்தையும் ஆறுதலையும் அளிக்கிறது. காண்போரை உடனே ஆட்கொள்ளும் ஆன்மிக சக்தியும், அதி விநயமும், தம்மை அடைந்தோர் அனைவரையும் உய்விக்கும் ஆவலும் அவர் தோற்றத்தில் பளிச்சிடுவதைக் காணலாம். அவருடைய அழகான பரந்த நயனங்கள் எப்போதும் சாந்தி ஒளியைப் பரப்பிக் கொண்டிருக்கும். உலக விவகாரத்திலிருந்து அறவே விலகி நிற்பதால் ஏற்படும் உள் அமைதியைப் பிரதிபலிப்பது அவரது அருள் பார்வை. அவரது தோற்றத்தின் காந்தி ஜீவர்களையெல்லாம் தனது கருணை நோக்கில் அணைத்துக் கொள்ளும் வசீகர சக்தியுள்ளது. மத்தியகாலச் சகாப்தங்களில் வாழ்ந்த கிறிஸ்தவப் பெரியார்கள் பலரைப் பற்றிச் சரித்திரங்கள் பேசுகின்றன. அவர்களுடைய புன்சிரிப்பில் குழந்தைகளின் எளிமையும் ஆனந்தமும் வசீகரமும் தவழுமாம். அவர்களுடைய ஆன்மிகச் சக்தியின் ஒளி அவர்களைச் சுற்றிப் பரவி அருகிலுள்ளவர்களையும் கவருமாம். அத்தகைய பெரியோர்களைப் போன்ற தோற்றப் பொலிவையும், ஆன்மிக ஒளியையும் ஸ்ரீ ஆசாரியாளிடம் பலர் கண்டு வியக்கின்றனர். தமக்கு என்று எவ்வித அதிகாரத்தையோ, ஆடம்பரத்தையோ என்னளவும் விரும்பாத மடாதிபதி அவர். எனினும், எல்லாவற்றையும் துறந்ததால், எல்லாமே அவரை வந்து அடைகின்றன போலும்! நம்முடைய கவலைகளும்துக்கங்களும்கூட இப்படித்தான் அவரை அடைகின்றனவோ!

அழிவில்லாததும், என்றும் நிலையுள்ளதுமான நித்திய வஸ்துவின் வடிவமாகவே ஸ்ரீ ஆசாரியாள் அவரைக் காணச் செல்வோருக்குத் தோன்றுகிறார். தமது கருணையினாலும் அனுக்ரஹிக்க வேண்டும் என்ற எண்ணத்தாலும் நமக்கெல்லாம் அபயம் அளிக்கும் அவருடைய புனிதக் கரங்கள் "நாம் யார்" என்ற உண்மை சொரூபத்தை நமக்கு உணர்த்தி நாம் இழந்துவிட்ட ஆன்மிகத்தை மீட்டுத் தருகின்றன. ஸ்ரீ ஜகத்குருவிடம் உண்மையான பக்தி கொண்டவனும் மற்றவரிடம் பகை உணர்ச்சி கொள்ளவே மாட்டான். அவரைப் பேட்டி கண்டு பேசுவது கிடைக்கப் பெறாத ஒரு தனி அனுபவம். இத்தகைய ஒரு பெரிய அனுபவத்துக்குப்பின் ஒருவன் முன்னைக் காட்டிலும்

வேறு மனிதனாகவே மாறிவிடுவான். இப்படி மாறி விடுவதைத் தானே உணரவும் செய்வான். பல கோரிக்கைகள், பல பிரார்த்தனைகளுடன் பலர் அவரைக் காணச் செல்லுகிறார்கள். அவர்களது கோரிக்கைகள் நிறைவேறுகின்றனவோ இல்லையோ, அவர்களுடைய துயரத்துக்கு நிவாரணம் கிடைக்கிறது. பக்தியுடனும் உள்ளன்புடனும் அவரை அணுகும் ஒவ்வொருவனும் விவரிக்க முடியாத உயர் சக்தியின் முன்னிலையில் இருப்பதாகவும், அந்தச் சக்தி தன்னுள் ஊடுருவிச் சென்று தனது வேதனை உணர்ச்சிகளுக்கு அமைதியை அளிப்பதையும் உணரத் தவற மாட்டான்.

ஆசாரியாளின் ஆன்மிகச் சக்தியினால் விளைந்த அற்புதங்களைப் பற்றி, பக்தர்களின் அநுபவங்கள் பல உண்டு. இவற்றில் பல உண்மைச் சம்பவங்கள். சில சம்பவங்கள் பக்தர்களின் பக்திப் பெருக்கால் மிகைபடச் சொல்லப்படுவதும் உண்டு. ஆனால் ஜகத்குருவின் உண்மை ஸ்வரூபத்தை உள்ளபடியே அறிய ஆவல் உள்ளவர்களுக்கு இந்தச் சம்பவங்களைப் பற்றிய ஆராய்ச்சி அர்த்தமற்றது. தீராத நோய் தீர்ந்தது; புத்திர பாக்கியமில்லாத தம்பதிக்கு அந்தப் பாக்கியம் கிடைத்தது; அல்லது ஏதோ பெரிய விபத்து ஒன்று முன்னெச்சரிக்கையால் தவிர்க்கப்பட்டது; இத்தியாதி சம்பவங்கள் பலப் பல உண்டு. ஆனால் இவை முக்கியமே அல்ல. இவற்றை மிகச் சாமானியம் என்று ஒதுக்கி விடலாம். ஆனால் ஸ்ரீ ஆசாரியர் புரியும் அற்புதம் என்னவென்றால் அவரை உண்மையான உள்ளன்புடனும் பக்தியுடனும் அணுகும் ஒவ்வொருவரின் உள்ளத்தையும் அவனறியாமலே புத்துணர்ச்சி பெறும் வகையில் மாற்றி விடுவதுதான். சரணாகதி மனப்பான்மையுடன் அவரிடம் செல்பவன், தன்னுள்ளே ஒரு சக்தி பாய்வதையும், அதன் விளைவாகத் தன் சரீரம் முழுவதிலும் புத்துணர்ச்சி பரவுவதையும், ஆனந்த வெள்ளத்தில் மிதப்பது போன்ற உணர்ச்சியையும் அநுபவிக்கத் தவற மாட்டான்.

அவருடைய அருகில் முழு மௌனத்துடனும் பிரார்த்தனை உள்ளத்துடனும் அமர்ந்திருந்தால், அவருடைய தரிசனத்தின் முழுப் பயனைப் பெற முடியும். அமைதியுடன் இவ்வாறு அமர்ந்திருப்பின் சஞ்சலப்படும் மனம் சிறுகச் சிறுக அமைதியுறுவதையும், ஆன்மிக உணர்ச்சி கொஞ்சம் கொஞ்சமாகப் பெருகுவதையும் அநுபவிக்கலாம். தனது உள்ளத்தின் ஆழத்திலும், தன்னுடைய மிக நுட்பமான உணர்ச்சிகளின் அடித்தளங்களிலும் ஆன்மிக சக்தி தடையின்றி, அமைதியாக ஊடுருவிப் பாய்வதை உணரலாம். இதன் விளைவாக மனத்திலுள்ள கவலைகளும் சந்தேகங்களும் சூரியனைக் கண்ட பனிபோல் மறைந்து போவதையும் உணரலாம். இத் எந்தவித செயலிலும் நாட்டம் செல்லுவதில்லை. ஆனந்த வாரிதியில் அப்படியே செயலற்று மிதந்து கொண்டிருக்கவே தோன்றும். இந்நிலையை விட்டுச் சாதாரண அகங்காரமான சஞ்சல நிலைக்கு வரும்போது துக்கமே தோன்றும். இவ்வாறு சில காலம் அவர் முன்னிலையில் இருந்தால், நமது மனத்தை அவரிடம் முழுமையாக அர்ப்பணிப்பது தவிர்க்க முடியாததாக ஆகிவிடும். அந்தப் பக்குவ நிலையில் ஸ்ரீ ஜகத்குருவின் சக்தி நம்மை முழுதும் ஆட்கொண்டு, நாம் செய்ய வேண்டிய சாதனைகளைக்கூட ஸ்ரீ குருவே செய்து விடுகிறார். காமக் குரோதங்கள், நம்முடைய பாவங்கள், நமது வேதனைகள், நமது சிறுமைகள் — இவைதாமே நம்மிடம் உள்ளவை? இவற்றையெல்லாம் ஸ்ரீ ஆசாரியாளிடம் தத்தம் செய்துவிட்டு அவற்றுக்குப் பிரதியாகக் கருணை, அமைதி, ஆனந்தம், அநுக்ரஹம் இவற்றையல்லவா பெறுகிறோம்? இதைக் காட்டிலும் பெரிய அற்புதம் இருக்க முடியுமா ?

அன்றாடம் வாழ்க்கையில் கஷ்டப்பட்டு உழன்று கொண்டிருக்கும் நம் போன்றவர்களின் தினசரிப் பிரச்னைகளைப் பற்றி ஸ்ரீ ஆசாரியாளுக்குத் தெரியாது என்றும், அவர் முற்றிலும் உலகத்தை மறந்து தமது ஸ்வாநுபூதி நிலையிலேயே நிலைத்து நிற்கும் தனிப் பிறவி என்றும் எண்ணினால் அது தவறே ஆகும். எல்லாவற்றையும்



அறவே துறந்தவர்களுக்குள்ள "பற்று" அவருக்கும் பூரணமாக உண்டு. இதனால் எல்லாம் துறந்தாலும், எல்லாவற்றிடமும் தயையும் கருணையும் பரவியுள்ளது அவரிடம். எவ்வளவு சுலபமாக யார் வேண்டுமானாலும் அவரை அணுகிப் பேசலாம் என்பது அவருடைய பரிபூரண விநயத்தையும், உயர்ந்த மனிதாபிமானத்தையும் பளிச்சென எடுத்துக் காட்டுகிறது. விதம் விதமான மக்கள், விதம் விதமான பிரச்னைகளுடன் வெவ்வேறு கவலைகளுடன் ஸ்ரீ ஸ்ரீ ஸ்வாமிகளைக் காணத் தினந்தோறும் வருகின்றனர். எந்த அளவுக்கு அவருடைய ஆதரவைப் பெற அவர்கள் வருகிறார்களோ, அந்த அளவுக்கு அவரவர்களுக்கு ஆதரவு அளிக்கிறார். அவர் பதில் அளிக்கும் சாதுரியம், பல விவகாரங்களை அவர் புரிந்து கொள்ளும் அபாரத் திறமை, நவீன யந்திர நுட்பங்களையும் மிக நுணுக்கமாகக் கேட்டுத் தெரிந்து கொள்ளும் சூக்ஷ்ம அறிவு, வாதத் திறமை, அவருடைய ஞாபக சக்தி — மற்றும் இவை போன்ற பல விஷயங்கள் எல்லோருக்கும் நன்றாகத் தெரிந்தவைகளே. இவையெல்லாம் ஸ்ரீ ஆசாரியாளின் பெருமையையும் அபார ஆற்றலையும் உயர் பண்புகளையும் காட்டுகின்றன.

உலகத்தின் பல பாகங்களிலிருந்து ஸ்வாமிகளைக் காண வருபவர்கள் தங்கள் அநுபவங்களைப் பற்றி எழுதியிருக்கின்றனர். ஒவ்வொருவரின் அநுபவம் ஒவ்வொருவிதமாக இருந்தாலும், அவருடைய ஆன்மிக சக்தி பற்றி எல்லோரும் ஒருமித்த அபிப்பிராயத்தைத்தான் தெரிவிக்கின்றனர். அவரிடமிருந்து பிரகாசிக்கும் ஆன்ம ஒளி சுற்றிலுமுள்ளவர்களை ஆட்கொண்டு, அவர்களின் உள்ளங்களில் எவ்வித அமைதி உணர்ச்சியையும் ஆனந்தத்தையும் உண்டாக்குகின்றன என்பதை எல்லோரும் சொல்லுகின்றனர்.

தினசரி நடவடிக்கைகளில் ஸ்ரீ ஆசாரியாளும் நம்மைப் போலவே ஒரு சாதாரண மானிடப் பிறவிதான் என்ற எண்ணத்தையே காண்போருக்குத் தோற்றுவிப்பார். ஆனால் அவருடைய நடவடிக்கைகளைக் கூர்ந்து கவனித்தால், அவர் தமது உடலைத் தருமச் செயல்களுக்குக் கேவலம் ஒரு கருவியாக மட்டுமே உபயோகிக்கிறார் என்பது தெரிய வரும். அநுஷ்டானங்களை அவர் விடாமல் பின்பற்றுவதன் மூலமாகவே நாமும் நம்முடைய ஸ்வதர்மத்தைக் கடைப்பிடிக்க வேண்டும் என்பதை உணர்த்திவருகிறார். முற்றிலும் விடுபட்ட நிலையிலும் அவர் பின்பற்றும் கடுமையான அநுஷ்டானங்களும், மேற்கொள்ளும் மௌனங்களும், விரிவான முக்கால தினசரி பூஜைகளும், விதிமுறைகளைச் சிறிதும் மீறாது செய்யும் காரியங்களும், நம் போன்றவர்கள் நமது கடமைகளைக் குறையாது செய்ய வேண்டும் என்பதைச் செயல்மூலம் காட்டுவதற்காகவே.

நாம் கேவலம் ஜட ஜந்துக்கள் அல்ல; பரம்பொருள் என்ற சித்துக் கனலின் பிரகாசமான ஒரு பொறி; மங்கிக் கிடக்கும் அந்த ஆன்மிகப் பேரொளியை ஜ்வலிக்கச் செய்து நம்முடைய உண்மைப் பெருமையை அடைவதே வாழ்க்கைப் பயன் — இந்த உண்மைகளை ஸ்ரீ ஆசாரியரின் தரிசனமும் ஸந்நிதியும் நமக்கு ஞாபகமூட்டுகின்றன. புனிதம் என்று எதெதையெல்லாம் நாம் கருதுகிறோமோ அவ்வனைத்தின் வடிவமாக, குவியலாகவே அவர் இருக்கிறார். சச்சிதானந்த நித்திய வஸ்து வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாதது என்று சமயங்கள் போதிக்கின்றன. ஆனால் அந்த உண்மை ஸ்வரூபம், மானிட உருவத்தில் நிலைத்து நிலவுகிறது — நம் போன்றவரின் நன்மைக்காக, நம்முடைய உணர்வுகளைத் தூய்மைப்படுத்துவதற்காக. அகண்ட பிரபஞ்சமும், தனக்கெனத் தனி ஸ்வரூபமின்றி நித்தியமான பரம்பொருள் தத்துவத்துள் அடங்கியே பிரகாசிக்கிறது. உலக வடிவில் தோற்றமளித்துக் கொண்டிருந்தாலும் அந்தப் பூரண வஸ்து தனித்தும் விளங்கிக் கொண்டிருக்கிறது என்றெல்லாம் அத்வைத சித்தாந்தம் வலியுறுத்துகிறது. இந்தச் சித்தாந்தத்தை உலகினுக்களித்த ஸ்ரீ ஆதிசங்கரரின் வழித்தோன்றி நம்மிடையே நடமாடும் உண்மைப் பிரதிநிதியான ஸ்ரீ ஆசாரியர் ஆதிசங்கரரின் அவதாரமே என்பதில் சந்தேகமில்லை. ஸ்ரீ ஜகத்குருவின் வாழ்க்கையே அத்வைதப் பேருண்மைகளின் சஞ்சரிக்கும் வடிவம்.

ஸ்ரீ ஆசாரியர் நம்மிடையே வாழ்வதும், நம்மிடையே நடமாடுவதும், நமது பெரும் பாக்கியம். அவருடைய தெய்வீக சாந்நித்தியத்தைக் காணாது, அந்த அருள் ஒளியின் ஆனந்தத்தில் திளைக்காது நாம் இருந்து விட்டால் அதற்காக நாம்தான் வருந்த வேண்டும். ஸ்ரீ ஆசாரியாள் பல்லாண்டு வாழ வேண்டும். வேதங்களில் மானுட ஆயுளாகச் சொல்லப்படும் நூறாண்டு மட்டுமல்ல; ஒவ்வோர் ஆண்டும் நூறு மாதங்களாக, ஒவ்வொரு மாதமும் நூறு நாட்களாக, ஒவ்வொரு நாளும் நூறு மணிகளாக, ஒவ்வொரு மணியும் நூறு விநாடிகளாக, எல்லாமே நூறு நூறாக உள்ள நூறாண்டுகள் அவர் வாழ்ந்து நம்மையெல்லாம் நல்ல கதி அடைவிக்க இறைவன் அருள் செய்ய வேண்டும்.

वर्षे मासाः समीयुश्शतमथ दिवसास्सन्तु मासे शतं चा-
प्यह्नि स्यादेव भव्यं प्रहरशतमथोऽस्मिंश्च घण्टाशतं स्यात् ।
घण्टायां स्युर्निमेषाश्शतमिति गणनाऽतीतपूर्णं शताऽयुः
भूयात् श्रीकामकोटीजगदखिलगुरोर्लोककल्याणहेतोः ॥

# WATER SUPPLY
*in rural or urban areas*
# is not a problem
*when you install*
## MYERS Deepwell Ejecto Pump

**For continuous supply of cool, fresh water under pressure Myers EJECTO Pump has no equal.**

*Consider these advantages :-*

1. It supplies water directly from source to any desired point or points.
2. It can be installed at ground level.
3. It needs no overhead tank.
4. Its capacity of 300 to 5000 g.p.h. is suitable for most needs.
5. It works silently, efficiently, economically.
6. It is ideal for small industries, hotels, flats, etc.



## 4 good reasons why you should buy this pump:–

1. *Compact and simple.* Parts easily accessible for maintenance.
2. *Robust construction.* Pumps and parts guaranteed against faulty workmanship.
3. *Motor above ground level.* No danger of catching damp and burning out.
4. *Elimination of noise.* Noise-free operation is a great asset where large quantities of water have to be pumped daily.

*There are other*




*Power Pumps & Hand Pumps, too.*

**WATER SUPPLY SPECIALISTS PVT. LTD.**

Kal-Ma, 330, Thambu Chetty Street, Madras-1

1. ..ந்தியாவின் முதல் ..மேயர் என்ற பெருமை ..ற பெண்மணி யார்?



2. பகவத் கீதையின் தொடர்ச்சி எனக் கருதப்படுகிறது இந்த கீதை. இதன் பெயர்?



3. மூன்று பல்கலைக் கழகங்களைத் தன்னுள் அடக்கிய பெருமை பாரத நகரம் ஒன்றைச் சாரும்! நகரம் எது?



4. உலகில் ஆயிரக்கணக்கான நெல் ரகங்கள் உள்ளன. சுமார் எத்தனை ஆயிரம் இருக்கலாம்: 5000? 6000? 7000?



5. கவியரசர் ரவீந்திரரின் நூல்கள் சிலவற்றை வங்க மூலத்திலிருந்து நேரடியாக மொழிபெயர்த்த முதல் ஐரோப்பிய மொழி வல்லுநர் யார்?



6. இந்த ஐரோப்பிய நாட்டில் மூன்று வயதுக்குட்பட்ட குழந்தைகள் எத்தனை உண்டோ, அத்தனை நாய்கள் இருக்கின்றனவாம்! எந்த நாடு அது?



7. நாயின் உடலில் ஒரே ஒரு பாகம்தான் வியர்வையை வெளியிடுகிறது. எந்த பாகம் அது?



8. பாரதத்தில் மிக அதிகமான மாவட்டங்கள் உள்ள ராஜ்யம் உத்தரப்பிரதேசம் தான். மாவட்டங்கள் மொத்தம் எத்தனை?

— பரணி



விடைகள்:

1. சுலோசனா மோடி (பம்பாய்)
2. அனு கீதை.
3. காசி. (1. பனாரஸ் இந்து சர்வ கலாசாலை. 2. வாரணசிய சம்ஸ்கிருத விசுவ வித்யாலயா. 3. காசி வித்யா பீட்)
4. 7,000
5. பேராசிரியர் வின்சென்ட் லெஸ்னி (செக்கோஸ்லோவாகியா).
6. பிரிட்டன்
7. நாக்கு.
8. 54.



## உயிர் வாங்கும் விளையாட்டு

வருடத்துக்கு 600 உயிர்களைப் பலி வாங்கும் ஒரு விளையாட்டு இருப்பது உங்களுக்குத் தெரியுமா? தெரிந்து கொள்ளுங்கள். 'பில்லியர்ட்ஸ்' என்ற விளையாட்டு வருடத்துக்கு 600 உயிர்களைப் பலி வாங்குகிறது. ஆச்சரியப்படாதீர்கள்! 'பில்லியர்ட்ஸ்' விளையாட்டுக்கான பந்துகளைச் செய்ய உலகமெங்கும் ஒவ்வொரு வருடமும் சராசரி 600 யானைகள் கொல்லப்படுகின்றனவாம்.

— தி. கு. ரா.



## மின்சாரத் தடி

மணிலாத் தீவு போலீஸார் இனி தடியடிப் பிரயோகம் செய்ய வேண்டாம். அடிக்க வேண்டியவர்களைத் தடியால் தொட்டாலே போதும். அவர்கள் ஓடி விடுவார்கள். காரணம், தடி மேலே பட்டதும் ஷாக் அடிக்கும். தடியில் 85 வோல்ட் மின்சாரம் தரக்கூடிய பேட்டரி பொருத்தப்பட்டுள்ளதே இதற்குக் காரணம்!

ஆதாரம்: 'டிட்பிட்ஸ்'
தகவல்: ச. ஸ்ரீதரன்






★ தலை மயிர் அதிகமாக உதிருகிறதா? ஏன் கவலைப் படுகிறீர்கள்? சவுரிகள் தான் கடையில் பல நிறுசுகளில் விற்கிறதே! ஒன்றை வாங்குங்கள்.

★ பளபளப்பான பற்கள் வேண்டுமா? நாளொன்றுக்கு 48 முறை பல் தேயுங்கள்! மறுநாள் பல் இல்லாவிட்டால் இருக்கவே இருக்கிறார் டாக்டர்!

★ எடை ஏறுவது குறித்துக் கவலைப் படுகிறீர்களா? எடை எடுப்பதை நிறுத்திவிடுங்கள். கவலை இருக்காது!

★ முகத்தில் எப்போடம் எண்ணெய் வழிகிறது. எண்ணெய் விற்கிற விலையில்... வழியட்டுமே, அதனால் உங்களுக்கு என்ன நஷ்டம்?

அனுப்பியது : லட்சுமிரமணன்





## — வாவென்று அழைக்கணுமா? —

மலர்ந்த தாமரையின் நறுமணத்தைக் காற்றின் உதவி கொண்டு நுகர்ந்து, வண்டு தானாகவே அதை அடைந்து விடுகிறது. இனிப்புப் பண்டங்கள் இருக்கும் இடத்தை நோக்கி எறும்புகள் தாமாகவே வந்து சேருகின்றன. வண்டுகளையோ எறும்புகளையோ யாரும் வாவென்று அழைப்பதில்லை. அதேபோல நம் உள்ளம் தூய்மையாகவும் பூரண மெய்யறிவும் பெற்றதாகவும் ஆகிவிட்டால், அதன் அரும் பெரும் நறுமணம் தானாகவே நாற்புறமும் பரவுகிறது. உண்மையிலே நாட்டம் கொண்டு அதை நாடி வருபவர்கள், தாமாகவே அதைத் தேடி வருவார்கள். அத்தகைய உள்ளம் 'என்னிடம் வா. என் சொல்லைக் கேள்' என்று யாரையும் வருந்தி அழைப்பதில்லை.

— ராமகிருஷ்ண பரமஹம்ஸர்



## வெற்றி கரித்துண்டில் இருக்கிறது!

இது பரீட்சைக் காலம். தேர்வு எழுதச் செல்லும் மாணவர்கள் பலர் வெற்றிக்காகத் தங்கள் குலதெய்வத்தை வழிபட்டுச் செல்வதையும், விநாயகருக்கு 'வெடல்' போடுவதாக நேர்ந்து செல்வதையும் கண்கூடாகக் காண்கிறோம். இது நமது பண்பாடு.

ஆனால் மேல்நாட்டில் என்ன செய்கிறார்கள் தெரியுமா? பரீட்சைக்குப் போகும்போது ஒரு நிலக்கரித் துண்டைச் சட்டைப் பையில் போட்டுக் கொள்கிறார்கள். மாணவர்களிடம் மட்டுமல்லாது பெரியவர்களிடமும் இந்தப் பழக்கம் நிலவுகிறதாம்.

கொள்ளைக்காரர்கள் தங்கள் குலத் தொழிலுக்கு — அதாவது கொள்ளையடிக்கப் புறப்படும் போது ஆயுதங்களோடு ஒரு கரித் துண்டும் கொண்டு செல்கிறார்கள்.

1955ல் சர் அந்தோணி ஈடன் (அப்போதைய பிரிட்டிஷ் பிரதமர்) பொதுத் தேர்தலில் போட்டியிட்ட போது ஒரு பள்ளிச் சிறுமி நடந்துசென்று அவர் கையில் ஒரு கரித் துண்டைக் கொடுத்தாளாம். அவருக்குத் தேர்தலில் வெற்றி கிடைக்க வேண்டுமென்று!

பார்த்தீர்களா கரித்துண்டின் மதிப்பை?

தகவல்: கே. பி. சம்சுதீன்



"இன்னிக்கு நீந்தக் கத்துண்டது போதுமடா!"

"ஏண்டா? ரொம்பக் களைப்பா இருக்கா?"

"இல்லேடா. வயிறு நிரம்பி விட்டது!"

— பி. பாலு

# Over 6,000 Bends!

Cold-bends · Hot-bends · Mitre-bends

# Designed, Fabricated and Supplied to GUJARAT REFINERY PROJECT

எங்களால் செய்யப்பட்ட இந்த பெண்ட்கள் ஸ்தலத்திலேயே ஹைட்ராலிக் முறைப்படி பரிசோதிக்கப்பட்டு உரிய காலத்தில் திட்டப்படி வேலை நிறைவேற்றப்பட்டது.

மிகக் கடுமையான ரேடியோ கிராபிக் பரிசோதனைகளிலும் தேர்வுபெறும் வண்ணம் இரசாயனப் பொருள்கள், வாயு, எண்ணெய், நீர் ஆகியவற்றுக்கான தொழில் நிறுவனக் குழாய்களைத் திட்டமிட்டு இணைத்து நிருமாணித்துத் தருகிறோம்.



*Erection of 95 ton, 100-feet high column for Gujarat Refinery Project.*

உங்களது அடுத்தபணிக்கு ஆலோசனைகளைப்பெற அணுகுக:

**Dodsal**

டாட்ஸல் பிரைவேட் லிட்.

மபத்லால் ஹவுஸ்
பேக்பே ரிக்ளமேஷன், பம்பாய்-1

கிளைகள்: புது தில்லி
கல்கத்தா - ஹைதராபாத் - ரூர்கேலா
சென்னை - பாட்னா - பரோடா
பெங்களூர் - கௌஹாத்தி

## 44. முத்துச் சிவிகை

சிவபாத இருதயர் ஞானக் கன்றை எடுத்துத் தோள் மேல் வைத்துக் கொண்டு சென்றார். சிவானந்த வெள்ளம் போல் அடியார்கள் திருவீதியில் புடைசூழ்ந்து சென்றார்கள்.

சிவபாத இருதயர் சிவஞானப் பிள்ளையாருடன் தமது திருமாளிகையில் நுழைந்த பொழுது சங்கநாதம் எழுந்தது. அந்தர துந்துபி முழங்கியது. பிள்ளையார் திருமாளிகையினுட் சென்றார்.

அன்றிரவு ஆண்டவரை எண்ணிய வாறே ஞானசம்பந்தர் கண் துயின்றார். ஆராவமுதனைய அண்ணலைச் சேவிக்கும் பொருட்டுக் கதிரவன் வருமுன் கோயிலை அடைந்தார். கோயிலை அடைந்ததும் தமக்குத் திருவருள் செய்த சிவத் தந்தையாரையும், ஞானப் பால் அளித்த புண்ணியத்



# சிவனருட் செல்வர்

திருமுருக கிருபானந்த வாரியார்

தாயாரையும் போற்றி வணங்கி, சீகாழிக்கு அருகில் உள்ள திருக்கோலக்காவில் எழுந்தருளியுள்ள இறைவனை இறைஞ்சும்பொருட்டுச் சென்றார். ''மடையில் வாளை பாய'' என்ற திருப்பாடலைப் பாடித் தமது திருக்கரங்களால் தாளமிட்டார். அம்பலவாணரது கருணையினால் திருவைந்தெழுத்து எழுதிய பொற்றாளம் அவருடைய திருக்கரத்தில் வந்தது. அதனைப் பெற்ற தெய்வமறைச் சிறுவர் திருவருளின் திறத்தை நினைந்து போற்றினார். பொற்றாளத்தை முழக்கி, ஏழிசையும் தழைத்து ஓங்க இன்னிசைப் பதிகத்தை முடித்துத் திருக்கடைக் காப்புச் சாத்தியருளினார். அமரர்கள் அதிசயித்தார்கள். தும்புரு நாரதர் முதலிய இசைவல்லார்கள் அப்பொற்றாளத்தின் அரிய நாதத்தைக் கேட்டு விம்மிதமுற்றுத் துதித்தார்கள். வள்ளலாருடைய திருவருளைப் போற்றிய பிள்ளையார் பொற்றாளத்துடன் சீகாழியை நோக்கிப் புறப்பட்டார். அவர் நடந்து செல்வதைக் கண்டு மனம் பொறுக்காத தந்தையார் அவரை எடுத்துத் தோளில் தரித்து நடந்தார். முத்தமிழ்விரகர் தோணியப்பரை வணங்கித் தமது திருமாளிகையை அடைந்தார்.

திருஞானசம்பந்தருடைய அன்னையார் அவதரித்த திருநனிபள்ளியிலும் ஏனைய தலங்களிலும் வாழ்கின்ற அந்தணர்கள் அடியார்கள் ஆகியோர் மிகுந்த மகிழ்ச்சியுடன் வந்து பாலறு வாயரது பாதமலர் மீது வீழ்ந்து பணிந்தார்கள். வந்தவர்கட்கெல்லாம் உணவு முதலியன தந்து உபசரிக்கின்ற சீகாழி அப்போது சிவலோகம் போல் விளங்கியது.

பல தலங்களிலுள்ள அடியார்களின் வேண்டுகோளுக்கு இணங்கி ஆளுடை பிள்ளைகள் திருநெறிப் பள்ளி, திருவேற்காடு, தென் திருமுல்லைவாயில் முதலிய பல பதிகளைத் தரிசித்துப் பதிகங்கள் பாடியருளினார்.

இசையில் மிக வல்லுனரும், சிவ பெருமானது திருவடி மறவாத திரு வுடையவருமாகிய திருநீலகண்ட யாழ்ப் பாணர் தமது மனைவியார் மதங்க சூளாமணி யம்மையாருடன் சம்பந்த ரது திருவடிகளை வணங்கும் பொருட் டுச் சீர்காழிக்கு வந்தார். சம்பந்தர் அவரை அழைத்துக் கொண்டு திருக் கோயிலின் திருமுன் சென்று வணங் கச் செய்தார். ''இங்கிருந்து இசை யுடன் யாழ் மீட்டி உங்கள் பெரு மானைப் பாடுங்கள்'' என்று கட்டளை யிட்டருளினார். திருநீலகண்ட யாழ்ப் பாணர் தமது மனைவியார் மதங்க சூளாமணியாருடன் யாழ் மீட்டி மிக இனிமையாகப் பாடினார். சம்பந்தர் அதனைக் கேட்டு உள்ளம் உவந்தார். அனைவரும் அதிசயித்தார்கள். சந்திர மண்டலத்தில் வாழும் கின்னர மிது னம் என்ற இரு பறவைகளும் இசை யினைக் கேட்க இறங்கி வந்தன. ஏழிசை நூலில் வல்லவர்களாகிய கந்தர் வர்களும் வித்யாதரர்களும் வியந்து பாராட்டினார்கள்.

சம்பந்தர் பாணரையும் அவர் மனைவி யாரையும் அழைத்துக் கொண்டு போய் உறைவிடம் ஒன்றைத் தந்து, நல் விருந்து செய்து சிறப்பாக உபசரித் தார். பிள்ளையார் பாடியருளிய பாடல் களைக் கேட்டுப் பாணனார் பெரிதும் மகிழ்ந்தார். அத் திருப்பதிகங்களை யாழில் அமைத்து மிக இனிமையாக வாசித்து எல்லா உயிர்களையும் மகிழ் வித்தார். ''எந்தையே! அடியேன் தேவரீர் பாடியருளும் பதிகங்களை யாழில் வாசித்து எப்போதும் உம் மைப் பிரியாது சேவித்துக் கொண்டு அருகில் இருக்கும் பெரும் பேற்றினைத் தந்தருள வேண்டும்'' என்று பணிந் தார். சம்பந்தரும் ''அவ்வாறேயாகுக'' என்று அருளிச் செய்தார்.

தில்லை ஈசனைத் தரிசிக்க வேண்டும் என்ற பெரு விருப்பத்தைத் தந்தை யாரிடம் சம்பந்தப் பெருமான் அறி வித்தார். அவரும் அதற்கு இசைந்து உடன் புறப்பட்டார். திருநீலகண்ட யாழ்ப்பாணரும், மதங்க சூளாமணி யாரும், ஏனைய அடியார்களும் உடன் சென்றார்கள். இடையிடையே உள்ள திருத்தலங்களை வணங்கிக் கொண்டு கழனிகளையும் படுகரையையும் கடந்து கொள்ளிட நதியை அடைந்தனர். சந் தனக் கட்டைகளையும் மணிகளையும் கொழிக்கும் அப் பெரு நதியைக் கடந்து தில்லையின் எல்லை வந்து வணங்கினார்.

திருஞானசம்பந்தருடைய வரவைக் கண்டு மகிழ்ந்த சோலைகள் ஆடின; சாலிகள் தலை வணங்கின; இனிய காற்று எதிர் கொண்டது. தென் திரு வாடலின் வழியே சென்றார் சம்பந்தர். இவரது வருகையை அறிந்த தில்லைவாழ் அந்தணர்களும் அடியார்களும் நிறை குடம் வைத்துத் தோரணங்கள் நாட்டி, பூமாலைகள் தொங்கவிட்டுப் புகழ்ந்து சோபனங்கள் மொழிந்தார்கள்.

திருஞான சம்பந்தர் திருக் கோபுரத் தைத் தொழுதார். பேரம்பலத்தை வணங்கி, ஆனந்தக் கூத்தர் திருமுன் சென்றார். இறைவர் தமக்கு அளித்த ஞானமேயான பொன்னம்பலத்தையும் தமது உள்ளத்தே நிறைந்த ஞானத் தில் எழும் ஆனந்தமேயாகிய திரு நடனத்தையும் கருத்தினால் கண்டவர், கண்ணாலும் கண்டு களித்தார். கண் ணீர் ததும்பிக் கரமலரைச் சிரமிசை கூப்பி அஞ்சலி செய்தார்.

கற்றாங் கெரியோம்பிக் கலியை வாராமே
செற்றார் வாழ்தில்லைச் சிற்றம்பலம் மேய
முற்றா வெண்டிங்கள் முதல்வன் பாதமே
பற்றா நின்றாரைப் பற்றா பாவமே.

என்னும் திருப் பதிகம் பாடிப் பரவிப் பணிந்தார். எல்லாக் காலங்களிலும் வணங்கித் திருக் கோயிலை வலம் வந்த அவர், அங்கு தங்குவதற்கு அஞ்சினார். ஆதலால், அருகில் உள்ள திருவேட்களம் சென்று அங்கு எழுந் தருளியுள்ள இறைவரைத் தொழுது, அவ்விடம் தங்கினார். அங்கிருந்து திருக்கழிப்பாலை, திருநெல்வாயில் முத லிய தலங்களுக்குச் சென்று சுவா மியை வணங்கினார். தில்லையில் நட ராஜப் பெருமானுக்கு அணுக்கத் தொண்டர்களாய் விளங்கும் அந்த ணர்களின் பெருமையைக் கண்டு சம்பந்தர் அதிசயித்தார்.

ஒரு நாள் சம்பந்தர் சிதம்பரத்துக்கு எழுந்தருளினார். அப்போது அண்டர் நாயகன் அருளால் மூவாயிரம் அந் ணர்களும் சிவ கணங்களாகத் தோன்றி னார்கள். சம்பந்தர் அவ்வரிய காட் சியைத் திருநீலகண்ட யாழ்ப்பாண ருக்கும் காட்டியருளினார்.

வெம்பந்தம் அகற்றும் சம்பந்த ருடைய செம்பதம் பணிந்த திரு நீலகண்ட யாழ்ப்பாணர், ''அடியேன் பிறந்த தலமாகிய திருவெருக்கத்தம் புலியூர் வந்து சேவிக்க வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டார். அதற்கு இசைந்த சம்பந்தர் அவ்வாறே சென்று திருநீலகண்ட யாழ்ப்பாணர் அவ தரிக்கத் தவம் செய்த அந்தத் தலத்தின் பெருமை அளவிடற் கரியது என்று வியந்தார்.

தந்தையார் தோள் மீது செல் லும் சம்பந்தர் திருவரத் துறை சென்று

# இலவசப் பரிசுகள் —

## பார்லேயின் க்ளுகோ

## பிஸ்கட்டுகளுடன்






நீங்கள் 2 பெரிய பேக்குகள் க்ளுகோ பிஸ்கட் வாங்கும்போது,பளபளக்கும் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் டேபிள்ஸ்பூன் ஒன்று

**இலவசமாகக்** கிடைக்கும்!

நீங்கள் 3 சிறிய பேக்குகள்






க்ளுகோ பிஸ்கட் வாங்கும்போது ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் டீஸ்பூன் ஒன்று

**இலவசமாகக்** கிடைக்கும்!

பார்லேயின் க்ளுகோ பிஸ்கட்டுகள் சக்தியூட்டுபவை, கோதுமை, பால், சர்க்கரை மற்றும் ஆரோக்கியமளிக்கும் பிற கூட்டுப்பொருள்களின் போஷாக்குச்சத்து நிறைந்தவை.

**இந்தச் சலுகை சென்னை நகரத்தில் மட்டுமே உண்டு —அதுவும் ஸ்டாக்குகள் உள்ளவரைதான்.**

everest/148/pp tm

சுவாமியை வணங்க வேண்டும் என்று கருதித் தொண்டர் குழாத்துடன் நடந்து சென்றார். காதலுடன் பாத தாமரை நோவவும், தந்தையார் மனம் வருந்தவும் நடந்து சென்றார்.

பாச மற்றில ராயினும் பார்மிசை
யாசை சங்கரற் காயினும் தன்மையால்
தேசு மிக்க திருவுரு வானவர்
ஈச னைத்தொழு தேதொழு தேகினர்.

சம்பந்தர் அடியார் குழாத்துடன் நடந்து சென்றபோது, மாறன்பாடி என்ற ஊர் எதிர்ப்பட்டது. உடன் வந்த தொண்டர்கள் யாவரும் வழி நடந்து களைத்தார்கள். வெம்மையினால் அவர்கள் வெதும்பினார்கள். சம்பந்தர் திருப்பஞ்சாக்கரம் சொல்லிக் கொண்டு சென்றார். சம்பந்தருடன் செல்லும் அடியார்களது அல்லலைக் கண்டு அஞ்சினவனைப் போல் வெய்யவன் மேற்கடலில் வீழ்ந்தான். சூழ்ந்து வந்த அடியார் குழாத்துடன் சம்பந்தர் அப்பதியில் தங்கினார்.

திருவரத்துறை மேவிய சிவபெருமான் பவளமேனிய பாதம் நோவ சம்பந்தர் நடந்து வருவதை எண்ணி இரங்கினார். முத்துச் சிவிகையும், முத்துக் குடையும், முத்துச் சின்னங்களும் சம்பந்தருக்கு அருள வேண்டும் என்று விரும்பினார். திருவரத்துறை வாழும் அடியார்களது கனவில் எழுந்தருளிய இறைவர், ''ஞானசம்பந்தன் நம்பால் வருகின்றான். முத்துச் சிவிகையையும், மணிக் குடையையும், சின்னங்களையும் நம்மிடம் பெற்றுக் கொண்டு போய்க் கொடுங்கள்'' என்று பணித்தருளினார். அந்தணாளர்களும் அடியார்களும் எழுந்து, இறைவரது அருள்மொழியை நினைந்து அற்புதமுற்றனர். திருக்கோயில் சென்றனர். இவர்களைப் போலவே, கோயிலில் உள்ளவர்களும் இவ்வாறு கனவில் அருள் பெற்றார்கள். அவர்கள் ''இது என்ன அதிசயம்!'' என்று துணுக்குற்றார்கள். விடியற்காலமாகிய அப்போது திருப்பள்ளி எழுச்சிக்காகத் திருக்கதவைத் திறந்தார்கள். சந்திரனைப் போன்ற குளிர்ந்த முத்துச் சிவிகையும், முத்துக் குடையும், ஊதுவதற்குரிய ஒப்பற்ற சின்னங்களையும் கண்டார்கள். அவைகளைத் தொழுது எடுத்துக் கொண்டு ஞானசம்பந்தரை நாடி வந்தார்கள்.

''நாம் மகிழ்ந்து அளிக்கும் சிவிகை முதலியவைகளை நீ கொள்வாயாக. அதனைப் பெற்றுச் சிவிகையூர்ந்து கவிகையுடன் வருக'' என்று ஞானசம்பந்தருக்கும் அன்று இரவு சுவாமி அருள் புரிந்தார். சம்பந்தர் தாம் கண்ட அருட்டிறத்தை உடன் வந்தவர்களுக்கு உரைத்தருளினார். முத்துச் சிவிகையில் முத்தமிழ் விரகர் எழுந்தருளும் கோலத்தைக் காணும் காதலுடன் வருவான் போல் கதிரவன் உதயமானான். ''ஹரா, ஹரா'' என்று அடியார்கள் ஆர்த்து முத்துச் சிவிகை முதலியவற்றைக் கொண்டு வந்தனர். ''இவை எந்தையார் தந்தருளியவை'' என்று சம்பந்தர் திருமுன் வைத்து வணங்கினார்கள். ''எம்பிரான் அருள் இதுவோ?'' என்று கூறியருளிய சம்பந்தர், அவைகளை வலம் வந்து பணிந்தார். ஐந்தெழுத்தை ஓதிச் சிவிகையில் ஏறியருளினார்.

சோதி முத்தின் சிவிகைசூழ் வந்துபார்
மீது தாழ்ந்துவெண் ணீற்றொளி போற்றிநின்
றுதி யார்அரு ளாதலின் அஞ்செழுத்
தோதி யேறினார் உய்ய உலகெலாம்

சம்பந்தப் பெருமான் சிவிகையில் ஏறியருளியதும் மறைகள் ஆர்த்தன; மலர் மழை சிந்தியது; தொண்டர்களும் அண்டர்களும் ஆர்த்தார்கள்; மங்கல வாத்தியங்கள் முழங்கின. சம்பந்தர் சிவிகையில் சென்று கொண்டிருந்தார். அப்போது திருவரத் துறைக் கோயில் எதிர்ப்பட்டது. கோயிலைக் கண்டதும் சிவிகையினின்றும் இறங்கிய சம்பந்தர் வலம் வந்து வணங்கினார். ''என்னையும் பொருளாகக் கொண்டு இன்னருள்

## கழலும் 'பற்று'



ஒரு கிராமத்தில் வயது முதிர்ந்த குடியானவன் ஒரு பெரிய விறகுக் கட்டு ஒன்றை நல்ல மணிக் கயிற்றினால் கட்டி வீட்டில் கொண்டு வந்து போட்டிருந்தான். அவனுக்கு இருபது வயதில் ஒரு மகன் இருந்தான். அவனுக்கு அந்த மணிக் கயிறு தேவைப்பட்டது. கட்டை அவிழ்த்துப் பார்த்தான். அது நன்றாக முடிச்சுப் போடப்பட்டிருந்ததால் அவனால் அதை எளிதில் அவிழ்க்க முடியவில்லை. அவனுக்கோ அவசரம். எனவே வேறொரு கயிற்றை எடுத்து விறகுக்கட்டைச் சுற்றிப் பலமாக இறுக்கிக் கட்டினான். முதலில் போடப்பட்டிருந்த கயிற்றின் இறுக்கத்தைவிட இதன் இறுக்கம் அதிகமாக இருந்ததால் அந்த மணிக் கயிறு தானாகவே தளர்ந்து கழன்றது. அதைப் போலவே நம்முடைய பற்று என்னும் கயிற்றை இறைவன் மீது இறுக்குவோமானால் உலகப் பற்று தானாகவே கழன்று விழும்.''

(திருச்சியில் திரு கி. வா. ஜ. அவர்கள் ஆற்றிய சொற்பொழிவிலிருந்து) - தகவல் : க.



**குண்டு கடிகாரமும் - குட்டி கடிகாரமும்**

'கிளாக்' என்ற ஆங்கிலச் சொல் டச்சு மொழியிலிருந்து பிறந்ததாகும். அதற்கு டச்சு மொழியில் 'மணி' என்ற பெயர். கைக்கடிகாரத்தை முதன் முதல், இரவு முழுவதும் கண் விழித்துப் பாராக் கூறும் காவல்காரர்கள் (வாட்ச்மேன்) உபயோகித்ததால் அதற்கு வாட்ச் என்று பெயர் ஏற்பட்டது. முதலில் கடிகாரங்கள் சிறிய பீரோவைப் போன்ற பல அடி நீள அகலங்களைக் கொண்டதாக இருந்தன. முதல் கைக் கடிகாரத்தின் குறுக்களவு ஆறு அங்குலமாகும். முதலில் பளு வீழ்ச்சியினால் கடிகாரங்கள் இயங்கின. ஊசல் குண்டு பொருந்திய கடிகாரங்கள் 17ம் நூற்றாண்டில்தான் தோன்றின.

ஊசல் குண்டு இல்லாமல் கடிகாரம் இயங்கப் பல ஆராய்ச்சிகள் நடைபெற்றன. அந்த முயற்சிகளின் முடிவாகக் கைக்கடிகாரம் கண்டு பிடிக்கப்பட்டது. ஊசல் குண்டுக்குப் பதிலாக மிக மெல்லிய மெயின் ஸ்பிரிங்—'மயிரிழை விரைப்புக் கம்பி' ஒன்று பொருத்தப்பட்டது.

ஒரு சிறிய கைக்கடிகாரத்திலுள்ள மயிரிழைக் கம்பியானது தலை மயிரின் அரைப் பங்கு கனத்துக்கும் குறைவானதாகும். ஒரு ராத்தல் எடையுள்ள எஃகிலிருந்து 20 மைல் நீளமுள்ள மயிரிழைக் கம்பியை உற்பத்தியாக்கலாம். விலை குறைந்த கைக் கடிகாரத்தில் 150 பாகங்களுக்கு மேலும் விலையுயர்ந்த கைக் கடிகாரத்தில் 800க்கு மேற்பட்ட பாகங்களும் பொருத்தப்பட்டிருக்கும்.

— த. சங்கரபாண்டியன்

புரிந்த எந்தாய்! நின் பொன்னடிக் கமலம் போற்றி'' என்று துதித்தார்; தொழுதார். நற்றமிழ்ப் பதிகம் பாடினர். சில நாட்கள் அங்கேயே தங்கியிருந்தார்.

தோணிபுரத்தீசர் ஒரு நாள் அம்மையுடன் சம்பந்தரது உணர்வினில் தோன்றி அருள் புரிந்தார். அதனால் உள்ளம் உருகிய பிள்ளையார் புகலி சென்று, தன்னை ஆட்கொண்ட அன்னையையும் அப்பனையும் வணங்க விரும்பினர். பல திருத்தலங்களின் வழியாகச் சென்று சீகாழியை அடைந்தார்.

முத்துச் சிவிகையில் வரும் திங்கட் கொழுந்தன்ன வெங்குரு வேந்தரைச் சீகாழியில் உள்ள மக்கள் பெரு வைபவமாக எதிர்கொண்டு வரவேற்றுப் பணிந்தார்கள். தம்மையாண்ட வள்ளலார் தோணியப்பரைத் தொழுத பின் பிள்ளையார் தமது திருமாளிகை சேர்ந்தார். நற்றவஞ் செய்து பிள்ளையாரைப் பெற்ற தாயார், திருநீற்றுக் காப்புச் சாத்திப் போற்றினர்.

செந்தமிழ் மன்னர் அடியவர் கணங்களுடன் சீகாழியில் எழுந்தருளி யிருந்தார். தமது செல்வத் திருமாளிகையில் அமர்ந்து, நாடோறும் திருக்கோயில் சென்று திருத் தோணியப்பரை வழிபட்டுச் செந்தமிழ்ப் பதிகம் பலவும் பாடிக் கொண்டிருந்தார் திருஞானசம்பந்தர்.

உபநயனம் புரியும் பருவம் அவருக்கு எட்டியது. உலகங் கடந்த சிவஞானம் உணரப் பெற்ற சம்பந்தருக்கு வேத விதிப்படி அந்தணர்கள் சடங்குகள் புரிந்தனர். திருஞானசம்பந்தர் மான் தோலுடன் கூடிய முப்புரி நூலைத் தாங்கியருளினர். ஒரு பிறப்பும் எய்தா உத்தமரை இரு பிறப்பாளராகச் செய்து, 'நான்கு வேதங்களையும் தந்தோம்' என்று அவர் திருமுன் நின்று மந்திரங்களை மொழிந்தார்கள். அப்பொழுது சம்பந்தர் எண்ணிறந்த புனித வேதங்களைத் தமது மென்மதுர வாக்கினால் தேமதுரத் தமிழில் அவர்களுக்கு ஓதியருளினர். அந்த அற்புதத்தைக் கண்ட அந்தணர்கள் தமது கண்முன் உருவெடுத்து வந்த ஞானப் பொருளே பிள்ளையார் என்று கருதி அவரது திருவடித் தாமரைகளை வணங்கினார்கள். தாம் முன் கற்ற வேதங்களில் உள்ள சந்தேகங்களைச் சம்பந்தரிடம் கேட்டு ஐயம் தீர்ந்து அகமகிழ்ந்தார்கள். ''எல்லா மந்திரங்களும் தோன்றுவதற்கு மூலகாரணமாகியது முழு முதல்வனது திருவைந்தெழுத்தாகும்'' என்று அவர்களை நோக்கி உபதேசித்த சம்பந்தர் பஞ்சாக்கரப் பதிகம் பாடியருளினர்.

துஞ்சலுந் துஞ்சலி லாத போழ்தினும்
நெஞ்சக நைந்து நினைமின் நாடொறும்
வஞ்சக மற்றடி வாழ்த்த வந்தகூற்
றஞ்ச வுதைத்தன அஞ்செ ழுத்துமே

மந்திர நன்மறை யாகி வானவர்
சிந்தையுள் நின்றவர் தம்மை யாள்வன
செந்தழல் ஓம்பிய செம்மை வேதியர்க்
கந்தியுள் மந்திரம் அஞ்செ ழுத்துமே.

இச்சமயத்தில்தான் அப்பர்பெருமான் ஞானசம்பந்தரைக் காண வந்தது. இந்தச் சம்பவத்தை வாகீசப் பெருந்தகையின் வரலாற்றிலேயே வர்ணித்திருக்கிறார். (தொடரும்)

# விஞ்ஞானிகளின் கண்டுபிடிப்பு
## வலியை அதி வேகமாக
## வெளியேற்ற

# புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ'

இப்பொழுது முதன்முதலாக இந்தியாவில் வழங்கப்படுகிறது

**வலிதான் எங்கள் பிரச்னை:** 'ஆஸ்ப்ரோ' ஆராய்ச்சிக் கழகத்தில் வலியைப் பற்றிய ஆராய்ச்சிகள் செய்துவரும் விஞ்ஞானிகள் வலியை வேகமாக வெளியேற்றுவதற்கான புதிய வழியைக் கண்டுபிடித்துள்ளனர்—அதுதான் புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ'.

**மைக்ரோஃபைன்ட் என்றால் என்ன?** புதியதொரு விசேஷமான செய்முறையின் மூலம், 'ஆஸ்ப்ரோ'வில் உள்ள வலிநிவாரணப் பொருளை மேலும் 30 மடங்கு நுணுக்கமாக்கியிருப்பதைத்தான் மைக்ரோஃபைன்ட் என்கிறோம். இப்பொழுது ஒவ்வொரு மாத்திரையிலும் இந்த வலிநிவாரணப் பொருள்களின் சுமார் 15 கோடி நுண்ணிய அணுக்கூறுகள் அடங்கியிருக்கின்றன. இதன் விளைவாக, முன்பைவிட இருமடங்கிற்கும் அதிகமான வலிநிவாரணச் சக்தி, மும்மடங்கு வேகமாக இயங்கி வலியைத் துரிதமாக வெளியேற்றிவிடுகிறது.

**வேகமாகச் செயல்புரிகிறது—நீடித்த பயனைத் தருகிறது:** புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ'வில் உள்ள சுறுசுறுப்பாக இயங்கும் வலிநிவாரணப் பொருள், மிகவும் சுலபமாகவும், துரிதமாகவும் இரண்டறக் கலந்து உங்கள் உடலில் 5 முதல் 7 மணி நேரம் வரை தங்கியிருக்கிறது. இதனால் தான் மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' வலியை அதி வேகமாக வெளியேற்றி, நீண்டநேரம் பயனளிக்கிறது.

**உட்கொள்ளச் சுலபமானது:** புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ'வை வெறும் மாத்திரையாகவோ, தண்ணீரில் கலந்தோ, ஒரு டம்ளர் தண்ணீருடனோ அல்லது சூடான பானத்துடனோ—எப்படி வேண்டுமானாலும் சாப்பிடலாம்.

**கீழ்க்கண்டவைகளுக்கு புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்:** நோவு • தலைவலி • உடல் வலி • பல்வலி • மூட்டுவலி • ஜுரவேகத்துடன் கூடிய ஜலதோஷம் • ஃப்ளு • டெங்கு • தொண்டை அழற்சி.

**சாப்பிடும் அளவு:** வயது வந்தவர்கள்: இரண்டு மாத்திரைகள். தேவையானால் மீண்டும் சாப்பிடவும். குழந்தைகள்: ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர் சொல்படி.

புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' செயல்புரியும் விதம்




ஒரு மாத்திரையில் உள்ள அணுக்கூறுகள் வலியை வெளியேற்றப் போதுமான அளவில்லை. அது உங்கள் உடலில் கரைந்து அல்லது கலப்பதற்கு நேரமாகிறது—நீங்கள் வலியிலிருந்து நிவாரணம் பெறவும் அதிக நேரம் காத்திருக்க வேண்டியிருக்கிறது.




மைக்ரோஃபைன்ட் ஆக இருப்பதனால் புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ'வின் ஒவ்வொரு மாத்திரையிலும் சுமார் 15 கோடி நுண்ணிய அணுக்கூறுகள் அடங்கியுள்ளன—எனவே, அது மேலும் துரிதமாக இரண்டறக் கலந்து, விரைவில் நிவாரணம் அளிக்கிறது.

---

புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' இப்பொழுது கிடைக்கும் அதிநவீனமான வலிநிவாரணியாகும்.




புதிய

மைக்ரோஃபைன்ட்

**'ஆஸ்ப்ரோ'**

அதி வேகமாக
வலியை வெளியே
இழுத்துவிடுகிறது

நிகோலஸ் தயாரிப்பு

ACP/3/77




மூந்நூற்று அறுபது துப்பாக்கிகளே இருந்தன அவனுடைய படைவீரர்களிடம். இருப்பினும் அவன் ஸன்டேரி கோட்டையையே பிடித்து விட்டான். ஆயுதம் தாங்கிய போர்ச்சுகீஸிய வெள்ளைச் சிப்பாய்களைத் தலைதெறிக்க ஓடும்படி செய்தான்.

யார் இந்த மாபெரும் வீரன்? அவன்தான் டைபு ராணே.

கோவாவைச் சேர்ந்த ராணேக்களின் வீரப் புகழ் பாடும் நாட்டுப் பாடல்கள் ஏராளம். பல தலைமுறைகளாக இந்த நாட்டுப் பாடல்கள் கோவானியருடைய இல்லங்களில் ஒலித்து வந்திருக்கின்றன.

ராணேக்கள் என்பார் யார்?

கோவா நிர்வாக அமைப்பின் கீழ் பல மஹால்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. (தாலுகாக்களைப் போன்று) இம்மஹால்களில் ஒன்று ஸத்தர் எனப்படும். இதில் அறுபது கிராமங்கள் உள்ளன. கோவாவின் பிற பகுதிகளெல்லாம் போர்ச்சுகீஸிய ஆட்சியின் கீழ் வந்த பிறகு கடைசி கடைசியாக ஸத்தர் மஹால் 1740ல் போர்ச்சுகீஸியரின் ஆளுகைக்கு உட்பட்டது. இதனை அவர்களுக்கு விட்டுக் கொடுத்தவர் ஸாவன்ட் வாடிராஜா. போர்ச்சுகீஸிய ஆளுகைக்கு உட்பட்டு ஐம்பதாண்டுகளுக்குள் ஸத்தர் மஹாலைச் சேர்ந்த வீரப் பெருங்குடி மக்கள் பதினான்கு முறை ஆயுதமேந்தி அந்நியர் ஆதிக்கத்துக்கு எதிராகப் புரட்சி செய்தார்கள்! இவர்கள் பெரும்பாலும் விவசாயிகளே எனினும் போர்ச்சுகீஸிய அடக்குமுறையையும், வரிக் கொடுமையையும் அவர்களால் தாங்க முடியாமல் போகவே வெகுண்டு எழுந்தனர். 1912ஆம் ஆண்டில் கூட ஸத்தர் மஹாலில் ஆயுதம் தாங்கிய 'சத்தியாக்கிரஹம்' ஒன்று நடைபெற்றது என்றால் எத்தனைதான் அடக்கி ஆண்டாலும்கூடப் பணிந்து போகாமல் அடிமைத்தனத்தை உதறி எறியத் துடித்த அவர்களது வீரம் புலப்படும்.

இந்தப் புரட்சிகளுக்கெல்லாம் தலைமை தாங்கியவர்கள் ராணேக்கள்தான். தலைமுறை தலைமுறையாக அந்தப் பகுதிகளில் வீரத் தலைவர்களாக விளங்கி வந்திருக்கும் க்ஷத்திரிய குலத்தவர் இவர்கள்.

ராணேக்களின் இந்தப் புரட்சிகளுள் 1852ல் டைபு ராணேயின் தலைமையில் நிகழ்ந்ததுதான் மிகவும் முக்கியமானது.

1851ல் போர்ச்சுகலிலிருந்து அனுப்பப்பட்டு வந்த கவர்னர் வைகோண்ட் டி.டி. ஔரெம் கொணர்ந்த சில புதிய சட்டங்களின் விளைவாக எழுந்தது புரட்சி. ஸத்தர் பகுதியில் அந்நாளைய அரசர்களிடமிருந்து வெகுமதியாகச் சிலர் நிலங்களைப் பெற்றிருந்தனர். அவர்களின் வாரிசுகள் இன்று அதை அனுபவித்து வந்தனர். அப்படிப்பட்ட வெகுமதியாகப் பெற்ற நிலங்கள் இனி அரசாங்கத்தையே சேரும் என்று உத்தரவு பிறப்பித்தான் ஔரெம். இன்னும் சில அபத்தமான உத்தரவுகளையும் போட்டான். உதாரணமாக ஸத்தர் மஹாலில் இனி எல்லாப் பெண்மணிகளும் ரவிக்கை அணிந்து கொள்ள வேண்டும் என்று ஓர் உத்தரவு. ஏழை மக்கள் பலர் புடவை மட்டுமேதான் உடுத்தி வந்தனர். இந்தப் புதிய உத்தரவு சரியாக அமுல் செய்யப்படுகிறதா என்று பார்க்கச் சில வெள்ளைக்காரச் சிப்பாய்கள் அனுப்பப்பட்டனர். இவர்கள் ரவிக்கை தைத்துக் கொள்ளப் பணம் இல்லாமலிருந்த ஏழைப் பெண்கள் பலரை அதைச் சாக்கிட்டுப் பிடித்துக் கொண்டு போய் மானபங்கப்படுத்தினர்.

இந்த அநியாயங்களை எதிர்த்து ஸத்தர் மஹால் குடியானவர்கள் டைபு ராணேயின் தலைமையில் புரட்சி செய்தனர். ஸன்டேரி கோட்டையைப் பிடித்துக் கொண்டனர்.

## வட்டார நகைச்சுவை

தமிழகத்தில் உள்ள ஒவ்வொரு மாவட்டத்தினருக்கும் தனிப்பட்ட குண இயல்புகள் சில உண்டு. அந்த இயல்புகள் வெளியாகும் விதத்தில் ஹாஸ்யத் துணுக்குகள் எழுதி அனுப்புங்கள். சிறந்த துணுக்கு ரூபாய் இருபத்தைந்து பரிசு பெறும். பிரசுரமாகும் மற்ற துணுக்குகளுக்கு வழக்கம்போல் சன்மானம் உண்டு. வட்டார நகைச்சுவைத் தொடரில் மூன்றாவது பகுதி.

### நெல்லை மாவட்டம்

**முடிவுத் தேதி: 25–3–67**

உறையின் மேல் "வட்டார நகைச்சுவை, நெல்லை" என்று குறிப்பிட வேண்டும். பிரசுரமாகாத துணுக்குகளைத் திருப்பி அனுப்புவதற்கில்லை. இவ் விஷயத்தில் கடிதம் போக்குவரத்து கிடையாது. ஆசிரியரின் தீர்ப்பே முடிவானது.

அது மட்டுமா? டைபு இக்கோட்டையைத் தன் நடவடிக்கைகளுக்குப் பாதுகாவலான தலைப் பீடமாகக் கொண்டு, சில தினங்களுக்குள் ஸத்தர் மஹால் முழுவதையுமே தன் ஆளுகைக்குக் கீழ் கொணர்ந்து விட்டான். அத்துடன் பக்கத்தில் உள்ள வேறு வட்டாரங்கள் மீதும் அவ்வப்போது திடீர்ப் படையெடுப்பு நடத்தி போர்ச்சுகீசிய அதிகாரிகளைத் திணற அடித்தான். மலைப்பாங்கான காடுகள் அடர்ந்த பிரதேசமாதலால் போர்ச்சுகீசியர் இந்தப் புரட்சியாளனை அடக்கப் படையுடன் வந்தபோதெல்லாம் டைபு கொரில்லாப் போர் முறையைக் கையாண்டு அவர்களைப் புறமுதுகிட்டு ஓடச் செய்தான். மூன்று ஆண்டுகள் டைபு ஸத்தர் மஹாலை ஆண்டான். எவ்வளவோ முயன்றும் அவனை வீழ்த்த முடியாமல் போகவே கவர்னர் ஒளரெம் அவமானத்துடன் போர்ச்சுகலுக்கே திரும்பிப் போய்விட்டான்; ஆட்சிப் பொறுப்பை நிர்வாகக் கௌன்சிலிடம் விட்டு விட்டு. இந்தக் குழுவினர், கவர்னர் சென்ற பிறகு புத்திசாலித்தனமாக நடந்து கொண்டு டைபுவின் கோரிக்கைகள் அனைத்துக்கும் இணங்கி அதன் மூலம் புரட்சிக்கு முடிவு கண்டனர்.

டைபு ராணேயின் இந்தப் புரட்சியைப் போலவே அதே அளவுக்கு முக்கியத்துவம் வாய்ந்த மற்றொரு புரட்சி டைபுவின் பேரன் டாடா ராணேயின் காலத்தில் நடந்தது.

அந்நாளில் போர்ச்சுகீசிய இந்தியாவில் ஹிந்துக்கள் பலர் படைவீரர்களாகச் சேர்ந்திருந்த போதிலும், இவர்களுக்கும் போர்ச்சுகீசிய அதிகாரிகளுக்கும் இடையில் ஓர் உடன்படிக்கை இருந்தது. அதன்படி இவர்கள் போர்ச்சுகீசிய இந்தியாவில் மட்டுமே பணியாற்றுவார்கள். கடல் கடந்து அயல் தேசங்களுக்குப் போக மாட்டார்கள். அதற்கு ஹிந்து மதக் கோட்பாடுகள் இடம் தரவில்லை என்பதுதான் காரணம்.

அப்படி இருக்கும்போது 1895ல் ஆப்பிரிக்காவில் உள்ள போர்ச்சுகீசிய காலனி ஒன்றில் நீக்ரோக்கள் பலர் புரட்சி செய்கிறார்கள் என்பதால் கோவானிய ஹிந்து சிப்பாய்கள் கலகத்தை அடக்க அங்கு போக வேண்டும் என்று உத்தரவு வந்தது. இது நியாயமில்லை என்று எடுத்துக்காட்டியும் போர்ச்சுகீசிய அதிகாரிகள் அதை மதிக்காமல் போகவே கோவானிய ஹிந்து சிப்பாய்கள் ஏராளமான துப்பாக்கிகள், வெடிமருந்துகள் சகிதம் ஸத்தர் மஹாலுக்குச் சென்று அங்கு நான்லா கோட்டையை ஆக்கிரமித்துக் கொண்டனர். ராணேக்களின் உதவியைக் கோரி டாடா ராணேயைத் தங்கள் தலைவராகவும் ஏற்றுக் கொண்டனர், இந்தச் சிப்பாய்கள். போர்ச்சுகீசிய ஆதிக்கத்தில் அதிருப்தி அடைந்திருந்த குடியானவ மக்களும் இவர்களுடன் ஒத்துழைக்க முற்பட்டனர்.

போர்ச்சுகீசிய அரசினரின் படைகள் கோமெஸ் டி கோஸ்டா என்பவர் தலைமையில் பலமுறை இவர்களை அடக்குவதற்காக வந்தது; பயனில்லை. தோல்வி மேல் தோல்வி ஏற்படுவது கண்டு போர்ச்சுகீசிய மன்னரின் தம்பியே — அரசகுமாரன் ஹென்றியே — பெரும் படையுடன் வந்தான். அவனும் புரட்சியாளரின் கொரில்லாப் போர்முறைக்கு ஈடு கொடுக்க முடியாமல் தன் படையினரிடமிருந்த வெடிமருந்துகள் அனைத்தையும் பறிகொடுத்துவிட்டுப் புறமுதுகிட்டு ஓடினான்.

அரச குமாரன் போர்ச்சுகலுக்குத் திரும்பிய பிறகு மன்னன், மகாடோ என்பவனை கவர்னராக நியமித்து அனுப்பினான். இவன் கொஞ்சம் நிதான புத்தியுள்ளவனாக விளங்கியதால் புரட்சியாளரின் பிரச்னைகளை நன்கு புரிந்து கொண்டு அனுதாபத்துடன் செயலாற்றினான்.

காசீர் மடத்தைச் சேர்ந்த சங்கராச்சாரியாரைக் கோவாவுக்கு அழைத்துப் பெருமைப்படுத்தி, உபசரித்து அதன் மூலம் ஹிந்துக்களான ராணேக்களைச் சமாதானப்படுத்த முயன்றான். சங்கராச்சாரியாரும் சமாதான முயற்சிக்கு ஆதரவு தந்து அதன் வெற்றிக்கு உதவினார். ராணேக்கள் இனி ஆயுதம் ஏந்துவதில்லை என்று உறுதி கூறினர். புரட்சியாளரில் யாரும் தண்டிக்கப் படமாட்டார்கள் என்று உறுதி கூறினான் கவர்னர் மகாடோ. இந்த விதமாக டாடா ராணேயின் புரட்சி வெற்றிகரமான முடிவுக்கு வந்தது.

கோவானிய மக்களின் உரிமைகளுக்காக ராணேக்கள் நடத்திய போராட்டங்கள் பலப்பல. அவை பற்றிய சுவையான உண்மைக் கதைகள் பல கோவாவில் இன்றும் கிராமங்கள்தோறும் கூறப்படுகின்றன.

முதல் பரிசு நாவல்

# முள்ளும் மலரும்

உமா சந்திரன்

### அத்தியாயம் 32

நீலமலைக் காடுகளில் புது வசந்தம் பூத்துக் குலுங்கிக் கொண்டிருந்தது. காட்டு மலர்களின் கதம்ப மணமும் பச்சிலைகளின் பசிய வாடையும் பட்டை உரித்த மரங்களின் புதிய நெடியும் கலவைச் சுகந்தமாகக் கம்மென்று எங்கும் நிறைந்து கமழ்ந்து கொண்டிருந்தது. உணவைப் பற்றிய சிந்தனை இல்லாமல் பறவை இனங்கள் பரவசமாய்ப் பாடிக் கொண்டிருந்தன. சிலுசிலு வென்று ஓடிக் கொண்டிருந்த சிற்றோடைகள் அந்த ஏகாந்தச் சூழலில் இன்னிசை நிரப்பிக் கொண்டிருந்தன. ஆனால், வசந்தத்தின் அந்த வண்ண எழிலிலும் இனிய மணங்களின் அந்த இன்பக் கலவையிலும், பறவை இனங்களின்



பரவசக் குரல்களிலும், சிற்றோடைகளின் சிலுசிலுவென்ற கீதத்திலும் எங்கிருந்து இவ்வளவு வேதனை வந்து கலந்திருந்தது?

கீழூரிலிருந்து வேலன்கடவு வரை பஸ்ஸில் வந்திருந்த குமரன் அங்கிருந்து நடக்க ஆரம்பித்திருந்தான். நான்கு வருடங்களுக்கு முன்னால் அந்த மலைப் பகுதிக்கு அவன் முதல் முதலில் வந்தபோதும், வேலன்கடவிலிருந்து, தனது பெட்டி படுக்கை முதலிய சாமான்களை ஜீப்பில் அனுப்பிவிட்டு உச்சிக்கடவு வரை நடந்தேதான் சென்றிருந்தான். ஆனால் அப்போது நடந்ததற்கும் இப்போது நடப்பதற்கும் எவ்வளவு வித்தியாசம்? மலைக்காட்சிகளைக் கண்டு பரவசமாகி உவகை பொங்கும் உள்ளத்துடன் உல்லாச நடை போட்டிருந்தான் அன்று. இன்றோ நெஞ்சை அழுத்தும் நீங்காத வேதனையை நடந்தாவது குறைத்துக் கொள்ள முடியாதா என்ற தாபத்துடன் நடந்து கொண்டிருந்தான்.

அகிலாவைத் தில்லிக்கு ரயிலேற்றி அனுப்பி விட்டுத்தான் அவன் சென்னையிலிருந்து புறப்பட்டிருந்தான். மாம்பலத்தில் மாமா வீட்டுக் கல்யாணக் கோலாகலங்கள் முடிந்ததும் மேலும் இரண்டு நாட்கள் ராயபுரத்தில் தங்கியிருந்த பிறகுதான் தில்லிக்குப் புறப்பட்டுச் சென்றாள் அகிலா. தில்லியிலிருந்து பத்தான்கோட் வரையில் ரயிலில் சென்று விட்டால் அங்கிருந்து அவள் சேர வேண்டிய ராணுவ ஆஸ்பத்திரிக்கு அவளை அழைத்துச் செல்ல மேஜர் ரகுநாத் ஜீப் வசதிக்கு ஏற்பாடு செய்திருப்பார். இப்போது அவன் இந்த உச்சிக்கடவுச் சாலை வழியே நடந்து கொண்டிருக்கும் நேரத்தில் அகிலா ஆஸ்பத்திரியை நோக்கி ஜீப்பில் சென்று கொண்டிருப்பாள் என்று நினைத்தபோது குமரனின் கண்களை ஏனோ கண்ணீர் மறைத்தது.

சென்னையிலிருந்து ரயில் வண்டி புறப்படுவதற்கு முன்னால் அகிலாவுடன் பேசிய அந்தக் கடைசிப் பேச்சு இன்னும் குமரனின் மனத்தில் பசுமையாக இருந்தது. கனகாவும் சபேசனும் கூட அகிலாவை வழியனுப்புவதற்காக வந்திருந்தனர்.

''அகிலா, நான்கு நாட்கள்தான் எங்களுடன் பழகியிருக்கிறீர்கள். அதற்குள் எங்கள் குடும்பத்தில் ஒருவராகத்தான் உங்களை நினைக்கத் தோன்றுகிறது. இவ்வளவு சீக்கிரம் உங்களைப் பிரிய வேண்டியிருப்பதை நினைத்து எனக்கு எவ்வளவு கஷ்டமாக இருக்கிறது தெரியுமா?'' என்றாள் கனகா.

''பழகிவிட்டுப் பிரியும்போது யாருக்குத்தான் கஷ்டமாக இருக்காது? பழகிய நினைவில்தான் பிரிவின் துன்பத்தைப் பொறுத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது'' என்றாள் அகிலா. அப்போது அவள் கண்கள் இயல்பாகவே குமரன் பக்கம் திரும்பின.

''மறுபடியும் இந்தப் பக்கம் எப்போது வருவீர்கள் ஸிஸ்டர்?'' என்று கேட்டான் குமரன்.

''வரவேண்டிய அவசியம் இருந்தால்தானே?''

''உங்கள் தகப்பனார் ஓய்வு பெறுவதற்கு இன்னும் இரண்டு மூன்று வருஷங்கள்தானே பாக்கி யிருக்கும்? அதற்கு அப்புறம் நீங்கள் அவருடனேயே இந்தப் பக்கம் திரும்பி வந்து விடுவீர்கள் இல்லையா?''

''ஏன்? தகப்பனார் ஓய்வு பெற்றால் நானும் ஓய்வு பெற வேண்டும் என்று அவசியமா? என்னுடைய சேவைக் காலம் முடிவதற்கு இன்னும் எத்

தனையோ வருஷங்கள் பாக்கி யிருக்கின்றனவே!'' என்று சிரித்தாள் அகிலா.

''சேவைக் காலம் முடியும் வரை சேவை செய்து கொண்டிருக்கப் போகிறீர்களா?'' என்று கேட்டான் குமரன்.

''சேவைக் காலம் முடியும் வரை என்ற கணக்கில்லையே. அதற்கு மேலும் செய்து கொண்டிருக்கலாமே. சேவைக்கு முடிவு ஏது?'' என்றாள் அகிலா.

''அது சரி அகிலா! அப்படியே எத்தனை நாட்களுக்கு இருக்க முடியும்? பெண்களுக்குக் குடும்ப வாழ்க்கை தானே முக்கியம்'' என்றாள் கனகா.

''நான் அப்படி நினைக்கவில்லை. என் வரையில் சேவைதான் முக்கியம்'' என்றாள் அகிலா. அவள் அவ்வாறு கூறுவதற்கும் ரயில் கூவிக் கொண்டு புறப்படுவதற்கும் சரியாக இருந்தது. கடைசியில் ஒரு கணத்துக்கு அவளுடைய விழிகள் அவனுடைய விழிகளைச் சந்தித்தன. அவை பனித்திருந்ததை அந்த ஒரு கணத்தில் குமரனால் காண முடிந்தது.

எங்கோ கண்காணாத நெடுந் தொலைவில் எளிதில் எட்டிவிட முடியாத தனிமைச் சூழலில் அமைந்திருந்த அந்த ராணுவ ஆஸ்பத்திரியை நோக்கிச் சேவை யொன்றே லட்சியமாகச் சென்று கொண்டிருந்த அகிலாவை நினைத்துக் குமரனின் நெஞ்சு தழுதழுத்தது.

வேலன்கடவு பஸ் நிலையத்தில் அவன் வந்து இறங்கியபோது காலை பத்து மணி இருக்கும். தாற்காலிகத் தேவைகளுக்கான மாற்றுடைகளும் மற்றச் சாமான்களும் அடங்கிய பிரயாணப் பை ஒன்று மட்டுமே அவன் கையில் இருந்தது. அதைத் தோளில் மாட்டிக் கொண்டுதான் நடக்க ஆரம்பித்தான்.

முந்தின தினம் மாலையிலேயே அவன் கீழூருக்குப் போய்ச் சேர்ந்தான். டாக்டர் அருளானந்தத்தின் வேண்டுகோளை அவன் மறக்கவில்லை. அதற்குள் அருளானந்தமும் குமரனைச் சந்தித்ததைப் பற்றித் தமது மனைவிக்கு எழுதியிருந்தார். ஆகவே குமரனின் வருகை மேரி அம்மாளுக்கு வியப்பு அளிக்கவில்லை. மாறாக அவனை எதிர்பார்த்திருந்தவளைப் போலவே அவனை வரவேற்று உபசரித்தாள். அவளுடைய வற்புறுத்தலைத் தட்ட முடியாமல் குமரன் இரவு அவர்கள் வீட்டிலேயே தங்கி ஓய்வெடுத்துக் கொண்டு காலையில்தான் புறப்பட்டிருந்தான்.

முன்பு ஒரிரு தடவைகள் அருளானந்தம் அவனைத் தம் வீட்டுக்கு அழைத்துச் சென்ற சமயங்களில் மேரியம்மாளைப் பற்றிக் குமரனின் மனத்தில் உருவாயிருந்த அபிப்பிராயமே வேறு. உயர்ந்த கொள்கைகளோ, மேன்மை உணர்ச்சிகளோ எதுவுமில்லாமல் வெட்டும் கட்டுமாகக் காசு சேர்ப்பதொன்றையே லட்சியமாகக் கொண்டிருந்த சாதாரணப் பெண்மணி என்றுதான் அவளைப் பற்றி நினைக்கத் தோன்றியது, அப்போது. ஆனால் இப்போதோ திடீரென்று பொங்கிய நாட்டுப் பற்று அவளை எத்தகைய புதுமைப் பெண்ணாக உருமாற்றி யிருந்தது என்ற அதிசயத்தை நேரில் பார்த்துக் குமரன் மலைத்துப் போய் விட்டான். கால் நூற்றாண்டுக்கும் மேலாகக் கணவரைப் பிரிந்தறியாத அந்தக் குடும்பத் தலைவி இப்போது நாட்டு நலனுக்காக அந்தப் பிரிவை எவ்வளவு முக மலர்ச்சியுடன் தாங்கிக் கொண்டிருக்கிறாள் என்று நினைத்தபோது பிறந்த மண்ணின் சக்தியை நினைத்துக் குமரனின் நெஞ்சம் பெருமையால் விம்மியது.

உச்சிக்கவுச் சாலை வழியே அவன் நடந்து கொண்டிருந்தான். வெய்யிலே தெரியாத விதத்தில் சாலையின் இரு புறமும் மரங்களும் செடி கொடிகளும் செழித்து வளர்ந்திருந்தன. அந்த மரங்களினூடே புகுந்து வந்திருந்த தென்றல் இதமாக அவன் மேனியைத் தழுவிச் சென்று கொண்டிருந்தது. நடையைப் பற்றிய அலுப்பே இல்லாமல் தன்னந் தனியே அந்தச் சாலை வழியே நடந்து சென்று கொண்டிருந்தான் குமரன்.

அரை மணி நேரத்துக்கு மேலாக அவன் அந்தச் சாலை வழியே சென்று கொண்டிருந்தும், ஜீப்போ, லாரியோ எதுவும் அவனைக் கடந்து செல்லவில்லை என்ற உண்மை அப்போதுதான் குமரனின் மனத்தில் உறைத்தது. வேலன் கடவு பஸ் நிலையத்தில் இறங்கிய போதே அங்கு வழக்கமான கலகலப்பு இல்லை என்பதையும் அங்கிருந்த கடைகள் பெரும்பாலும் மறைந்து விட்டிருந்ததையும் அவன் பார்க்காமலில்லை. ஆனால் அதைப் பற்றிச் சிந்திக்காமலே அங்கிருந்து நடக்க ஆரம்பித்திருந்தான். இப்போதுதான் அதன் முழு அர்த்தமும் சட்டென்று அவன் மனத்தில் வந்து மோதியது. திட்ட வேலைகள் நடந்து கொண்டிருக்கும் வரையில் கலகலப்பே உருவாயிருந்த அந்தக் காட்டுப் பிரதேசம் இப்போது வேலைகள் பூர்த்தியான பிறகு வெறிச்சோடிப் போயிருந்ததில் என்ன ஆச்சரியம்! உச்சிக் கடவுக் காரியாலயத்தி




# ஸ்ரீதரின்
# நெஞ்சிருக்கும் வரை

பாலகிருஷ்ணன் M.S.விஸ்வநாதன் கண்ணதாசன் கங்கா A.M.சங்கர்

ELEGANT

# கால்கேட்டின் மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!



ஏனெனில் ஒரே தேய்ப்பில் கால்கேட் கிரீம், துர்நாற்றத்தையும், சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சதவிகிதத்தை ஒழித்துவிடுகிறது.

கால்கேட், 10ல் 7 சந்தர்ப்பங்களில் உடனடியாக வாய் துர்நாற்றத்தை அகற்றுகிறது என்பதையும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட்டினால் பற்களைத் துலக்கும் முறையால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பெருமளவில் ஏராளமானவர்களுக்குச் சொத்தை தடுக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான ஆராய்ச்சிகள் நிரூபித்துள்ளன. இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு!

கால்கேட்டின் நீடித்திருக்கும் நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனாலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்!

•

பற்சுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்மையான பற்களைப் பெறவும் வழக்கமாக கால்கேட்டினால் பல் துலக்குங்கள்

...உலகிலேயே பெரும்பாலானவர்கள் மற்றெல்லாப் பற்பசைகளையும் விட, கால்கேட் டெண்டல் கிரீமையே வாங்குகிறார்கள்.

சிலர் பற்பொடியை விரும்பினால் இந்தப் பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.







DC. G. 25 TAM

லும், பவர்ஹவுஸிலும் குறைந்தபட்சம் எவ்வளவு பேர் தேவையோ அவ்வளவு பேர்தானே அங்கே நிலைத்திருக்க முடியும்?

உச்சிக்கடவுச் சாலையிலிருந்து சம்பா நீர்த் தேக்கத்துக்குப் பிரிந்து செல்லும் சாலையருகே வந்ததும் குமரன் மேலே அடியெடுத்து வைக்க முடியாமல் தயங்கி நின்றான். அவன் உள்ளம் கனத்தது. அவன் வரையில் அந்தச் சாலைப் பிரிவு எத்தனை எத்தனை இன்ப துன்பங்களின் சங்கமத்துக்குக் காரணமாயிருந்திருக்கிறது! அந்த நினைவுகளின் சுமையைக் குறைத்துக் கொள்ள அவனுக்குச் சிறிது நேரம் பிடித்தது. தளர்ந்த நடையுடன்தான் அங்கிருந்து நடக்க ஆரம்பித்தான்.

அவன் கால்கள் தாமாகவே அவனை அணைக்கட்டு வீட்டுப் பக்கம் இழுத்தன. இப்போது அங்கே குடியிருப்பவர் அவனுடைய வருகையை விரும்புவாரோ மாட்டாரோ என்ற தயக்கம் தோன்றினாலும் அவன் கால்கள் தமது நடையின் வேகத்தைக் குறைக்கவில்லை. தோட்டத்துக் கேட்டைத் திறந்து கொண்டு உள்ளே காலடி எடுத்து வைத்ததும் அவன் திகைத்து நின்றான். வீடு பூட்டியிருந்தது. யாரும் அங்கே குடியில்லை என்ற உண்மையை அப்போதுதான் அவன் உணர்ந்தான். அந்த வீட்டையும் அந்த ஏகாந்தமான சூழ்நிலையையும் அவன் ரசித்ததைப் போல் வேறு யார் ரசிக்கப் போகிறார்கள்!

அணைக்கட்டுப் பக்கம் திரும்பியதும் கருளியாறு சாந்தமாக ஓடிக் கொண்டிருந்த காட்சி புலனாயிற்று. அதன் இருபுறமும் உயர்ந்து நின்ற மலைச் சுவர்கள் அவனை வரவேற்க எழுந்து நிற்பவை போல் தோன்றின.

குமரனின் கண்கள் சுற்று முற்றும் போலாவைத் தேடின. தோட்டத்தில் எங்கும் அவனைக் காணாததும் அவனுடைய குடிசைக்குள் எட்டிப் பார்த்தான். போலா அங்கேயும் இல்லை. 'ஒரு வேளை அணைக்கட்டு மறைவிலேயே எங்காவது உட்கார்ந்து ஹுக்கா குடித்துக்கொண்டிருக்கிறானோ, என்னவோ?' என்று எண்ணியவாறு அணைக்கட்டை நோக்கிச் சரிவில் இறங்கிச் சென்றான்.

அணைக்கட்டின் கதவுக்கான ராட்டின இயந்திரம் இப்போது அணைக்கட்டை அடுத்தாற்போல் கரையிலேயே அமைந்திருந்தது. குமரன் அங்கிருந்தபோதே அதற்கான ஏற்பாடுகளைச் செய்து முடித்திருந்தான். கருளியாற்றில் வெள்ளம் இல்லாததால் கதவு மூடியே இருந்தது. வீரன் வாய்க்காலில்



பாட்டி: என்னடா! ராத்திரி எட்டு மணிக்கே படுத்துண்டு அலாரம் வைக்கறயே, எத்தனை மணிக்கு?

பேரன்: மூன்று மணிக்கு!

பாட்டி: சரிதான்போ. எங்களுக்கெல்லாம் மூன்று மணியிலிருந்து தூக்கம் போச்சு. எங்களையெல்லாம் எழுப்பி விட்டுவிட்டு, நீ அலாரத்தை நிறுத்தக்கூட எழுந்திருக்க மாட்டே!

---

தண்ணீர் எப்போதும் போல் நிரம்பி ஓடிக் கொண்டிருந்தது.

அணைக்கட்டில் ஏறிச் சென்ற குமரன் தடுப்புக் கம்பியில் சாய்ந்து வீரன் வாய்க்கால் அங்கிருந்து வளைந்து வளைந்து செல்லும் அழகைப் பார்த்தவாறு சற்று நேரம் நின்றிருந்தான். இதே இடத்தில் கருளியாற்று வெள்ளத்திடையே நின்று உயிருக்காக மன்றாடியவாறு ராட்சதக் கிளையின் பிடியிலிருந்து தப்புவதற்காகப் போராடிய அந்த நாள் அவன் நினைவுக்கு வந்தது. உரிய சமயத்தில் வள்ளி அங்கு வந்து சேர்ந்திராவிட்டால் அவன் கதி என்ன ஆகியிருக்கும். அவனுடைய சமயோசித புத்தியல்லவா அவனுடைய உயிரைக் காப்பாற்றியது! அதற்கு மேலும் ராட்டின யந்திரத்துடன் அவன் மல்லுக்கு நின்ற சமயத்தில் சிறிதும் தயக்கமில்லாமல் எவ்வளவு தைரியத்துடன் அவனுக்குக் கை கொடுத்து உதவினான்! அன்று அவள் பேசிய வார்த்தைகளில் தான் எவ்வளவு கண்ணியம், எவ்வளவு கனிவு!

சட்டென்று தன் எண்ணங்களுக்கு அணை போட்டான் குமரன். வள்ளி யாரோ, அவன் யாரோ என்ற நிலை தானே இப்போது! அந்தப் பழைய நினைவுகளை எண்ணிப் பார்க்கக் கூட அவனுக்கு உரிமை கிடையாது என்ற உணர்வு அவன் உள்ளத்தையே குற்றம் சாட்டுவது போலிருந்தது.

''சார்... யாரு சார் நீங்க! அங்கே என்ன செய்யறீங்க?'' என்று அதட்டுவது போல் யாரோ பேசும் குரல்

கேட்டதும் குமரன் திரும்பிப் பார்த்தான். அவனுக்குப் பழக்கமில்லாத புதிய ஆள் ஒருவன் நின்றுகொண்டிருந்தான்.

''நீ யாரப்பா?'' என்று கேட்டான் குமரன்.

''என்னை இங்கே காவலுக்குப் போட்டிருக்காங்க. நீங்க யாரைப் பார்க்க வந்தீங்க?'' என்று கேட்டான் அந்த ஆள்.

''முன்னால் இங்கே காவலுக்கு இருந்த போலாதாத் என்ற ஒரு வயதான ஆள் இப்போது இல்லையா?''

''ஓ...அந்தக் கூர்க்காக் கிழவனைக் கேக்கிறீங்களா? அந்த ஆள் காலமாகி ரெண்டு வருஷத்துக்கு மேலே ஆகுதே'' என்று அந்த ஆள் கூறியதும் குமரன் திடுக்கிட்டான்.

''அடாடா... போலாவுக்கு என்ன செய்தது?''

''வேறே என்ன செய்யணும்? ஹூக்கா குடிச்சுக் குடிச்சேதான் அந்த ஆளு உயிரை விட்டாரு. வெய்யில் காஞ்சிக்கிட்டே ஹூக்கா குடிச்சிக்கிட்டிருந்தாராம். அப்படியே பிராணன் போயிடுச்சாம். பாத்தவங்களுக்கு அந்தச் சமாசாரம் தெரியலே. இன்னும் ஹூக்கா குடிச்சுக்கிட்டுத்தான் உக்காந்திருக்காருன்னு நெனைச்சாங்களாம்...''

அந்தக் காட்சியைக் குமரனால் கற்பனை செய்ய முடிந்தது. தோட்டத்தின் புல் தரையில் கூனல் முதுகுடன் வெய்யில் காய்ந்தவாறு ஹூக்கா பிடித்துக் கொண்டிருக்கும் போலாவின் தோற்றம்! உட்கார்ந்திருந்த நிலையிலேயே பிராணன் பிரிந்து சென்ற பிறகும் கூட அந்த உடல் அப்படியேதான் இருந்திருக்கும். பாவம் போலா! அத்தனை ஆண்டு காலம் அவன் அஞ்சியுத் தவித்த மரணம் அவனுக்கு அநாயாசமாகக் கிடைத்து விட்டது.

ஒரு பெருமூச்சுடன் அங்கிருந்து புறப்பட்டான் குமரன். மீண்டும் உச்சிக்கடவுச் சாலை வழியே அவன் சிறிது தூரம் சென்றதும் இரட்டைக் கிளைப் பாக்கு மரத் திருப்பம் எதிர்ப்பட்டது. அந்த இடத்தில்தான் அவன் மங்காவிடம் அந்தக் கழுத்தாரத்தைக் கொடுத்து வள்ளிக்குத் திருமணப் பரிசாகக் கொடுக்கச் சொல்லியிருந்தான். மங்கா கட்டாயம் அவளிடம் கொடுத்திருப்பாள். எப்போதாவது வள்ளி அந்த ஆரத்தை எடுத்துப் பார்ப்பாளோ மாட்டாளோ?

மங்காவை இப்போது பார்த்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்! மூன்று வருஷங்களில் நடந்த சமாசாரங்களையெல்லாம் அவளாகவே சொல்லித் தீர்த்து விடுவாளே! ஆனால் அவர்களெல்லாம் இங்கேயே இருப்பார்கள் என்பது என்ன நிச்சயம்? வேலை முடிந்ததும் மற்றவர்கள் எத்தனையோ பேர்கள் அப்படி அப்படியே சிதறி வெவ்வேறு இடங்களுக்குச் சென்று விட்டது போல் மங்காவும் அவள் தாயாரும் கூட வேறெங்காவது புறப்பட்டுப் போயிருக்கலாமே. உடும்புக் கொட்டகை வேலையில் காளியண்ணன் இன்னும் அப்படியே நிலைத்திருந்தாலும் இருக்கலாம்! அல்லது ஒற்றைக் கை ஆளை வைத்துக் கொள்ள முடியாதென்று அவனுக்கும் சீட்டுக் கொடுத்து அனுப்பி விட்டார்களோ என்னவோ! அப்படியானால் வள்ளி?... ஆனால் அவளுக்கென்று ஒரு குடும்பம் ஏற்பட்ட பிறகு காளியண்ணனின் வேலை நிலைத்திருந்தாலென்ன? இல்லாவிட்டாலென்ன? இரண்டும் ஒன்றுதானே!

அருவிக் கரைக்குச் செல்லும் வழியிலிருந்து சற்று விலகித்தான் காளியண்ணனின் வீட்டுக்குச் செல்லும் வழி இருந்தது. அந்த இடம் வந்ததும் காளியண்ணனின் வீட்டுக்கே சென்று பார்த்தாலென்ன என்று ஒரு கணம் தயங்கினான் குமரன். ஆனால் அதற்குத் துணிவு வரவில்லை. அங்கு சென்று அவன் என்ன பார்க்க விரும்பினான்? என்ன தெரிந்து கொள்ள விரும்பினான்? அவ்வித ஆவலே தவறானதாக அவனுக்குத் தோன்றியது. பரபரப்புடன் நடையைத் துரிதப்படுத்தி அருவிக் கரையை நோக்கி நடக்க ஆரம்பித்தான்.

அருவிக் கரைக் குடிசை இன்னும் அப்படியேதான் இருந்தது. தூரத்திலிருந்து பார்க்கும்போது அதன் கோரைப் புல் கூரை சிறிது மக்கிப் போய்ப் பல இடங்களில் பிய்ந்து போயிருந்தது போல் தோன்றினாலும் அம்மாதிரி குடிசையில் அடிக்கடி கூரை மாற்றுவதற்கு யாருக்குக் கைவரும்! அதுவும் வெள்ளாத்தாளும் மங்காவும் அதைப் பற்றிக் கவலைப்படுவார்களா என்ன? அவர்கள் இன்னும் அங்கேதான் இருக்க வேண்டும் என்ற குதூகலத்துடன் குமரன் அந்தக் குடிசைக்குள் சென்றான்.

என்ன ஏமாற்றம்!... குடிசை காலியாக இருந்தது. மூலைக் கொன்றாகக் கிடந்த கரியேறிய இரண்டு மூன்று சட்டிப் பானைகளைத் தவிர வேறெந்தப் பொருளும் அங்கே இல்லை. அடுப்பில் என்றோ பாதி எரிந்தும் எரியாமலும்

## சைக்கிள் வாங்குவது வாழ்நாள் முழுவதற்குமான ஒரு முதலீடு. ஹெர்குலிஸ் உங்கள் பணத்திற்கு மிகச்சிறந்த மதிப்பைத் தருகிறது.



**அவர் தேர்ந்தெடுத்தது ஹெர்குலிஸ்**
ஒரு ஹெர்குலிஸ் சைக்கிள் வாங்க நான் கஷ்டப்பட்டுச் சேமித்தேன். அது ஒரு சிறந்த முதலீடு என்பதை நிரூபித்திருக்கிறது. எங்கள் வீட்டின் ஒரு அங்கமான அது எப்போதும் நல்ல நிலையில் இருக்கிறது; நம்பகமானதும் கூட.

மிக உயர்ந்த தரத்துடன் தயாரிக்கப்படும் ஹெர்குலிஸ் சகாயமாக விலையிடப்பட்டிருக்கிறது. உலகிலுள்ள 135 நாடுகளில் அமோகமாக விரும்பி வாங்கப்படுகிறது இது என்பதற்கு இந்த சிறப்புகள் தான் காரணம்.

தென் கிழக்கு ஆசியாவிலேயே மிகப் பெரியதும், மிகச் சிறந்த இயந்திர சாதனங்கள் நிறுவப்பட்டுள்ளதுமான, சென்னையில் உள்ள சைக்கிள் தொழிற்சாலையில், சர்வதேசத் தர நிர்ணயங்களுக்கு ஏற்றபடி தயாரிக்கப்படுகிறது இது.

ஹெர்குலிஸ், உலகிலேயே மிகப் பெரிய சைக்கிள் தயாரிப்பாளர்களாகிய ட்யூப் இன்வெஸ்ட்மெண்ட்ஸ் லிமிடெட், யு. கே. அவர்களின் ஒத்துழைப்பைக் கொண்டு வெகு நுட்பமாக உருவாக்கப்படுகிறது.



விலை, தரம், வலிமை, சேர்த்தி உறுதி, ஆகிய எந்த வகையிலும் ஹெர்குலிஸ் ஐயமின்றி உங்கள் பணத்துக்கு மிக உயர்ந்த மதிப்பைக் கொடுக்கிறது.

# ஹெர்குலிஸ்®

**வெறும் சைக்கிள் மட்டுமன்று; வாழ்நாள் முழுதும் உழைக்கும் ஓர் உறுதுணை**



® ஹெர்குலிஸ் சைக்கிள் அண்ட் மோட்டார் கம்பெனி லிமிடெட், யு. கே. அவர்களின் பதிவு பெற்ற டிரேட் மார்க்குகள்.

இந்தியாவில் தயாரிப்போர்: டி ஐ சைக்கிள்ஸ் ஆப் இந்தியா அம்பத்தூர், மதராஸ்-53.

உரிமையாளர்கள்: ட்யூப் இன்வெஸ்ட்மென்ட்ஸ் ஆப் இந்தியா லிமிடெட், மதராஸ்-1, பதிவு பெற்றுஉபயோகிப்போர்.

சிறு சேமிப்புகளில் முதலீடு செய்யுங்கள்.

tic-h-3022a

கருகிப் போய்க் குமைந்திருந்த காட்டுச் சுள்ளிகள் — செத்தைகளின் சாம்பல் இன்னும் அள்ளப்படாமல் அப்படியே கிடந்தது. பாவம், பவர்ஹவுஸ் பகுதியில் வேலையெல்லாம் முடிந்த பிறகு மங்காவுக்கும் அவள் தாயாருக்கும் அங்கே பிழைப்பு ஏது? இப்போது எங்கே எப்படி அவர்களுடைய வாழ்க்கைச் சக்கரம் ஓடிக் கொண்டிருக்கிறதோ!

மங்காவின் எளிமை நிறைந்த தன்னம்பிக்கையையும் எதற்கும் அஞ்சாத துடுக்குப் பேச்சையும் எண்ணிப் பார்த்தவாறு கனக்கும் நெஞ்சுடன் அந்தக் குடிசையை விட்டு வெளியே வந்த குமரன் அருவிக் கரைக்கு நடந்தான். மேம்பாலக் கசத்திலிருந்து கண்ணாடியைக் காய்ச்சி ஊற்றியது போல் மெல்லிய பளிங்குப் படலமாக அலையலையாய் விழுந்து கொண்டிருந்த அருவியின் அழகு அவனது நெஞ்சச் சுமையைச் சிறிது மறக்கடித்தது. அந்தக் காட்சியில் சொக்கிப் போய்ச் சற்று நேரம் அங்கேயே நின்றான். பின்பு மேம்பாறைக் கசத்துக்குக் கொண்டு செல்லும் புதரடர்ந்த ஒற்றையடிப் பாதை வழியே மேலே சென்றான்.

மேம்பாறைக் கசத்தின் பளிங்கு நீரில் இருபதடி ஆழத்துக்கடியே பரந்து கிடந்த வெள்ளைக் கூழாங் கற்கள் கையால் தொட்டுவிடக்கூடும் என்று நினைக்கும் அளவுக்கு மேலே உயர்ந்து தோன்றின. அவற்றிடையே துள்ளி விளையாடிக் கொண்டிருந்த வெள்ளி மீன்களுக்கு வெளி உலகத்தைப் பற்றின சிந்தனை ஏது? யாருடைய வேதனையையோ, விருப்பு வெறுப்பையோ பற்றி அவைகளுக்கு என்ன கவலை? துள்ளலும் துடிப்பும் பாய்ச்சலுமே உருவாக அவை வழக்கம்போல் விளையாடிக் கொண்டிருந்தன. இன்னும் எத்தனை ஆண்டுகள் கழிந்து வந்து பார்த்தாலும் இந்தக் காட்சி இளமை குன்றாமல் இப்படியே தான் இருக்கப் போகிறது என்று நினைத்தபோது குமரனுக்குப் பொறாமையாகக்கூட இருக்கது. ஆனால் மனிதனுடைய இளமை இயற்கையின் இளமையுடன் என்றாவது போட்டி போட முடியுமா என்ன? அதை நினைத்து மனத்துக்குள் சிரித்தவாறே குமரன் பாறைகளில் தாவித் தாவிச் சென்று அருவியின் விளிம்பு வரை சென்று நின்று கொண்டான்.

அங்கிருந்து பார்த்தபோது சிறந்த சைத்திரிகன் தீட்டிய சித்திரம் போல் காட்சியளித்தது அருவிக் கரை. அருவி நீர் கீழே இருந்த சிறிய தடாகத்தில் நிரம்பி அதிலிருந்து சாதாரண ஓடையைப் போல் கூழாங் கற்களுக்கிடையே பாய்ந்தோடிக் கொண்டிருந்தது. அதே இடத்தில் அன்றொரு நாள் வள்ளி குடத்தில் நீர் மொண்டு கொண்டு பிறகு அதை இடுப்பில் ஏந்தியவாறு குடிசையை நோக்கிச் சென்ற காட்சி இப்போது குமரனின் கண்ணெதிரே தோன்றுவது போலிருந்தது. வள்ளியின் மனம்தான் எவ்வளவு மென்மையானது! மங்காவின் தாயாருக்கு உடம்பு சரியில்லை யென்று தெரிந்தும் தானாகவே உதவிக்கு ஓடி வந்து விட்டாளே! அவளைக் காட்டுப் பெண் என்று கனகா பழித்தான். ஆனால் அன்று வள்ளி காட்டிய நல்லுணர்ச்சி எத்தனை நாகரிகப் பெண்களின் மனத்தில் தோன்றிவிடும்?

திடீரென்று அந்த அமைதியான சூழ்நிலையில் ஒரு குழந்தையின் குரல்! ''அம்மா... அத்தா... கண்ணி...''. என்று ஏதேதோ மழலைச் சொற்களைத் தொடர்ந்து குழந்தையின் கலகல வென்ற சிரிப்பு!

திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான் குமரன். மேம்பாறைக் கசத்தின் அருகே இரண்டு இரண்டரை வயது மதிக்கத் தகுந்த பிள்ளைக் குழந்தையொன்று மலர்ச்சியே உருவாக மழலைச் சொற்களை உதிர்த்தவாறு தத்தித் தத்தி நடந்து கசத்தின் விளிம்புவரை சென்று நிற்பதைக் கண்டதும் அவனுக்குப் பக்கென்றது.

''அடேடே...குழந்தை! விழுந்துடப் போறே'' என்று பதறியவாறு பாறைகளில் தாவியோடிச் சென்று அந்தக் குழந்தையை வாரி எடுத்துக் கொண்டான். மொழு மொழுவென்று புஷ்டியாயிருந்த அந்தக் குழந்தை அவனுடைய கன்னத்தைத் தடவியவாறு அவனைப் பார்த்து மலர்ந்து சிரித்தது.

''யார் இப்படிக் குழந்தையைத் தனியே விட்டு விட்டார்கள்! குழந்தை கசத்தில் விழுந்திருந்தால் என்ன கதியாயிருக்கும்!'' என்று கூறிக்கொண்டே சுற்று முற்றும் பார்த்தான் குமரன்.

அதே சமயம் ''கண்ணா... கண்ணா.. எங்கே போயிட்டே கண்ணா...'' என்று திகிலுடன் கூவியழைக்கும் ஒரு பெண்ணின் குரல் அவன் காதில் விழுந்தது. அந்தத் திசையில் திரும்பிப் பார்த்தான். மறு கணம் அப்படியே ஸ்தம்பித்து நின்று விட்டான்.

கசத்துக் கரையை நோக்கி ஓடி வந்து கொண்டிருந்த பெண் வேறு யாருமில்லை, வள்ளியேதான்!

**(தொடரும்)**

# நல் வசந்தக் கனியமுத நய விருந்தாம் நாவினிக்க ஜிலுஜிலுக்கும் ரெக்ஸ் ஜெல்லி!

களஞ்சியம் போன்ற கனிச் சுவை! அதுதான் ரெக்ஸ் ஜெல்லி குடும்பத்தின் அபிமான இனிப்புப் பண்டமாக விளங்கக் காரணம். ஆவல்தூண்டும் 6 சுவை வகைகளில் உள்ளது: ஆரஞ்சு, லெமன், அன்னாசி, ஸ்ட்ராபெர்ரி, ராஸ்ப்பெர்ரி, செர்ரி.

இலேசானது, ஊட்டமளிப்பது, தயாரிக்க இலகுவானது. தனிப்பட உண்பதற்கும் இனியது ரெக்ஸ் ஜெல்லி—அதன் படிகங்களை வெந்நீரில் கரையவைத்துக் குளிர விட்டு உறையவைத்தால் ஆயிற்று. டப்பியிலுள்ள அல்லது ஸ்டூவ்டு பழங்களோ, ப்ளமாஞ்ச் கேக்குகளோ அத்துடன் சேர்த்து அணி செய்து, கஸ்டர்டு அல்லது க்ரீமை மேலிட்டுப் பரிமாறவும் செய்யலாம்.




இப்போது
**புதிய**
பாக்கிங்கில்



கார்ன் ப்ராடக்ட்ஸ் கோ. (இந்தியா) பிரைவேட் லிட்.

Bensons-618A/5 TAM

இருட்டி விட்டது. மணவாளன் சைக்கிளைத் தள்ளியபடியே வீட்டை நோக்கி வந்து கொண்டிருந்தான். பள்ளிக்கூடம் விட்ட பிறகு நேராக வீட்டுக்குப் போகாமல் இந்த மாதிரி இருட்டும் வரை வெளியில் காலம் கழிக்கும் வழக்கம் அவனுக்கு இல்லை. இன்று வழக்கத்துக்கு மாறாக இப்படி நடக்கிறது. தான் இன்னும் வராததால் அம்மா அங்கே தவித்துக் கொண்டிருப்பாள் என்ற நினைவே அவன் மனத்தில் எழவில்லை. அவன் மனம் முழுவதையும் அன்று தமிழ் வகுப்பில் நடந்த சிலப்பதிகாரப் பகுதியும், ஆசிரியர் அவனைப் பார்த்துப் பார்த்துப் பாடம் நடத்தியதும், வகுப்பு முடிந்ததும் மற்றப் பையன்கள், ''டேய், கண்ணகிப் பையா, கண்ணகிப் பையா!'' என்று அவனைக் கூப்பிட்டுக் கேலி செய்ததுமே ஆக்கிரமித்துக் கொண்டிருந்தன. அந்தச் சின்னஞ் சிறு உள்ளத்தை அவன் வயதொத்த சிறுவர்களின் இரக்கமில்லாத கூச்சல் கீறிப் புண்படுத்தியிருந்தது.

பன்னிரண்டு வயது முடிந்து, அப்பாவுடன் இல்லாமல் அம்மாவுடன் தனி வாழ்க்கை நடத்தும் அவனுக்குத் தன் பிறப்பைப் பற்றிய உண்மை ஓரளவுக்குத் தெரியும். ஆனால் அது இத்தகைய இழிவு வாய்ந்தது. இவ்வளவு தூரம் கேலிக்கும் பரிகாசத்துக்கும் உரியது என்று அவனுக்கு இத்தனை நாட்கள் தோன்றவில்லை. இன்று அவன் வகுப்புப் பையன்கள் அத்தனை பேரும் ஒருமுகமாக அவனைப் பார்த்துப் பழித்ததைக் கண்டு அவன் மனம் வெதும்பிப் போயிற்று. பள்ளிக்கூடம் விட்டதும் சைக்கிளை எடுத்துக் கொண்டு நேராக ஆற்று மணலில் தனி இடத்துக்குப் போய் உட்கார்ந்து கொண்டு குமுறிக் குமுறி அழுதான். தந்தை என்று பெயர் சொல்ல வேண்டிய மனிதர் அவருடைய ஊரில் உல்லாசமாக அரண்மனை வாழ்வு நடத்துவதை நினைத்துக் குமுறினான் அவன். உடனே நேராக அவர் வீட்டுக்குப் போய், ''என் அம்மாவையும் உங்கள் வீட்டுடன் வைத்துக்கொள்ளப் போகிறீர்களா, இல்லையா? அல்லது இப்படியே உங்கள் தலைமயிரைப் பிடித்து உலுக்கட்டுமா?'' என்று கேட்க வேண்டும் என்று தோன்றியது. ஒன்றும் புரியாமல் அழுதுவிட்டு, இருட்டிய பிறகு அவன் சைக்கிளைத் தள்ளிக் கொண்டே



# மரங்கள்

வ.சா.நாகராஜன்



வீட்டுக்கு வந்தான். அம்மா வாசலில் நின்ற படியே அவனை வரவேற்றாள். உள்ளே நுழைந்ததும் மௌனமாக அவனையே பார்த்துக் கொண்டிருந்த தாயார், அவன் செய்கைகளுக்கு அர்த்தம் புரியாமல் தவித்துக் கொண்டிருந்தபோது அவன் எதிரில் வந்து நின்ற மணவாளன் அத்தனை நேரம் அடக்கி வைத்துக் கொண்டிருந்த அழுகை அடங்காமல் வெடித்துக் கொண்டு கிளம்ப 'ஹோ' வென்று அழ ஆரம்பித்தான். பதறிப் போன அம்மா, ''என்னடா, கண்ணு? என்னடா? சொல்லுடா... எதுக்கடா அழுகிறே?'' என்று அவனைக் கேட்க ஆரம்பித்தாள். மகனின் அழுகை அவளையும் தொற்றிக் கொள்ள அவள் கண்களிலிருந்தும் கண்ணீர் வழிய ஆரம்பித்தது.

அழுகையிடையே அன்று வகுப்பில் நடந்ததைச் சொன்னான், மணவாளன். பிறகு ''நாளைக் காலையிலே எழுந்ததுமே ஊருக்குப் போகிறேன். அப்பாவைப் பார்க்கிறேன். இதற்கு ஒரு வழி பண்ணுங்க என்று கேட்கிறேன்....'' என்று சொல்லிக் கொண்டே போனான் மணவாளன்.

திக்பிரமை அடைந்துபோன தங்கம்மா அப்படியே உட்கார்ந்து விட்டாள். பேசுவது மகன்தானா, கேட்பது தான்தானா என்று புரியாமல், ஊனும், உள்ளமும் உருகத் தவித்தாள் அவள். ஒரு வழியாக அவன் ஓய்ந்ததும் ''வேணாம்பா. அங்கே போய் நீ என்ன கேட்பே? இங்கே நமக்கு என்ன குறைச்சல் வைச்சிருக்கார் உங்க அப்பா...? யாரோ என்னமோ சொன்னாங்கன்னு மனசைக் குழப்பிக்காதேப்பா'' என்றாள்.

மகனைத் தேற்ற முற்பட்டாலும் அவள் மனம் காற்றிடைத் துரும்பாய்த் தவித்தது. மணவாளனும் மனம் அடங்குபவனாகத் தெரியவில்லை. இருவருமே தங்கள் நினைவுகளில் இணைந்தவர்களாய்ச் சமைந்து போயிருந்தனர்.

குக்கிராமம் ஒன்றில் நடுத்தர வகுப்பில் பிறந்து பதினெட்டு வயசு வரை வளர்ந்த தங்கம் தன் வாழ்க்கையில் பெரிய பெரிய புயல்கள் அடிக்கும் என்று கனவுகூடக் கண்டிருக்க மாட்டாள் — அந்தக் கல்யாணத்தின் போது விரிஞ்சிபுரம் மைனரைப் பார்க்கும் வரை பெரிய பண்ணையாரின் சார்பில் மைனர் வந்து அந்தக் கல்யாணத்தைச் சிறப்பித்த போது அந்தத் திருமண வீட்டில் மாப்பிள்ளைக்கும் சம்பந்திகளுக்கும் நடவாத உபசாரம் விரிஞ்சிபுரம் மைனருக்கு நடப்பதைப் பார்த்துக் கல்யாணப் பந்தலே அதிசயப்பட்டது. முந்நூறு வேலி நிலம், ஒரே பிள்ளை என்றால் சும்மாவா? பந்தலுக்கு அழகூட்டும் வண்ணம் மணமக்கள் உட்கார்ந்திருந்தாலும் மைனர் வந்து உட்கார்ந்த பிறகு எல்லோர் கவனமும் அந்தப் பக்கம் போய்விட்டது.



இருபத்தி ஐந்து வயசு. சிவந்த மேனி, சுருட்டை மயிர், அரும்பு மீசை, சில்க் சட்டை, தங்கச் செயின், சென்ட் மணம் என்று பந்தலை அலங்கரித்தார், விரிஞ்சிபுரம் மைனர். பந்தலை அலங்கரித்த மைனரின் கண்களில் எப்படியோ பெண்களின் கூட்டத்தை அலங்கரித்துக்கொண்டிருந்த தங்கம்மா தென்பட்டாள். நாலைந்து தடவை பார்த்ததும் அலுக்காத அந்த அழகில் மைனர் மயங்கியதில் வியப்பில்லை. மைனரைப் பார்த்து மங்கையர் அனைவருமே மையலுற்றபோது, தங்கம்மாவும் மனம் தடுமாறியதிலும் வியப்பில்லை. ஊருக்குப் போய் மைனர் யார் சொல்லியும் கேளாமல் தங்கம்மாவைத்தான் மணப்பேன் என்று பிடிவாதம் பிடித்துத் தன் தகப்பனாரையே விரோதித்துக் கொள்ளும் அளவுக்கு அது போனது தான் அதிசயம். தங்கம்மா அரண்மனை போன்ற அந்த விரிஞ்சிபுரம் வீட்டுக்கு மருமகளாகப் போவதில் அவள் வீட்டிலேயே ஒருவருக்கும் விருப்பம் இல்லை. தங்கள் தகுதிக்கு மேற்பட்ட இடத்துக்குப் போனால் தங்கள் வீட்டுப் பெண் சிறுமைப்பட்டுத்தான் போவாள் என்று எல்லோரும் சொன்னார்கள். அவர்கள் அனைவரின் எதிர்ப்புக்கும் இடையில் விரிஞ்சிபுரம் மைனருக்கும் தங்கம்மாவுக்கும் திருமணம் நடந்தது.

கோயிலில் திருமணம் முடிந்த பிறகு கோட்டை போன்று இருந்த அந்த விரிஞ்சிபுரம் அரண்மனை வாசலுக்கு வந்தபோது 'நாம் இந்த இடத்துக்கு லாயக்கில்லை. இந்த இடத்தில் ஒரு தன்னிறைவுடன் வாழத் தகுதி வேண்டும் என்றால் இந்த வீட்டில் பத்தில் ஒரு பங்காவது மதிப்புடைய வீட்டில் வாழ்ந்து பழக்கப்பட்டிருந்தால்தான் முடியும்' என்று அவள் எவ்வளவுக்கெவ்வளவு நினைத்தாளோ அவ்வளவுக்கவ்வளவு அவள் நினைத்தது உண்மை என்பதை மைனரைச் சேர்ந்தவர்கள் அவளை அலட்சியத்துடன் நடத்தி, சொல்லாலும், செயல்களாலும் ஊர்ஜிதப்படுத்தினர்.

எப்படியோ ஒரு வருஷ முடிவில் ஒரு பிள்ளைக் குழந்தைக்குத் தாயானாள் தங்கம்மா. ஆனால் அந்தப் பிள்ளைப் பேறு அவள் உடல் வலிமையும் சேர்த்துக் கொள்ளை கொண்டு போய்விட்டது. அதன் பின்னர் மனைவி என்ற ஸ்தானத்தில் இருக்க முடியாமல் நோயாளி என்ற ஸ்தானத்தில் சில வருஷங்கள் அந்த வீட்டில் வாழ்க்கை நடத்தினாள் அவள். வனப்பை நினைத்து வாழ்க்கையை அமைத்துக் கொள்ள நினைத்த மைனர், வாளிப்பின் கவை முடிந்ததும் வெளியிடம் தேட வேண்டிய நிர்ப்பந்தத்துக்குள்ளானார். குழந்தை பிறந்து மூன்று வருடங்கள் முடிந்தும் உடல் நலம் தேறாததால், அந்த வீட்டின் சூழ்ச்சிக்கு இரையாகிய தங்கம்மா, உடல் நலமின்மையைக் காரணம் காட்டி, மைனரின் மறுமணத்துக்குச் சம்மதம் என்று கையெழுத்திட்டுக் கொடுத்தாள். இந்தத் தடவை விரிஞ்சிபுரத்தின் முந்நூறு வேலியை ஓர் இருநூறு வேலி வந்து அடைந்தது. தங்கம்மா நிரந்தர நோயாளி என்ற பட்டத்துடன் பதினைந்து மைல்களுக்கு அப்பால் இருந்த சிறிய நகரம் ஒன்றில் வசதி மிக்க வீட்டில் மற்ற சௌகரியங்களுடன் தனித்து விடப்பட்டாள். அத்துடன் மைனர் வாழ்க்கையிலிருந்தும் மறைந்து போனான் அவன்.

தனித்து விடப்படுவதற்கே காத்துக் கொண்டிருந்தது போன்று அவள் உடல் நலம் மீண்டது. மீண்டு என்ன பயன்? ஒரு தடவை அடித்துவிட்டு ஓய்ந்த புயலை மீண்டும் வரவேற்கத் தயாராக இல்லை. அவள் காலம் ஓடியது. பொருளாதார ரீதியில் ஒரு குறையுமில்லாமல் வாழ்க்கை நடந்தாலும் தன் குறைகளை யெல்லாம் மறக்கச் செய்பவனாக மணவாளன் வளர்ந்தான்.

மறுநாள் காலை எட்டு மணிக்குப் பலகாரத்தை முடித்துக் கொண்ட பிறகு சைக்கிளை எடுத்துத் துடைத்து எண்ணெய் போட்டுக்கொண்டு வெளியில் கிளம்பத் தயாரான மகனைப் பார்த்த தங்கம்மா, ''என்னப்பா இது, இன்றைக்கு இதற்குள்ளே கிளம்பிட்டே?'' என்று கேட்டாள்.

''சீக்கிரம் போகணும்மா'' என்று சுருக்கமாகச் சொல்லிவிட்டு வெளியேறினான் அவன்.

சைக்கிள் அந்த நகரத்தைக் கடந்து வயல் வெளிகளிடையே ஓடியது. மணவாளன் இந்தப் பதின்மூன்று வயதில் நினைவு தெரிந்து ஒரு தடவைகூட விரிஞ்சிபுரம் போனதில்லை. அந்த ஊர் உத்தேசமாக இந்தப் பக்கம்தான் இருக்கும் என்று மாத்திரம் அவனுக்குத் தெரியும். அந்தத் தைரியத்தை வைத்துக் கொண்டு கிளம்பி விட்டான்.

இரு பக்கங்களிலும் வளர்ந்திருந்த பச்சைப் பயிர்களின் அழகு அவன் மனத்தைப் பரவசப்படுத்தியது. நடுவில் வந்த ஓரிரு ஊர்களில் வழி பிரியும் இடங்களில் விசாரித்துக் கொள்ள வேண்டியிருந்தது. ஒரு வழியாக அவன் தன் சொந்த ஊர் என்று சொல்லிக் கொள்ளக்கூடிய அந்த ஊருக்கு வந்து சேர்ந்த போது மணி பத்து இருக்கும்.

ஊருக்குள் நுழைந்ததும் குடிசைத் தெருக்களும் புழுதியில் படுத்திருந்த தெரு நாய்களும் அவனை வரவேற்றன. அவன் யாரிடத்திலும் பண்ணையார் வீடு எங்கே இருக்கிறது என்று கேட்டுக் கொண்டிருக்கவில்லை. ஏழை மக்கள் வசித்த நாலைந்து தெருக்களைக் கடந்ததும் அந்தப் பெரிய தெரு வந்தது. அந்தத் தெருவில் நடுநாயகமாகப் பெரிய கிற்றுக் கொட்டகை வாசலுடன் இருந்த வீடு தெருக் கோடியிலிருந்தே தெரிந்தது.

பத்து மணி வேளையில் அந்தத் தெருவில் அதிக ஜன நடமாட்டம் இல்லை. மணவாளன் நேராக அந்த வீட்டு வாசலுக்குப் போய்ப் பந்தலில் சைக்கிளிலிருந்து இறங்கினான். கல்யாணத்துக்குப் போடுவது மாதிரி பதினைந்தடி இருபதடி தூக்கிப் போட்டிருந்த அந்தப் பந்தலைப் பார்த்தே அசந்து போனான் அவன். இதுவரை அவன் வயதில் பார்த்திராத அந்தத் தூண்களைப் பார்த்த போதே பிரமித்து நின்றான் ஒரு கணம்.

இடைகழியைத் தாண்டியவுடன் பெரிய முற்றம் தென்பட்டது. அந்த முற்றத்தின் நான்கு பக்கங்களிலும் அகலமும் நீளமும்

# லைப்பாய்




## இருக்குமிடம்: அதுவே...
## ஆரோக்கியம் இருக்குமிடம்

லைப்பாய் ஸ்நானம் . உற்சாகப் பெருக்கு . உல்லாச ஊற்று..
ஒவ்வொரு குளியலும் உணர்த்தும் : நல்ல சோப்புக்குரிய நன்மைகள் யாவும் பெறலாம், அதற்கு மேலும் பெறலாம் ஆரோக்கியமுடன்.

**அழுக்கிலுள்ள கிருமிகளைக் கழுவிக் களைவது லைப்பாய்**

[illegible]-L 32-140 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

கொண்ட தாழ்வாரங்களும் கூடங்களும் வழவழ வென்ற தரையுடன் நீண்டு கிடந்தன. அங்கே யாருமே அவன் கண்களுக்குத் தென்படவில்லை. சிறிது நேரம் நின்ற பின்னர் தான் அங்கே வந்த வேலையாள் அவனிடம் வந்தான்.

''ஐயாவைப் பார்க்கணுமா? உள்ளே வாங்க'' என்று அந்த வேலைக்காரனே உள்ளே அழைத்துச் சென்றான்.

அந்த அறையின் காம்பீர்யம் மணவாளனின் பிரமிப்பைப் பின்னும் அதிகமாக்கியது. அந்த அறையின் மறு கோடியில் சாய்வு நாற்காலியில் பெரிய மீசையும் பெரிய விழிகளும் பெரிய நெற்றியும் பெரிய உருவமுமாக அமர்ந்திருந்தவரை பார்த்தான். அவர் தான் அப்பா என்று அவன் உள்ளுணர்வு சொல்லியது.

சாய்வு நாற்காலிக்கருகில் சிறிய மேஜைமேல் இருந்த காலை வேளையின் இரண்டாவது பலகாரத்தில் ஈடுபட்டிருந்தவர் வந்தவனைத் திகைப்புடன் பார்த்தார்.

இதற்குள் பையன் தைரியம் அடைந்து விட்டான்.

அவரும் எழுந்து அவனருகில் வந்து, ''யாரப்பா? என்ன வேணும்?'' என்று கேட்டார்.

இத்தனை நேரம் தைரியமும் ஒரு தெம்பும் இருந்த அவன் மனத்தில் இப்போது திடீரென்று ஒரு தளர்ச்சி உண்டாயிற்று. குப்பென்று அழுகை வந்து தொண்டையை அடைத்தது.

''என்னப்பா வேணும் உனக்கு?'' என்று மீண்டும் கேட்டபடியே அவனுடைய கை விரலைப் பிடித்து மேஜையடிக்கு அழைத்துப் போய் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டார் அவர்.

கண்கள்வரை வந்த அழுகையை அடக்கிக் கொண்டான் மணவாளன். ''நீங்கதானே எங்க அப்பா? அம்மாவை....'' வார்த்தை களை முடிக்கவில்லை. அழுகை பீறிட்டுக் கொண்டு வந்தது.

''ஓகோ, நீயா...? என்ன வேணும்? எதற்கு வந்தே இங்கே? அம்மா அனுப்பிச்சாங்களா?''

''அம்மா அனுப்பவில்லே. நானேதான் இங்கே வந்தேன்.''

''நீயாகவா வந்தே? எதற்கு? என்ன வேணும்?''

''நீங்க... நீங்க... ஏன் இப்படிப் பண்ணினீங்க? பள்ளிக்கூடத்திலே என்னை எல்லாரும் கேலி செய்யறாங்க...''

எதிர்பாராத இந்தச் சந்திப்பினாலும் தம் மகனின் கேள்வியினாலும் வாயடைத்துப் போன பண்ணையார் பிரமையடைந்து போயிருந்தார். பிறகு நிதானித்துக்கொண்டு, ''உன்னை யார் இங்கே அனுப்பிச்சது? எப்படி வந்தே? அம்மா போகச் சொன்னாங்களா?'' என்றார்.

''யாரும் அனுப்பல்லே. நானாத்தான் வந்தேன். உங்க முகத்தைப் பார்த்து 'நீங்க இப்படிச் செய்யலாமா?' என்று கேட்கத்தான் வந்தேன். அம்மா சொல்லல்லே. பள்ளிக் கூடத்திலே படிக்கிறபையன்கள் அத்தனை பேரும் சொல்றாங்க.''

''என்ன சொல்றாங்க அவங்க அத்தனை பேரும்?''

''எத்தனை தடவை சொல்லணும் உங்களுக்கு? அம்மாவை ஏன் இப்படி விட்டுட்டீங்க? ஏன் இப்படிக் கல்யாணம் பண்ணிக்கிட்டீங்க? ஏன் இப்படி அநாதை மாதிரி நடுத் தெருவிலே விட்டுட்டீங்க? என்னை ஏன் இப்படி எல்லாரும் மரியாதை யில்லாமல் பேசும்படி விட்டீங்க...?''

பண்ணையாரின் பெரிய மீசை துடித்தது. ''மாரிமுத்து...'' என்று அந்த வீடு அதிரக் கத்தினார் பண்ணையார். மறு கணம் பெரிய முண்டாசும் மீசையுமாக ஓர் ஆள் அறையின் கோடியில் வந்து நின்றான்.

''உடனே வண்டி கட்டி இவனை அழைத்துக் கொண்டுபோய் டவுனில் விட்டுவிட்டு வா...'' என்றார் பண்ணையார்.

ஆத்திரம் வடிந்ததும் அவனும் கிளம்பத் தயாரானான். தன்மீது பிடிப்போ, பாசமோ இல்லாத தந்தை மீது அவனுக்கும் அந்த விதமான எண்ணங்கள் பிறக்கவில்லை.

பிற்பகல் இரண்டு மணி வெயிலில் வண்டியில் வந்து இறங்கும் பையனைப் பார்த்துத் தவித்தாள் தங்கம்மா. மணவாளன் இறங்கியதும், வண்டிக்காரன் சைக்கிளையும் உள்ளே கொண்டு வந்து வைத்துவிட்டுப் பெரியம்மாவைப் பார்த்து இரண்டு சொட்டுக் கண்ணீர் விட்டு விட்டு வெளியேறினான்.

''என்னப்பா இது? அங்கேயா போனே? எதற்கப்பா போனே? என்ன ஒரு வார்த்தை கேட்டியா? என்னடா இதெல்லாம்? யாரோ என்னவோ சொன்னாங்கன்னு உனக்கு என்னடா அதைப் பத்தி? நான் இல்லையா? நான் அதைத் தாங்குகிறபோது மத்தவங்களுக்கு என்னடா அதைப் பத்தி?'' என்று பொருமினாள் தங்கம்மா.

அப்பாவிடம் கேட்ட கேள்விக்கு அம்மாவிடம் விடை கிடைப்பதை அறிந்தான் மணவாளன். ''அம்மா! எனக்குத் தோன்றுகிறது. இந்த ஊரும், இந்த மனுஷங்களும், இந்த வாடையும் வேண்டாம்மா. நாம் எங்கேயாவது போயிடலாம்மா. நம்மைப் பார்த்துப் பிறர் சிரிக்காத இடமாகப் பார்த்துப் போகலாம்மா. உன்கிட்டப் பணம் இருக்காம்மா?'' என்று சரமாரியாகக் கேட்கும் மணவாளனைப் பார்த்ததும் அவன் புதிய பிறப்பு எய்திவிட்டதை அந்தத் தாயும் அறிந்தாள்.

---

கொடுமை இல்லா மலேயே தீமையை ஒழிப்பதற்கு நகைச் சுவையால்தான் முடியும்.

நகைச்சுவை என்பது உங்களைச் சிரிக்கச் செய்வதுதான் என்றாலும், உயர்தர நகைச் சுவை சிரிப்போடு ஒரு துளி கண்ணீரையும் வரவழைத்துவிடும்.

**பேரறிஞர் பெர்னார்ட் ஷா**

**ஆதாரம்:** 'பெர்னார்ட் ஷாவின் வாழ்வும் வாக்கும்'

**அனுப்பியவர்:** ஸ்ரீதரன்

---

கோவை மாநகரத்தை அடுத்த இடம். மணவாளனும் தாயும் மூன்றாவது மனிதருக்கு அறிவிக்காமல் அந்த ஊரை விட்டு அங்கே வந்து மாதக் கணக்கில் ஆகிவிட்டது. மணவாளன் இந்த ஊர்ப் பள்ளியில் சேர்ந்து விட்டான். வயதுக்கும் மீறிய சக்தி ஒன்று அவனுள் புகுந்துவிட்டது. எப்போதும் படிப்பு, படிப்பு, படிப்புத்தான். இந்தப் பெரிய உலகில் சின்னஞ் சிறு உள்ளத்தை அலைக்கழித்த அவமானத்தையும் ஏமாற்றத்தையும் மறக்க நினைத்தவனாகப் படிப்பில் தன்னையே அழித்துக் கொள்பவன் மாதிரிப் படித்தான்.

கோவையைச் சுற்றிலும் ஒரே ஆலைகள். அந்த ஆலைகளினுள் எல்லாம் ஆயிரக் கணக்கான யந்திரங்கள். மணவாளனின் மனம் புத்தகப் படிப்பை விட இயந்திர நுட்பங்களில் அதிகமாகச் சென்றது. ஆகவே பள்ளிப் படிப்பை முடித்துக் கொண்டவுடன் தொழில் நுணுக்கங்களை அறியும் வாய்ப்புடைய படிப்பை மேற்கொண்டான்.

அந்தப் படிப்பின் முடிவில் மணவாளனின் இருபத்தி ஒன்றாவது வயதில் காரின் பாகங்களையெல்லாம் மாற்றிப் போட்டுச் சரிபார்த்துக்கொண்டிருந்தவனின் மனத்தில் திடீரென்று ஒளி ஒன்று பாய்ந்தது. அந்த ஒளிக்கு அவன் உருவம் கொடுத்தபோது அது ஒரு நுணுக்கம் நிறைந்த யந்திரமாகப் பரிணமித்தது. அவன் செய்து கொண்டுவந்து காட்டிய 'மாடலை'ப் பார்த்துப் பிரமித்துப் போன அந்தத் தொழில் நுணுக்கப் பள்ளியின் தலைமை ஆசிரியர் அன்றைய தினமே அந்தவித இயந்திரத் தயாரிப்பில் ஈடுபட்டிருந்த கல்கத்தா கம்பெனிக்கு விவரம் தெரிவிக்க, மணவாளனை உடனே அங்கு அனுப்பி வைக்கும்படி அங்கிருந்து உத்தரவு வந்தது.

மணவாளனின் புதிய கண்டுபிடிப்பினால் ஒரே எட்டில் அவன் உயர்ந்தான். அவனை ஆதரித்த ஸ்தாபனமும் அவனால் உயர்ந்தது.

மீண்டும் ஐந்து வருஷங்களுக்குப் பிறகு இப்போது மணவாளன் அந்தக் கல்கத்தா கார்க் கம்பெனியின் சென்னை அலுவலகத்தில் ஒரு நிர்வாகி. தொழிலுலகில் இன்னும் எத்தனை எத்தனையோ சாதனைகளைச் செய்யத் துடிக்கும் இளைஞன். அவன் மனத்தில் இப்போது எங்கோ ஒரு சின்ன ஊரில் ஒரு குட்டி ராஜாவாகத் திகழ்ந்த விரிஞ்சிபுரம் பண்ணையார் இடம் பெற்றிருக்கவில்லை. இத்தனை பெரிய உலகில் அவர் எத்தனை சிறிய மனிதர் என்பதை அவன் புரிந்து கொண்டான்.

அவன் மனத்தை இப்போது முற்றும் ஆக்கிரமித்துக் கொண்டிருந்தது வெளி நாட்டுத் தூதரகத்தைச் சேர்ந்த ஓர் அதிகாரியிடமிருந்து அவன் வாங்கியிருந்த 'இம்பாலா'' கார். அதையும் அவன் சிறிது நாள் ஆசை கொண்ட மட்டும் விட்டுப் பார்த்து நம் நாட்டில் அந்த மாதிரிக் காரை ஏன் தயாரிக்க முடியவில்லை என்பதைத் தெரிந்து கொண்டதும் அந்தக் காரில் இருந்த ஆசையும் நீங்கி விட்டது. எதிலும் நிடித்து உறுதியுடன் மனத்தைச் செலுத்த முடியாத பருவம்.

காலை நேரம். மணவாளன் அலுவலகத்தில் நான்கு பக்கங்களும் கனமான கண்ணாடியால் மறைக்கப்பட்டிருந்த தனியறையில் அமர்ந்து வேலையில் மனம் ஒன்றியிருந்த நேரம்.

பையன் உள்ளே நுழைந்து அச்சடித்த விசிட்டிங் கார்ட் ஒன்றை மேஜையின் கோடியில் பவ்யமாக வைத்துவிட்டு வெளியேறினான். செய்து கொண்டிருந்த வேலையை முடித்துவிட்டு அந்தக் கார்டைப் பார்த்த மணவாளன் அது கார் புரோக்கர் ஒருவரின் பெயரையும் தொழிலையும் குறிப்பிடுவதாக இருப்பதைப் பார்த்துவிட்டு மணியடித்து அவரை உள்ளே அனுப்பச் செய்தான்.

கதவு திறந்ததும் புரோக்கரும் அவருடன் வயதான ஒருவரும் உள்ளே வந்து எதிரில் இருந்த நாற்காலிகளில் இருந்தனர். அந்தப் பெரிய மனிதர்....

மணவாளன் அப்படியே நாற்காலியில் ஆணியில் அறைபட்டவன் மாதிரி உட்கார்ந்துவிட்டான். யார் இவர்?...யாருடைய கண்கள் இவை? அதே மீசை... இந்த மீசை அவருடையதல்லாமல் வேறு யாருடையதாக இருக்கும்? பதின்மூன்று வருஷ இடைவெளி அந்த மனிதரை அப்படியொன்றும் அதிகமாக மாற்றிவிடவில்லை. கறுப்பாக இருந்த தலைமயிரும் மீசையும் அங்கொன்றும் இங்கொன்றுமாக நரை கண்டிருந்தது. உடல்வாகும் சற்று அதிகமாகச் சதைப் பிடிப்புடன் ஐம்பது வயதின் தன்மைக்கு ஏற்றவாறு மாறியிருந்தது.

புரோக்கர்தான் ஆரம்பித்தார். ''உங்ககிட்டத்தான் ஒரு வேலையாக வந்தோம். உங்ககிட்ட இருக்கிற 'இம்பாலா' வண்டி விஷயமா. அந்த வண்டியை இவங்க வாங்கப் பிரியப்படறாங்க...''

மணவாளன் இப்போது நன்றாக நிமிர்ந்து பார்த்தான். அவர் மணவாளனைக் கொஞ்சம்கூட அடையாளம் கண்டுகொள்ளவில்லை என்பதை அறிந்து அவன் தைரியமாக அவரை ஏறிட்டு நோக்கினான்.

''இவங்க விரிஞ்சிபுரம் பண்ணையாரு. தஞ்சாவூர் ஜில்லாவிலே பெரியவங்க. உங்க வண்டியை நேத்து பீச் ரோட்டிலே பார்த்துவிட்டு விசாரிச்சுட்டு எங்கிட்ட வந்தாங்க.''

மணவாளன் நிமிர்ந்து அவரை நோக்கினான். ''முதல்லே எனக்கு அந்த வண்டியை விற்கிறதாக நினைப்பே இல்லையே..''

''நீங்க எப்படியாவது மனசு இரங்கித்தான் ஆகணும். வண்டியை விற்கிறதாக நினைக்க வேண்டாம். எனக்காக மனம் இரங்கிக் கொடுக்கிறதாக நினைச்சுக்குங்க...''

''நாளைக்குச் சாயங்காலம் வீட்டுக்கு வாங்க. யோசிச்சுச் சொல்கிறேன்'' என்றான் மணவாளன்.

''அப்போ நாங்க உத்தரவு வாங்கிக்கிறோமுங்க... நாளைச் சாயங்காலம் வரோம்'' என்று விரிஞ்சிபுரம் கும்பிடு போட்டபடியே எழுந்தார்.

மறுநாள் மாலை. அம்மா கோயிலுக்குக் கிளம்பினாள். அம்மாவிடம் ஏதோ காரணம் சொல்லி, ஒரு டாக்ஸியைக் கொண்டுவரச் சொல்லி, சமையல்காரியின் துணையுடன்

அம்மாவை அனுப்பிவிட்டு, விரிஞ்சிபுரத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான் மணவாளன். காரைப் பற்றி அவரிடம் என்ன முடிவு சொல்வது என்று அவன் மனத்தில் இன்னும் தீர்மானமாகவில்லை. ஆனால் அவன் மனத்தில் தோன்றிய ஏதோ ஒரு வேகம் விரிஞ்சிபுரத்தை எவ்வளவு தூரம் ஆட்டி வைக்க முடியுமோ அவ்வளவு தூரம் ஆட்டி வைக்க வேண்டும் என்று சொல்லியது. அதற்குத் தன்னைத் தயார்ப்படுத்திக் கொண்டிருந்தான். அவர்களை வரச் சொன்ன நேரத்துக்கு முன்னதாக வாசலுக்கு வந்து காரை வெளியில் எடுத்தான். வேலைக்காரனிடம், "வெளியில் போய் விட்டு அரை மணியில் வந்து விடுகிறேன். என்னைத் தேடிக் கொண்டு இரண்டு பேர் வருவார்கள். அவர்களை வாசலில் உட்கார்த்தி வை" என்று சொல்லி விட்டுக் கிளம்பினான்.

ஒரு குறிப்பில்லாமல் கிட்டத்தட்ட ஒரு மணி நேரத்தைப் போக்கிவிட்டுத் திரும்பி வந்தான்.

குறிப்பிட்ட நேரத்தில் புரோக்கருடன் அங்கு வந்து காத்துக் கொண்டிருந்த விரிஞ்சிபுரம் பண்ணையார், மணவாளனின் கார் காம்பவுண்டுக்குள் நுழையும் அழகையும் கப்பல் கரையில் நிற்பதைப் போல் ஒய்யாரமாக அது வந்து நிற்கும் அழகையும் வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தவர், மணவாளன் காரிலிருந்து இறங்கி வராந்தாப் படி ஏறும் போது தம்மையறியாமலேயே எழுந்து நின்று பெரிதாகக் கும்பிடு போட்டு வரவேற்றார்.

"ஓர் அவசர வேலை, ரொம்ப நேரமாகக் காத்துக் கொண்டிருக்கிறீர்களோ... ஸாரி!" என்று சொல்லிக் கொண்டே வந்து உட்கார்ந்தான் மணவாளன். அவன் வயதுக் கில்லா விட்டாலும் அவன் உடைகளுக்காகவும் படிப்புக் கம்பீரத்துக்காகவும் உரிய மதிப்பையும் மரியாதையையும் சற்று அதிகமாகவே கொடுக்க விரும்பிய விரிஞ்சிபுரம் அவன் உட்காரும் வரை நின்று விட்டு அவன் உட்கார்ந்த பின்னர் தாமும் உட்கார்ந்தார்.

"எனக்கு அந்த வண்டியை விற்று ஒன்றும் ஆக வேண்டியதில்லை. எதற்கும் நாளைக்குக் காலையிலே வாங்க. அம்மாவையும் ஒரு வார்த்தை கேட்டு வைச்சுடறேன். அவங்களைக் கேட்காமல் நான் எதுவும் செய்யறதில்லை" என்று நறுக்கென்று பேசி அவர்களை அனுப்பி வைத்தான் மணவாளன்.

மறு நாள் காலை. சரியாக எட்டுமணிக்கு 'டாண்' என்று வந்து விட்டார் விரிஞ்சிபுரம். இன்று அவரை முன் பக்கத்து ஹாலுக்கு அழைத்துக் கொண்டு போனான் மணவாளன்.

சிறிது நேரத்தில் காப்பி வந்தது. அதைப் பார்த்த விரிஞ்சிபுரம், "இதெல்லாம் எதுக்குங்க? உங்களுக்கு நான் ரொம்பக்கடமைப்பட்டிருக்கேங்க. இந்த வண்டி என்னை அப்படிப் பண்ணிப்பிட்டது. ஒரு வேளை வண்டி-இல்லே, உங்களைப் பார்த்ததும்தானோ - எனக்கு ஒண்ணுமே புரியல்லே..... அம்மா சரின்னு சொல்லிட்டாங்க இல்லே.... அவங்களுக்கு என் நன்றியும் வணக்கமும்...." என்று சொல்லிக் கொண்டே போனார்.



"சாது, சார்! ஸ்மைல் ப்ளீஸ்!"

இதைக் கேட்டுக் கொண்டே உள்ளேயிருந்து வந்தாள் தங்கம்மா. வருஷங்கள் பல ஆனாலும் முதல் தடவை தங்கம்மாவின் சந்திப்பு அவர் மனத்தில் எத்தகைய வேகத்தை எழுப்பியதோ அதே வேகம் இப்போதும் அவர் மனத்தைத் தாக்கியது. ஒரு வழியாக அதிர்ச்சி நீங்கப் பெற்றுச் சுயநிலைக்கு வந்ததும், "நீயா....? நீயா...? தங்கம்மாவா? இதெல்லாம் என்ன? எனக்கு ஒண்ணுமே புரியல்லையே... இது நெஜம்மா ? நெஜம்தானா?" என்று தவித்தார்.

சற்றுத் தள்ளி நின்று விரிஞ்சிபுரம் பண்ணையாரை, அவர் முகத்தைப் பார்த்து விட்டு அழுதாள் தங்கம்மா. அவளுக்கு அழுகையை அடக்கிக் கொள்ள முடியவில்லை. கேவிக் கேவி அழுதாள். இருபது வருஷ வாழ்க்கையின் சோகத்தையெல்லாம் சேர்த்து வைத்து அழுதாள்.

விரிஞ்சிபுரம் தயங்கித் தயங்கி நடந்து அவள் அருகில் போனார். மணவாளன் என்ன சொல்வானோ என்ற பயத்துடன் "தங்கம்.. தங்கம்" என்று அவள் கைகளைப் பிடித்துக் கொண்டார். அவர் கண்களில் கண்ணீர் சொட்ட ஆரம்பித்தது.

கல்லாக இருந்த மணவாளனின் கண்களிலும் கண்ணீர் கசிந்தது.

"உட்காருங்க....." என்றாள் தங்கம்மா.

தம் இடத்தில் உட்கார்ந்த விரிஞ்சிபுரம் அங்கும் கால்களும் உடலும் தரிக்காமல் எழுந்து மணவாளனின் எதிரில் வந்து நின்று கொண்டார். "நீ என் மகனா? தங்கம், இது என் மகனா.....? இவன் என் மகனா.... ? இரண்டு நாளா அதான் இவனைப் பார்த்துப் பார்த்து மனம் மயங்கிற்று. ஆனால் இவன் என் மகனாக இருக்க முடியும் என்று நினைத்துக்கூடப் பார்க்கவில்லை. பரம்பரை பரம்பரையா ஐ.சி.எஸ். உத்தியோகம் வகிச்சவன் மாதிரி இவன் உடையையும் பேசற பேச்சையும், ஆபீஸ் நடத்தற அழகையும் பார்த்துப் பார்த்து மயங்கிப் போனேன். என் மகனா இத்தனை கெட்டிக்காரனாக இருக்கான்னு என்னுலே

நம்ப முடியலே தங்கம். எல்லாம் உன் வளர்ப்புத்தான். உன் வளர்ப்புத்தான்!''

இருபத்தி ஐந்து வருஷங்கள் கழித்துப் பார்க்கும் தகப்பனுரையும், தாயையும் தனிமையில் பேசவிட நினைத்த மணவாளன், ''அம்மா! எனக்குக் கொஞ்சம் வெளியே வேலையிருக்கு. போயிட்டு வந்துடறேன்....'' என்று விரிஞ்சிபுரம் பண்ணையாருக்கும் சேர்த்துச் சொல்லிவிட்டுக் கிளம்பினுன்.

''வெளியிலே கிளம்பிட்டியா?'' என்று அவன் பெயரைச் சேர்க்கக் கூச்சப்பட்டுக் கொண்டு மொட்டையாக விளித்தார் விரிஞ்சிபுரம் பண்ணையார்.

''ஆமாம்.....''

''தம்பி.....''

''உங்க லட்ச ரூபாய் எனக்கு வேண்டாம். ஒரு பைசாகூட வேண்டாம். காரை எடுத்துக்கிட்டுப் போங்க......''

''தம்பி.... எனக்குக் கார் வேண்டாம். நீ நல்லா இருக்கணும். அதுதாம்பா வேணும். உனக்கும் உன் அம்மாவுக்கும் எத்தனையோ கஷ்டங்களைக் கொடுத்திருக்கிறேன். எல்லாத்துக்கும் என்னை மன்னிச்சுக்கோப்பா. தம்பி, தங்கம்.... தம்பி, என்னை ஒரு தடவை அப்பான்னு கூப்பிடு. இல்லாட்டா என் மனசு சங்கடப்படும். நீ சொல்லு தங்கம்.''

இதுவரை முடிந்தவரை தன்னை அமைதியாக வைத்துக் கொள்ள முயன்ற மணவாளன் அந்தச் சொல்லைக் கேட்டதும் கொதித்து எழுந்தான். இருபது வருஷ ஆங்காரமும் சேர்ந்து அவன் வாயிலிருந்து சொற்களாக வெளி வந்தன. ''உங்களை அப்பான்னு கூப்பிடணுமா? எதற்காக? என்னைப் பெற்றுச் சீராட்டி வளர்த்து ஆளாக்கினீங்களே, அதற்கா? உங்களுக்குத் தெரியாது; இப்போ சொல்றேன். கேட்டுக்குங்க. என் வாய் திறந்து ஒரு தடவை அப்பான்னு உங்களைக் கூப்பிடணும்னு நீங்க இப்போ கெஞ்சறீங்க. என் சின்ன வயசிலே அந்த ஊரிலே இருக்கும் போது அப்பாங்கிற அந்த வார்த்தையை எத்தனை தடவை மனசுக்குள்ளேயே சொல்லிச் சொல்லிப் பார்த்துக்கிட்டிருப்பேன் தெரியுமா? வெளியிலே நாலு பேருக்கு முன்னுலே அந்தப் பெயரைச் சொல்லிக் கூப்பிட வழி இல்லாத குறையை எண்ணி எண்ணி ஏங்கி, எத்தனை நாள் ராத்திரி முழுதும் தலையணை நனைய அழுதிருக்கிறேன். தெரியுமா? அன்றைக்கு, 'டேய், மாரிமுத்து'ன்னு வீடு அதிரக் கூப்பிட்டு, 'இவனைத் தூக்கி வண்டியிலே போட்டு அந்த ஊரிலே கொண்டு போய் விடு'ன்னு சொன்னீங்களே அப்போ ஒரு பன்னிரண்டு வயசுப் பையனின் மனம் என்ன பாடுபட்டிருக்கும் என்று நீங்க அப்போவாவது அல்லது அப்புறமாவது நினைச்சுப் பார்த்திருக்களா? இப்போ மாத்திரம் உங்க மனம் என்ன பாடுபடும் என்று நான் எதற்கு நினைச்சுப் பார்க்கணும்? அதைப் பத்தி நான் நினைச்சுப் பார்க்கத் தயாராக இல்லை. இப்போ டிரைவரைக் கூப்பிட்டு நீங்க ஆசைப்பட்ட காரிலேயே உங்களை ஊருக்குக் கொண்டு விட்டு விடச் சொல்றேன். காரைத் திருப்பி அனுப்ப வேண்டாம். போய்ட்டு வாங்க.... உம்....'' என்று மூச்சு விடாமல் பேசிவிட்டு அவர் பதிலுக்குக்கூடக் காத்திராமல் அம்மாவிடம் திரும்பி, ''அம்மா, எனக்குக் கொஞ்சம் வெளியிலே வேலை இருக்கு. வர்றத்துக்கு நேரமாகும். போயிட்டு வரேன்.....'' என்று சொல்லிவிட்டு வெளியேறினுன் மணவாளன்.

மூந்நூறு வேலி நிலத்துக்கு அதிபதியாய், பிறந்ததிலிருந்து இந்த ஐம்பது வயது வரை யாருமே தம்மைத் தட்டிக் கேட்டுப் பழக்கமில்லாதவராய், தனிக் காட்டு ராஜாவாய், எதிரில் இருப்பவர்களின் வாயைக் குழைத்தலைத் தவிர வேறு எதையுமே காணுதவராய் வாழ்ந்து வந்த விரிஞ்சிபுரம் பண்ணையார், வாழ்க்கையில் முதன் முறையாகப் பெரிய அடியாக ஒன்றை முகத்தில் வாங்கிக் கொண்டு அப்படியே திக்பிரமையடைந்து போய், ஆணியடித்தது போல் நாற்காலியில் சாய்ந்து விட்டார். முதல் அதிர்ச்சி நீங்க; தம் சுய நினைவுக்கு வந்த போது, தாம் பெற்ற பிள்ளையிடமிருந்தே வாயினுல் வாங்கிய அடி உடலெங்கும் இன்பமூட்டும் வேதனையாகப் பரவ அன்று வரை அநுபவித்தறியாத பெருமையுடன் தங்கம்மாவைப் பார்த்து, ''அப்ப நான் போய்ட்டு வரட்டுமா, தங்கம்? உன்னைத் தாங்க முடியாத கஷ்டத்துக்குள்ளாக்கினதுக்கெல்லாம் என்னை மன்னிச்சுக்கோ.... ஆண்டவன் உன்னைக் கைவிட்டுவிட வில்லே. பிள்ளையா அவன்? அப்படியே ஆண்டவனே எதிரில் வந்து நின்னு, 'எலே, உனக்கென்னடா அப்படிப் பட்ட திமிரு'ன்னு பொட்டிலே அடிக்கிற மாதிரி இருக்குது. இந்நூறு வருஷமானுலும் மாத்த முடியாத என்னை அஞ்சு நிமிஷப் பேச்சிலே என்னென்னமோ சொல்லிக் கலங்க அடிச்சுட்டான். இப்போ மறுபடியும் அவனைப் பார்க்கவே எனக்குப் பயமாயிருக்கு. நான் வரேன்...... அந்த ஊரிலிருந்து ஒரு நாள் ஒருத்தரிடமும் சொல்லாமல் நீ போய்விட்ட போது, 'இனிமேல் அவர்களைப் பற்றிய சேதியே காதில் விழாமல் இருக்க வேண்டும்' என்று வேண்டிக்கிட்டேன்! தங்கம், மாங்கன்றை எங்கே நட்டாலும் அது மாம்பழத்தைத்தான் கொடுக்கும். கொடுக்காப்புளி மரத்தின் நிழலிலே எப்படி வளரும் இந்த மாங்கன்று? அதுதான் செடியை வேரோடு பேத்துக்கிட்டு வந்துட்டே. எனக்கு என்ன சொல்றதுன்னே தெரியல்லே. இப்போ தான்..... இத்தனை வருஷங்கள் கழித்து இப்போதான்..... இவன் பொட்டிலே அறைகிற மாதிரி பேசறதைக் கேட்டப்புறம்தான் என் மனசிலே படுது. கொடுக்காப் புளி மரத்தை விறகா உபயோகப்படுத்தறவங்க கூட, கையிலே எங்கியாவது முள் குத்திடப் போவுதேன்னு ஜாக்கிரதையாக எடுப்பாங்க. அதைப் பார்த்து அந்த மரம், 'எல்லாரும் எங்கிட்டே எத்தனை மரியாதையாக நடந்துக்கிறாங்க'ன்னு பெருமையா நினைச்சுக்கிற மாதிரிதான் இருந்தது. இத்தனை நாள் என் நிலையும்..... என் புத்திக்கே எட்டும்படி எப்படிப் பளிச்சுன்னு காண்பிச்சுட்டான்.....? அப்ப நான் வரேன்'' என்று எழுந்தார் விரிஞ்சிபுரம் பண்ணையார்.



# ஒரு வார்த்தை

## அன்னம்



தலை காடு மாதிரி வளர்ந்து கிடந்தது. சிராக்கிக் கொள்ள வேண்டும் என்று ஒரு வாரமாக நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் ஒன்று மாற்றி ஒன்று ஏதோ தடை வந்து கொண்டிருந்தது.

நாளைக் காலை முதல் வேலையாக முடி வெட்டிக் கொள்வது என்ற தீர்மானத்தை உறுதியாக்கிக் கொண்ட பின்னர், நான் இரவு படுத்துக் கொண்டேன். அந்தத் தீர் மானத்தைச் செயலாக்கும் பொருட்டு, இன்று காலை எழுந்தவுடன் காப்பிக்காகக் கூடக் காத்திராமல், 'நியூ இந்தியா ஏர் டிரஸர்ஸ்' பக்கம் என்னுடைய சைக்கிளைச் செலுத்தினேன்.

முதன் முதலாகப் போயிருப்பது நானாகத் தான் இருக்கும் என்று எண்ணியவனுக்கு ஏமாற்றம்தான் காத்திருந்தது. எனக்குமுன் மூன்று பேர் வந்திருந்தார்கள். என் முறை வருவதற்குக் குறைந்தது இன்னும் ஒரு மணி நேரமாவது ஆகும். 'இன்னொரு நாள் வருவோம்!' என்று நினைத்தபோது, சிவானந் தம் என்னைப் பார்த்து விட்டான்.

''எங்கே ஸார், திரும்பறீங்க?.... உட் காருங்க, ஒரே நிமிஷம்!'' என்றான். அவன் தான் முதலாளி, சிப்பந்தி எல்லாம்.

''இல்லையப்பா, இன்றைக்கு நேரமாகி விடும். இன்னொரு நாள்.....''

''அடுத்தபடி நீங்கதான் ஸார் !....'' என்றான் அவன்.

காத்திருந்தவர்கள் முகங்களில் கோபக் களை பரவியது. நான் தயங்கித் தயங்கி நின்றேன்.

''வாருங்கள் ஸார், பத்தாவது நிமிஷம் உங்களை வீட்டுக்கு அனுப்பிச்சிடறேன் '' என்றான்.

நானும் தைரியமாகப் போய் உட்கார்ந் தேன். காத்துக் கொண்டிருப்பவர்களுக்கு அவன் என்ன சமாதானம் சொன் னான் என்று எனக்குத் தெரியாது. ஆனால் அவன் ஆதிக்கத்தில் முகத் தைக் கொடுத்து விட்டு அமர்ந் திருந்த நபர் மட்டும், முகத்தில் காயம் இல்லாமல் விடுபோய்ச் சேர வேண்டுமே என்று கவலைப்பட்ட தாகத் தெரிந்தது.

அடுத்தபடி நான்தான். சிவானந் தத்தின் கைகள் சுறுசுறுப்பாக இயங் கின. 'முன்னால் வந்தவர்கள் முதலில் தான். பின்னால் வருபவர்கள் பின் னால்தான்!' என்று அடித்தாற்போல் சொல்பவனுக்கு என்மேல் இன்று மட்டும் ஏன் இத்தனை கரிசனம் என்று எனக்குப் புரியவில்லை.

'ஸ்னோ' பாட்டிலை எடுத்தவனை நான் கை அமர்த்தினேன். தேவை யில்லை என்று சொன்னேன்.

''உசத்தி ஸ்னோ ஸார்! சிங்கப்பூரி லிருந்து வந்தது!'' என்றான் சிவா னந்தம்.

''வேண்டாம்! எனக்குப் பழக்க மில்லை!'' என்று சொன்னேன்.

அத்தனை பேர்கள் காத்திருக்க என்னை வழியனுப்பச் சிவானந்தமே தெருவுக்கு வந்து விட்டான்.

''ஸார்!...ஒரு விஷயம் !'' என்று தொடங் கினான் அவன்.

நான் விழிகளை உயர்த்தினேன். இவன் எதற்கு இப்படி அடி போடுகிறான் என்பது விளங்கவில்லை.

''ஐயாவுடைய ஆ பி ஸி லே 'பியூன்' வேலைக்கு ஆள் எடுக்கிறாங்களாமில்லே... வர ஞாயிற்றுக் கிழமை ஏதோ பரீட்சை கூட வச்சிருக்காங்களாம். நம்ம கொளுந்தியா பிள்ளை ஒருத்தன் இருக்கான். அவன் நம்பர் 214ங்க... பார்த்துக்கிடுங்க... அவ்வளவு தான்...!''

எனக்கு அப்போது புரிந்தது. இத்தனை உபசாரமும் எதற்கு என்று திட்ட வட்ட மாகத் தெரிந்து விட்டது.

எங்கள் இலாகாவில் நடத்தப்படும் ஒரு பரீட்சை அந்த வார இறுதியில் நடக்க விருந்தது. அறுபது ஸ்தானங்களுக்கு அறு நூற்று ஐம்பது பேர் போட்டியிட்டார்கள். என் பதவி விசித்திரமானதொன்று. பொறுப்பு மட்டும் அதிகம் உள்ள ஒரு வேலை தான். ஆனால் அதிகாரம் மட்டும் இம்மியும் கிடையாது. வெளியிலிருந்து பார்ப்பவர் களுக்கு நான் நினைத்தால் எதுவும் செய்ய லாம் என்ற பிரமை ஏற்படும். ஆனால் உண்மையில் நான் ஒரு சுமைதாங்கிக் கல்லைத் தவிர, எந்த விதமான சலுகையும் யாருக்கும் காட்ட முடியாது.

''பரீட்சையில் பாஸ் செய்தால் தன்னால் வேலை கொடுக்கிறார்கள். நான் என்ன செய்ய முடியும் இதில்?'' என்றேன் நான் கடுமையாக.

''நீங்க செய்வீங்க ஸார். நிச்சயமாகச் செய்வீங்க.... பையன் நம்பர் 214. ஞாபகம்

இருக்கட்டும்!'' என்று சொல்லி அவன் மற்ற வர்களைக் கவனிக்க உள்ளே போய்விட்டான்.

வீடு திரும்பிய நான் குளித்துவிட்டுக் கூடத்துக்கு வந்தேன். அங்கே கமலப்பன் நின்று கொண்டிருந்தான்.

இந்த ஊருக்கு நான் மாற்றலாகி வந்தது முதல் சென்ற ஏழு வருஷங்களாக இவன் தான் என் துணிகளைச் சலவை செய்து கொண்டு வருகிறான். பத்து நாட்களுக்கு ஒரு முறை கொண்டு வந்து தர வேண்டு மென்று பேச்சு. ஆனால் அவன் மாதம் ஒரு முறை வந்தாலே அபூர்வம்.

அவனுடைய சுபாவம் அப்படி இருக்கும் போது, போன வாரம் போட்ட துணிகளை அவன் வெளுத்துக் கொண்டு வந்து நின்றால் எனக்கு ஆச்சரியமாக இருக்காதா?

''என்ன கமலப்பா! மழையைக் கொண்டு வந்து விட்டாயே!'' என்று கேட்டபடி வந்து நின்றேன்.

கணக்கில் ஒரு துணி கூடக் குறையவில்லை. ''பாண்ட்'' எல்லாம் கஞ்சி போட்டுக் கத்தி யின் கூர்மையுடன் இருந்தது.

''இந்தத் தடவைதான் நீ நிச்சயமாகத் துணிகளை வெளுத்திருக்கிறாய்!'' என்றேன்.

சலவைக்குக் கொடுக்க வேண்டிய பணத் தைக் கணக்குப் பார்த்து அவன் கையில் கொடுத்தேன்.

''ஒரு வருஷமாக நம்ம வீட்டில் சலவை செய்கிறேன்!'' என்றான் அவன்.

''ஆமாம், எனக்கு ஞாபகம் இருக்கிறது'' என்றேன்.

''போன வருஷம் பெண்ணுக்குக் கல்யா ணம் செய்தேன். ஐயா பத்து ரூபாய் எடுத்துக் கொடுத்தீங்க...''

''அதற்கு என்ன?''

''அந்தப் பெண்ணுக்குக் குழந்தை பிறந்து நல்லா இருக்குதுங்க.''

''ரொம்ப சந்தோஷம்.''

''அதே போல்...''

''சொல் அப்பா... ஏன் மென்று விழுங்கு கிறாய்?''

''என் பையன் ஒருத்தன் இருக்காங்க... மூன்றாவது பாரம் படித்திருக்கிறான்...கழுதை வேலை இல்லாமல் சுத்திக்கிட்டு இருக்கு. நம்ம ஆபீஸிலே ஆள் எடுக்கிறாங்களாமே... இழுத்துப் போடுங்க இந்தக் கழுதையையும். என்னங்க, அனுப்பி வைக்கட்டுமா? நம்பர் கூட மூந்நூத்தி மூணு...''

நான் திகைத்துப் போய் நின்றேன். ஆண் டவனே! என்ன சோதனை!

''கமலப்பா! என்மேல் நீ ரொம்ப நம் பிக்கை வைத்திருக்கிறாய்....இந்தப் பரீட் சைக்கும் எனக்கும் எந்தவிதச் சம்பந்தமும் கிடையாது. அதிகாரியாகப் பார்த்து நடத்து வது.... என்னை நம்புவதற்குப் பதில் ஆண்ட வனை நம்பு!'' என்றேன் அடி மனத்திலிருந்து.

''ஆபீசரு என்ன ஆபீசரு?... நீங்க சொன் னீங்கன்னு மாட்டேன்னு சொல்லப் போறாரு. சும்மா ஒரு வார்த்தை போட்டு வையுங்க ஸார்!... நீங்க உதவி செய்யலேன்னு, பின்னே நான் யார்கிட்டப் போறது?'' என்று அவன் உரிமையுடன் என்னையே அதட்டினான்.

''என்னால் ஒன்றும் முடியாது!'' என்று நான் திடமாக மறுத்தேன்.

''ஐயாவுக்கு நல்ல மனசு. எனக்குத் தெரியாதுங்களா?... நிச்சயம் செய்வீங்க... நம்பர் 303... ஞாபகம் வச்சுக்குங்க!'' என்று 'ஐஸ்' வைத்தான் அவன்.

அவன் போய் விட்டான். எனக்குத் தலை சுற்றியது.

''தபால்!'' என்ற குரல் கேட்டதும் என் பெண் விஜயா ஓடிப்போய்க் கடிதத்தை வாங்கி வந்தாள். கடிதத்தின் மேலுறையில் காணப்பட்ட கையெழுத்து பரிச்சயமானதாக இல்லை. ஆனால் என்னுடைய பெயரும் விலா சமும் தெளிவாகக் காணப்பட்டன. பிரித் துப் பார்த்தேன். யாரோ காட்டூர் பட்டாபி ராமன் என்பவர் எழுதியிருந்தார்.

''சிரஞ்சீவி ராகவனுக்கு, அநேக ஆசீர் வாதம்.

காட்டூர் பெருமாள் கிருபையால், நீ நல்ல தொரு பதவியில் சீரும் சிறப்புமாக இருப்பது பற்றி எனக்கு மிகவும் பெருமை. உன் தாயாரும் தகப்பனாரும் சௌக்கியமாக இருப் பார்கள் என்று நினைக்கிறேன். இவ்வளவு பக்கத்தில் நீங்கள் இருந்தும் உங்களைப் பார்க்க நான் வராதது என் உடல்நிலை காரணமாகத்தான். உன் தாயாரின் கல் யாணத்துக்கு வந்தவன் நான். அது முதல் யாரைப் பார்த்தாலும் உங்களைப் பற்றி விசாரித்துக் கொண்டிருக்கிறேன்.

நம் பண்ணையில் வேலை பார்க்கும் முத்தையன் மகன் சின்னையன் அங்கு ஏதோ பரீட்சைக்கு வருகிறானாம். நம்பர் 612 என்று சொன்னான். 'அதற்கென்ன? ராகவனுக்குக் கடிதம் எழுதுகிறேன், பார்த் துக் கொள்வான்!' என்று தைரியம்



சொல்லி யிருக்கிறேன். வாக்குக் கொடுத்து விட்டேன் என்று வைத்துக் கொள். இது உனக்கு மிக மிக அற்பமான காரியம். தட்டாமல் செய்வாய் என்று எனக்குத் தெரியும்.

உன் பிரியமுள்ள
காட்டூர் பட்டாபி

''யார் அம்மா, இந்தக் காட்டூர் பட்டாபி ?'' என்று என் தாயாரைக் கேட்டேன்.

அவளுக்குத் தெரியவில்லை. என் பாட்டியை விசாரித்தால், என்றோ மறைந்துபோன என் பாட்டனாருக்கு ஒன்றுவிட்ட அம்மான் மகனும் இவர்.

''இன்னும் காட்டூர் பட்டாபி உயிரோடு தான் இருக்கிறானா?'' என்று அதிசயித்தாள் என் பாட்டி.

''இருப்பதால்தானே என் உயிரை வாங்குகிறார் ?'' என்று நான் வெளிப்படையாகச் சொல்லவில்லை; நினைத்துக் கொண்டது என்னவோ உண்மை.

**வ**க்கீல் வாசுதேவன் தம் குமாஸ்தாவைத் தூது அனுப்பிப் பார்த்தார். கட்டுப் போட்டாலும் படிப்பு வராத அவர் பையனுக்கு வேலை வேண்டுமாம்! தப்பிப் பிழைக்க அன்று ஊரில் இருக்கமாட்டேன் என்று புளுகினேன்.

தெரிந்த அதிகாரி தாம் தப்பிக்க இன்ஸ்பெக்டர் ஒருவரை என்னிடம் அனுப்பி வைத்தார். அவரைப் பேசிச் சமாளித்து அனுப்பினேன். ஆனால் 'ஹோம்' டிபார்ட்மெண்டை அவ்வளவு எளிதாகச் சமாளிக்க முடியுமா?

**இ**ரவு படுக்கப்போகும் சமயம். மேஜை மேலிருந்த ''டைம்'' மணியைக் கரைத்தாகி விட்டது. வழக்கம் போல் ஒரு பக்கமாகத் தூங்கி வழிந்தபடி சுவரில் சாய்ந்திருக்கும் சீதாவைத் தேடினேன். இது என்ன புதுமை? நான் சொல்லாமலே என் படுக்கை விரிக்கப் பட்டிருந்தது. நான் கேட்காமலேயே வெற்றிலை மடித்து வைக்கப்பட்டிருந்தது. பல நாள் கதறிவிட்டு நானே செய்யும் வேலை—அதாவது விட்டுப் போயிருந்த பித்தான் களைச் சட்டையிலும் 'பாண்டி'லும் தைப்பது—சீதா அந்த வேலையில் ஈடுபட்டிருந்தாள்.

புத்தகம் ஒன்றை எடுத்துப் படிக்க எண்ணிப் பிரித்தேன். அடுத்தகணம் அதைத் தட்டிப் பறித்தது சீதா தான்.

''காலையிலிருந்துதான் உழைத்தாகி விட்டதே ! இன்னும் என்ன?'' என்று செல்லமாகச் சிணுங்கினாள். பிறகு, ''இன்றைக்கு நம் வீட்டுக்கு ஒருவர் வந்திருந்தார். யார் என்று சொல்லுங்கள், பார்ப்போம்!'' என்று புதிர் போட்டாள்.

''சுற்றி வளைக்காமல் விஷயத்துக்கு வா!'' என்று அதட்டினேன்.

பக்கத்து வீட்டுப் பரிமளா வந்திருந்தாளாம். என் கதைகள் எல்லாம் ரொம்ப நன்றாக இருப்பதாகச் சொன்னாளாம். போன வாரம் குஞ்சலத்தில் வந்திருந்த கதையைப் படித்து விட்டுக் கண்ணால் ஜலமே விட்டாளாம்!

என் கதையைப் பற்றிய பீடிகையைத் தொடர்ந்து வேறு ஒரு விஷயமும் வரும் என்பது எனக்குத் தெரியும். புதிதாக என்ன விஷயம்? பழைய கதைதான். 127ஆம் நம்பருக்காகச் சிபாரிசு. அவளிடம் எரிந்து விழுந்து என் வெறுப்பைக் காட்டினேன்.

இதே மாதிரி சைக்கிள் கடை 'பாய்', பெருமாள் கோயில் அர்ச்சகர், ஆபீஸ் 'ஆர்டர்லி' ஆகியவர்களும் ஒவ்வொருஆசாமியின் பெயரையும் நம்பரையும் சொல்லி என்னைக் கவனிக்கச் சொன்னார்கள். ஒரே தொந்தரவாய்ப் போய் விட்டது.

**ப**ரீட்சை முடிந்து விட்டது. ரிஸல்டும் வந்தாகிவிட்டது. மேலே சொன்னவர்கள் சிபாரிசு செய்த எவரும் தேர்வு பெறவில்லை.

ஒரு மாதம் ஓடி விட்டது.

தலை காடாக வளர்ந்திருக்கிறது. சலூன் பக்கம் போகப் பயப்படுகிறேன். சிவானந்தத்தின் ஆத்திரம் தீரட்டும் என்று என் தலையை அவனிடம் ஒப்படைப்பதா ?

போட்டுக் கொள்ளத் தகுதியாக ஒரு 'பாண்ட்'கூடச் சரியாக இல்லை. கமலப்பனைக் கண்ணிலேயே காணோம். காட்டூர் பட்டாபி என்னைத் திமிர்பிடித்த பயல் என்று திட்டியதாகச் செய்தி வந்திருக்கிறது.

வக்கீல் வாசுதேவன் எங்கள் இலாகாவைப் பற்றியும், முக்கியமாக என் மேற்பார்வையில் இயங்கும் பிரிவைப் பற்றியும் காரசாரமாகத் தலைமை ஆபீஸுக்குப் புகார்க் கடிதம் எழுதி அனுப்பியிருக்கிறார்.

போலீஸ் இன்ஸ்பெக்டர் என்னைப் பார்க்கும்போது கறுவுவதாகத் தெரிகிறது. சைக்கிளில் விளக்கு எரிகிறதா என்று ஒருமுறைக்கு மும்முறை பரீட்சித்துப் பார்த்துவிட்டுத் தான் இப்போதெல்லாம் ஏறுகிறேன்.

பழைய அமைதி எனக்கும் என் மனைவி சீதாவுக்குமிடையே நிலவ இன்னும் பல நாட்கள் ஆகும்.

என்ன செய்தேன் நான்? செய்யக் கூடாததை நிறைவேற்றச் சொன்னார்கள். இயலாது என்று உண்மையைச் சொன்னேன். அதற்கு இப்படி ஒரு தண்டனையா ? பகிஷ்காரமா ?

அநுபவஸ்தர் ஒருவரிடம் என் குறையை வெளியிட்டேன். ''நீங்கள் பிழைக்கத் தெரியாதவர்கள் ராகவன். 'ஆகட்டும், கட்டாயமாகச் செய்கிறேன்' என்று ஒரு வார்த்தை சொல்லியிருக்க வேண்டும். அப்புறம் செய்யா விட்டாலும்கூட உங்களைத் தப்பாக நினைக்க மாட்டார்கள். நீங்கள் முயன்றும் முடியவில்லை என்றுதான் சமாதானப்படுத்திக் கொள்வார்கள். உண்மை என்பது கசப்பானது. கண்ணாடிப் பாண்டம் போன்றது. ஜாக்கிரதையாகக் கையாள வேண்டும். 'பட்' என்று போட்டு உடைக்கலாகாது!'' என்று எனக்கு அவர் புத்தி சொன்னார்.

அந்த 'ஒரு வார்த்தை' — இல்லாததை இருப்பதாகச் சொல்ல—செய்ய முடியாததைச் செய்வதாக வாக்குறுதி அளிக்க — எனக்குச் சுயமாக வர மறுக்கிறது. இன்னும் ஏகப்பட்ட ஸர்வீஸ் எனக்குப் பாக்கி இருக்கிறது. சீக்கிரத்தில் கற்றுக் கொடுத்து விடுவார்கள் என்று நிச்சயமாக நம்புகிறேன் !




★ **எத்தனை முறை சிரித்தோம்?**

★ **தேர்தலில் சில தவறுகள்**

★ **பண்பாடற்ற செயல்**

சிவசக்தி'யின் 'நானனைவன்' என்ற கவிதையை நான் மிகவும் ரசித்தேன். சிறப்பான கவிதைக்கு வேண்டிய ஓர் உருவம் அதற்கமைந்துள்ளது. மரபு வழுவாத மாண்புடனும், கட்டான சொற்செட்டுடனும் கவிதை அமைந்துள்ளது.

சென்னை - 33 ''மகரம்''
25-2-67

கல்கி 5-2-67 இதழில் நாடகத்துக்குள் நாடகம் என்ற கட்டுரையைப் படித்தேன். கடைசியில் அந்த வாண்டுப் பயல் நாடகத்தைப் பார்த்தவர்கள் 425 தடவை சிரித்தார்கள் என்று சொன்ன பதிலை வைத்துக்கொண்டு இந்த நாடகத்தைப் பார்க்க வேண்டும் என்று தீர்மானித்தேன். வாண்டுப் பயல் சொன்னது உண்மைதானு என்பதை அறியக் கடந்த ஞாயிறன்று தாம்பரம் சங்கீத சபாவில் நடந்த நாடகத்துக்குச் சென்றேன். அன்று மாலை வீட்டிலேயே எண்ணிக்கைகளை எழுதிக் கொண்டு நாடகத்துக்குச் சென்றேன். நாடகம் ஆரம்பித்த சில வினாடிகளில் சிரிப்பு தொடங்க ஆரம்பித்தது. ஒன்று முதல் 570 வரை இலக்கங்கள் எழுதப்பட்ட தாளில் ஒவ்வோர் எண்ணுக அடித்து எண்ணிக்கையைக் கணக்கிட்டுக் கொண்டு வந்தேன். நாடகம் முடிவில் 504 தடவை ரசிகர்கள் சிரித்திருக்கிறார்கள் என்று தெரிந்தது. இதில் ஒரு முக்கிய விஷயம், மதராஸ் பாஷையில் மனோரமா பேசும்போது கிட்டத்தட்ட 60 தடவை ரசிகர்கள் சிரித்திருக்கிறார்கள் என்று குறிப்பிட விரும்புகிறேன். வாண்டுப் பயல் சொன்ன கணக்கை விட எனக்கு அதிகமாக வந்தபடியால் வாண்டுப் பயலின் சாமர்த்தியத்தை ரசிகனுகிய நான் பாராட்ட விரும்புகிறேன். இத்துடன் எண்ணிக்கை அடங்கிய தாளும் வைத்திருக்கிறேன்.

சென்னை—26
14—2—67 பி. எஸ். நரசிம்மன்

கல்கி ஜனவரி 22ந் தேதி இதழில் கே.எஸ். ஞானசம்பந்தம் என்பவர் வட்டமேஜைப் பகுதியில் டெலிபிரிண்டர்களின் விலைகள்பற்றி எழுதியுள்ளார். சரியான விலை விவரங்கள் பின்வருமாறு :

இந்துஸ்தான் டெலிபிரிண்டர்ஸார் தயாரிக்கும் டெலிபிரிண்டரின் விற்பனை விலை ரூ. 9,333 ஆகிறது. இதே போன்ற இயந்திரத்தை அயல்நாடுகளிலிருந்து தருவித்தால் வரிகள் நீங்கலாக ரூ. 13,395 ஆகும்.

சென்னை—32 டி. தாசரதி
9—2—67 கமர்ஷியல் மானேஜர்
ஹிந்துஸ்தான் டெலிபிரிண்டர்ஸ்

மயிலாப்பூர் தொகுதியிலும் வேறு சில இடங்களிலும் காங்கிரஸ் அபேட்சகர்களின் சார்பாக வாக்காளர்களுக்கு வோட்டுச் சாவடிக்கு எடுத்துச் செல்ல அடையாளச் சீட்டு தரப்பட்டது. இதில் காங்கிரஸ் சின்னத்தின் படம் அச்சடிக்கப்பட்டிருந்தது தேர்தல் விதிகளுக்கு முரண்பட்டதாகும்.

சென்னை
15—2—67 எம். நூருத்தீன்

வோட்டுச்-சாவடியில் மறைவிடம் ஒன்று தயாரித்து ரகசிய ஓட்டு என்ற முறையில் நடந்தாலும் இதில் ரகசியமே இல்லாதபடி ஆகிவிட்டது. வோட்டுச் சீட்டில் ஒரு நம்பர் இருக்கிறது. அதை நம் பெயருக்கு நேராக வாக்காளர் பட்டியலில் குறித்துக் கொள்கிறார்கள். இப்படிச் செய்தால் நாளைக்கு நாம் யாருக்கு வோட்டுப் போட்டோம் என்பது தெரிந்துவிடுமே?

அம்பத்தூர்
16—2—67 ஹேமாவதி

தங்கள் 19—2—67 இதழில், ''கல்லுக்குள் ஈரம்'' தொடர்கதையில் ''அலகாபாத்திற்கு அருகில் இருக்கும் சபர்மதி'' என்று குறிப்பிட்டிருக்கிறீர்கள். இது சரியல்ல. சபர்மதி குஜராத் தலைநகரான அகமதாபாத்துக்கு அருகில் இருக்கிறது.

நாஸிக் — 1
17—2—67 எஸ். ஸ்வாமிநாதன்

மூக்கில் காயமடைந்திருந்த பிரதமர் இந்திராகாந்தியவர்கள் சமீபத்தில் நிருபர்களிடையே பேசிக் கொண்டிருக்கும் போது, மூக்கைத் தம் சேலைத் தலைப்பால் மூடிக் கொண்டே ''முஸ்லிம் பெண்களிடம் முக்காடு (பர்தா) போடும் வழக்கம் ஏன் இருக்கிறது என்பது இப்போது தெரிகிறதா?'' என்று வேடிக்கையாகக் கேட்டுச் சிரித்தாராம். என்னதான் வேடிக்கையாக இந்த விஷயத்தை அவர் குறிப்பிட்டிருந்தாலும், முஸ்லிம் பெண்கள் அனைவரும் மூக்குடைபட்டிருப்பார்கள் என்றும், அவர்கள் தங்கள் விகாரத்தை மறைப்பதற்காக முக்காடு அணிகிறார்கள் என்றும் அர்த்தம் தொனிக்கக் கூறியிருப்பது எங்கள் உள்ளங்களை வெகுவாக நோகச் செய்துள்ளது! ஒரு நாட்டின் பிரதமர் இம்மாதிரி குறிப்பிட்ட ஒரு சமூகத்தினரின் பழக்கவழக்கங்களை வேடிக்கைக்கும், கேளிக்கைக்கும் உள்ளாக்குவது ரொம்பவும் பண்பாடற்ற செயலாகும்.

அரங்கக்குடி ஹஸன், ஜுனைதா,
19—2—67 பர்தா

---

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor: T. Sadasivam.

நீலநிற

புதியது!

# மாஜிக்

அபரிமித வெண்மையாக்கும் ஆற்றலுள்ளது

அந்நாளைய வெண்மை... அபரிமித வெண்மை!
மிளிரச் செய்தது ஒரேயொரு மாஜிக் சலவை




மாஜிக் பவுடரின் சக்தி செறிந்த துகள்கள் நொடிப்பொழுதிலே நீரில் கரைந்து செழிப்பான நுரையாகக் கொழிக்கிறது.

ஆம்- சாதாரண சலவைப் பவுடர்களினின்றும் மாறுபட்டது மாஜிக். அபரிமித வெண்மையளிக்கும் சக்தி வாய்ந்த மாஜிக். சலவையிலே அப்பழுக்கற்ற தூய்மை தருகிறது. சக்தி செறிந்த ஒவ்வொரு **மாஜிக்** துகளும் நொடிப் பொழுதிலே நீரில் கரைந்து, செயல்வேகமிக்க செழுமையான நுரை எழுப்புகிறது. அதனால் துணிகளுக்குப் பளிச்சிடும் வெண்மை, கண்ணைப் பறிக்கும் பொலிவு. இதன் காரணமாகவே, **மாஜிக்** என்று அழைக்கப்படுகிறது. வீட்டுச் சலவையை சுலபமாக்கும், சிக்கனத்திற் சிறந்த இந்த அற்புத சலவைப் பவுடர்- பருத்தி, பட்டு, கம்பளித் துணி, டெரீன், நைலான், வண்ண ஆடை...எதற்குமே தீங்கிழைக்காது **மாஜிக்** என்பதை மறவாதீர்கள்.

**டாடா தயாரிப்பு**

***மாஜிக் வெண்மை, மாஜிக் மெருகு, மாஜிக் புதுமை!***

CHTH-2-TH

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon




# பனாமா

ஒரு நல்ல சிகரெட்











கோல்டன் டுபாக்கோ கம்பெனி பிரைவேட் லிமிடெட், பம்பாய்-56
பாரதத்தில் இத்தகைய தேசீய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது

GT (P) 654 - C.Tam. Greens' Advtg.